# அம்மா

மூல ஆசிரியர் :

மாக்ஸிம் கார்க்கி

தமிழில் : முல்லை முத்தையா









மயிலாப்பூர் :: சென்னை-4.

# பாராட்டுரை

சோவியத் யூனியனின் தலைசிறந்த எழுத்துக் கலைஞனாக விளங்கியவன் மாக்ஸிம் கார்க்கி. கார்க்கியின் தலை சிறந்த படையல் அம்மா.

கலை – இலக்கிய உணர்ச்சி மென் மேலும் வளர்ந்துவரும் தமிழ் மக்களிடம், கடந்த இருபது ஆண்டுகளாக மென் மேலும் வளரும் அன்பையும் நன்மதிப்பையும் பெற்றுவரும் உலகப் பெரும் கலைஞர்களில் முதல் வரிசையில் முதலிடம் பெறுகிறவர் களில் ஒருவன் கார்க்கி.

சர்வ சாதாரண மக்களின் ஆத்மீக வாழ்வை கார்க்கிக்கு முன் உலக இலக்கியத்தில் யாரும் அவன் மாதிரி சித்தரித்துக் காட்டியதில்லை. லௌகிகச் சூழ்நிலையில் லட்சிய ஒளி விளக்கை, லட்சியப் பதாகையை வானளாவ உயர்த்தியவர் களின் சர்வ வல்லமையை பழமை – புதுமைப் போராட்டத்தை புதுமை பழைமையை வெல்லும் தவிர்க்க முடியாத தன்மையை கார்க்கிக்கு முன் யாரும் அவன் மாதிரி ஓவியம் தீட்டிக் காட் டியதில்லை. உளுத்துப் புழுத்து லொட லொட்டையாகி வரும் வாழ்வின் குரூர கொடூரத் தன்மைகளை கறந்த பால் கறந்த மேனியாகவும் நிதானமாகவும் சித்தரித்துக் காட்டியவர்களில் கார்க்கிக்கு நேர் நிகரான எழுத்தாளன் யாரும் இல்லை. சமு

தாய வாழ்வின் "அதல பாதாளம்" வரை சென்று பித்தலாட்டத்தின் நானாவித முகமுடிகளையும் ஈவிரக்கமின்றி 'தார்தாராக'க் கிழித்தெறிந்த எழுத்தாளர்களில் கார்க்கிக்கு ஈடு இணை யாருமில்லை. அதே பொழுதில் தொழிலாளியின் மகோன்னதமான சிருஷ்டித் திறனை – உலகத்தைச் சீரமைக்கவல்ல பேராற்றலை கைவந்த வண்ணம் படம் பிடித்துக் காட்டுவதில் கார்க்கிக்கு ஒப்பாருமில்லை, மிக்காருமில்லை.

கார்க்கி "மனிதன்" என்றொரு முக்காலத்திலும் எழுத்துலகை, ஒரு படி உயர்த்தவல்ல ஒரு கட்டுரை தீட்டியுள்ளான். அதில் அந்த இலக்கிய மேதை மனித மதிநுட்பத்தை வாயார வாழ்த்துகிறான்; அதில் மனிதன்தான் உலகத்தில் காணக் கிடக்கும் லௌகீக, ஆத்மீக மதிப்பீடுகளின் பிரம்மா என்று உச்சிமேல் வைத்து மெச்சுகிறான். நம் காலத்திய, இக்காலத்திய வீரன் "வாழ்வின் உண்மையான ஒரு தனித் தலைவன்; வாழ்வைக் கட்டிக் காப்பவன்தான்–வேறு சொற்களில் சொன்னால், தொழிலாளிதான்" என்று பறைசாற்றுகிறான்.

"அம்மா"வில் நடமாடும் வீரர் – வீராங்கனைகளெல்லாம் படைப்பாற்றல் மிக்க உழைப்பின் மகாத்மியத்தைப் பறைசாற்றுகிறார்கள். தொழிலாளி மக்கள் "வியர்வைத்துளி சிந்துவதின் மூலமாகத்தான் எப்பொருளும் ஆக்கப்படுகின்றன. குழந்தைகளின் விளையாட்டுப் பொம்மைகளிலிருந்து பூதாகாரமான யந்திரங்கள் வரையில் படைக்கப்படுகின்றன." தொழிலாளி மக்கள், சமுதாய வாழ்வின் எதிர்காலத் தலைவர்களாகத் தங்களைக் கண்டு கொள்கிறார்கள். அந்தப் புதிய வாழ்வில் விரோத – குரோதங்களுக்கு இம்மிகூட இடமிராது என்பதையும் தெரிந்து கொள்கிறார்கள். புத்துருவையும் புதிய மாறுதலையும் அளிக்கவல்ல உழைப்பாற்றல் பற்றிய உண்மை

உணர்ச்சியில்தான், பவலும் அவனுடைய தோழர்களும் ஊக்கம், உள்வலி ஆகியவற்றின் வற்ருத ஊற்றுக்கண்களைப் பார்க்கிருர்கள்.

இந்த உண்மை உணர்ச்சிதான் அவர்களுடைய கருத்துப் பிரசாரத்திற்குச் செவி சாய்க்க ஆயிரமாயிரம் இதயங்களின் கதவுகளைத் திறக்கிறது. அவர்களுடைய புதிய புரட்சிக் கருத்துக்களை மூலை முடுக்கு, இண்டு இடுக்குகளுக்கெல்லாம் கொண்டு செல்கிறது. மக்களின் விடுதலைப் போராட்டத்தைத் தயாரிக்கிறது.

ஏற்கனவே, கார்க்கியின் இந்த ஒப்பற்ற இலக்கியம் நண்பர் ப. ரா. வால் "அன்னை" என்றும், தோழர் ரகுநாதனுல் "தாய்" என்றும் ஆங்கிலத்திலிருந்து முழுவடிவில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. "அம்மா" மூலம் அன்பர் முல்லை முத்தையா சிறிய அளவில்—ஆனுல் கதைக்கோவை சிதையாமல், எளிய, இனிய நடையில், கார்க்கியின் நாவலைத் தமிழாக்கி, தமிழ் மக்களுக்கு அளிக்கிருர். அளவில் சுருங்கி விலையில் மலிந்து வெளிவருவதால் "அம்மா" ஆயிரக்கணக்கான தமிழ்மக்களின் கரங்களை அலங்கரிப்பாள் என்பதில் ஐயமில்லை.

இந்த நாவலையும் இது போன்ற உலகு புகழ் நாவல்கள் பலவற்றையும், இத்தகைய பதிப்பில் வெளியிட முன்வந்துள்ள முல்லை-முத்தையா, இன்ப நிலையத்தார் நன் முயற்சி வெற்றி மேல் வெற்றி சூடட்டும்.

4-7-56 — ப. ஜீவானந்தம்

# முன்னுரை

ரஷ்யப் பேரறிஞர் மாக்ஸிம் கார்க்கி தம்முடைய வாழ்க்கை முழுவதும் கலைக் கோட்பாடுகளை ஆராய்வதி லேயே கவனம் செலுத்திவந்தார். அவருடைய ரஸஞானக் கருத்துக்கள் மார்க்ஸ், லெனின் புரட்சிக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டவை. கார்க்கி தனக்குத்தானே கற்றுணர்ந்த மேதை. வாழ்க்கை ஆரம்பம் முதற் கொண்டே தொழிலாளர்களுடன் உறவுகொண்டிருந்தார்.

"இந்த உலகிலே துன்பம்தான் நிரம்பி இருக்கிறது. துன்பம் என்பது உலகத்திற்கே ஒரு அவமானம். அதை அறவே ஒழித்துவிட வேண்டும்" என்கிறார் கார்க்கி.

கார்க்கியின் பிரசித்திபெற்ற நாவலான 'அம்மா' வில் சொல்லப்பட்டிருக்கும் தொழிற்சாலை ரஷ்யாவைச் சேர்ந் ததுதான். அங்கே அப்பொழுது தொழிற்சாலைகள் இருந்த நிலைமையையும் தொழிலாளர்களின் துயரங்களை யும் எடுத்துக்கூற அந்த ஒரு தொழிற்சாலையே போது மானதாகும். அந்த தொழிற் சாலையில்தான் அதிக அளவு வேலை நிறுத்தமும் மறியலும் நடைபெற்றன. சரித்திரப் பிரசித்தமான அந்த நிகழ்ச்சிகளை ஆசிரியர் 'அம்மா'வில் பெரும் அளவில் கையாண்டிருக்கிறார்.

இதன் தமிழாக்கத்தில் எனக்கு உதவிபுரிந்த நண்பர் ஸ்ரீ. வி. எஸ். வெங்கடேசன் அவர்களுக்கும், அன்போடு பாராட்டுரை வழங்கிய பொதுவுடைமை வீரர் ப. ஜீவா னந்தம் அவர்களுக்கும் என் நன்றி.

— முல்லை முத்தையா

## 1. தந்தையும் மகனும்

தொழிற்சாலையின் சங்கு தினமும் ஊரே நடுங்கும்படி அலறும். தொழிலாளர்கள் அந்தச் சங்கொலியைக் கேட்டதும் பயத்துடன் 'ஆண்டைக்கு அடிமை பணிவது' போல, வீட்டை விட்டு அவசர அவசரமாக வெளிக் கிளம்புவார்கள். அதிகாலையில் குளிர்ச்சி மிகுதியாக இருக்கும். ஆனாலும் தொழிலாளர் முகங்கள், சரியான தூக்கமின்மையால் வாட்டமுடன் காணப்படும். குறுகிய தெருக்களில் அவர்கள் நடக்கும் போது எழும் புழுதி, அன்று அடிபணிந்து நிறைவேற்ற வேண்டிய வேலையை இடித்துக் காட்டும். உழைப்பை உறிஞ்சி திருப்தியற்றிருக்கும் இயந்திரங்கள் அவர்களை வரவேற்கக் காத்திருக்கும்.

மாலையில் சூரியன் மறையும் சமயம், தொழிலாளர் வீடுகள் சிவப்பு நிறமாகக் காணப்படும். தொழிலாளர்கள் அந்தச் சமயம், வெளியே தள்ளப்படும் சாம்பலைப்போல் தொழிற்சாலையிலிருந்து சோர்ந்து தள்ளாடி வெளியே வருவார்கள். அவர்கள் முகங்களில் புகை படிந்திருக்கும்.

உடம்பிலும் உடைகளிலும் எண்ணெய்க் கறை படிந் திருக்கும். காலையில் தொழிற்சாலைக்குப் போகும் சமயம் முணு முணுத்துக் கொண்டு சென்றவர்கள், மாலையில் அன்றையக் கடமை-உழைப்புத் தீர்ந்த ஒரு திருப்தியுடன் பேசிக்கொள்ளுவார்கள். ஓய்வைத் தேடி வீட்டை நோக்கி விரைவார்கள்.

விடுமுறை நாட்களில் காலை பத்துமணி வரை தூங்குவார்கள். கல்யாணமானவர்களாக இருந்தால் குழந்தைகளுடன், இருப்பதற்குள், நல்ல உடைகளை அணிந்து கொண்டு மாதா கோவிலுக்குப் போவார்கள். பிரார்த்தனை முடிந்து வீடு திரும்பியதும் சாப்பிட்டுவிட்டு மீண்டும் மாலை வரை படுத்து விடுவார்கள். வருஷக் கணக்காக வேலை செய்த அலுப்பு ஒன்று சேர்ந்து அவர்களுடைய பசியைக்கூட மந்திக்கச் செய்துவிட்டது. இருந்தாலும், அவர்கள் சாப்பிட்டு, மதுவைக் குடித்து வந்தனர். மாலையில் தெருக்களில் அவர்கள், ஒருவரை ஒருவர் கேலிசெய்து கொள்ளுவார்கள். பக்கத்து வீட்டுக் காரனைத் தான் மிஞ்ச வேண்டும் என்ற எண்ணத்தில் தன்னிடமுள்ள குடையை எடுத்துக்கொண்டு, பூட்ஸை அணிந்துகொண்டு நடமாடுவார்கள். ஒருவரை யொருவர் சந்தித்ததும் தொழிற்சாலையில் உள்ள தன் வேலையைப் பற்றியும், அங்கே மேஸ்திரியை எதிர்த்துச் சவால் விட்டதையும், இயந்திரங்களைப் பற்றியுமே பேசுவார்கள். ஒரு சிலர்தான் வேறு விதமான விஷயங்களைப் பேசு வார்கள். வீடு திரும்பியதும் மனைவியுடன் சண்டை போடுவார்கள். சிலர் கை வலி எடுக்கும் வரை மனைவி யைப் போட்டு அடிப்பார்கள். வாலிபர்கள், நண்பர்கள் வீட்டுக்கு விருந்துக்குப்போவதும் நாடோடிப்பாட்டைப் பாடுவதும், நடனமாடுவதும் குடிப்பதுமாகப் பொழுதைக் கழிப்பார்கள்.

இதே போலத்தான் மைக்கேல் வாஸாவ் என்பவனும் அங்கு வசித்து வந்தான். அவனுடைய முகம் எப்பொழுதும் சிடுசிடுவென்றிருக்கும். அவனது சிறு கண்கள் எவரையும் சந்தேக பாவத்துடனேயே பார்க்கும். கெட்ட எண்ணத்துடனேயே மற்றவர்களைப் புன்முறுவல் செய்வான். அந்தத் தொழிற்சாலையிலே பூட்டுகள் செய்பவர்களில், அவன்தான் மிகத் தேர்ந்தவன். அந்தக் கிராமத்திலேயே அவன்தான் பலசாலி. ஆனாலும் அவனுடைய மேஸ்திரி முதலான மேலதிகாரிகளுக்கு அவன் மீது வெறுப்பு. அந்தக் காரணத்தால் அவனுடைய ஊதியம் மிகவும் குறைவாக இருந்தது. ஒவ்வொரு விடுமுறை நாளிலும் எவனையாவது அவன் அடித்து விடுவான். அவனைக்கண்டு எல்லோரும் வெறுத்தார்கள்; பயந்தார்கள். அவனை அடித்து நொறுக்கிவிட வேண்டும் என்று பல தடவை பலர் முயற்சித்தனர். எல்லாம் வீணாயின. தன்னை அடிக்கத் திட்டம்போட்டிருக்கிறார்கள் என்பதை அவன் அறிந்தால் உடனே அவர்களை எதிர்த்து 'எவன் சாவதற்குத் தயாராக இருக்கிறானோ, அவன் என் முன்னால் வரட்டும்' என்று கர்ஜிப்பான். யாருக்குத்தான் தன்னுடைய உயிர்மீது ஆசை இராது ?

மைக்கேலுடைய மகன் பவலுக்கு, அப்பொழுது பதினான்கு வயதாகியிருந்தது ; ஒரு நாள் மைக்கேல் மகனுடைய தலைமயிரைப் பிடித்து இழுத்தான். ஆனால் மகன் சட்டென்று, ஒரு பெரிய சுத்தியலை எடுத்துக் கொண்டு 'ஜாக்கிரதை !' என்றான். 'என்ன ?' என்று பல்லைக் கடித்துக்கொண்டு கேட்டான் தகப்பன். 'அதுதான் !' என்று மகன் சுத்தியலைக்காட்டி பதிலளித்தான். பிறகு கறுத்த கண்களை அகல விரித்து கையிலிருந்த சுத்தியலை ஆகாயத்தில் விட்டெறிந்தான் பவல். தகப்பன் அவனை உற்றுப் பார்த்துச் சிரித்துக்கொண்டே போய்

விட்டான். அன்றிலிருந்து மைக்கேல் அதிகமாகக் குடிக்கத் தொடங்கினன். மனைவி வீட்டுச் செலவுக்குப் பணம் கேட்டால், 'உன் மகன் கொடுப்பான்' என்று சொல்லிவிடுவான். மகனுடன் மனஸ்தாபம் ஏற்பட்டு, அவன் இருந்த மூன்று வருஷங்களிலும் ஒரு முறை கூட மகனை ஏறிட்டுப் பார்த்தது கிடையாது. ஒரு வார்த்தை கூடப் பேசியதுமில்லை.

மைக்கேலிடம் ஒரு நாய் இருந்தது. அது அவன் தொழிற்சாலைக்குப் போகும்போதும், வெளியே சுற்றும் போதும் அவனுடனேயே திரியும். விடுமுறை நாட்களில் அவன் நாள் பூராவும் சுற்றுவான். அதுவும் அவனை விட்டுப் பிரியாமல் கூடவே சுற்றும். அதிக நேரம் கழித்தே வீடு திரும்புவான். மேஜை அருகில் அவன் வந்து உட்கார்ந்ததும் மனைவி சாப்பாட்டைக் கொண்டு வந்து வைத்துவிடவேண்டும். சாப்பிட்டதும், தட்டை எடுத்து வீசி எறிவான். மனைவி அதைப் பிடித்துக்கொண்டு சாராயப்புட்டியை மேஜை மீது வைக்க வேண்டும். அவனுடைய மனைவி நில்வோனு மிகவும் பொறுமைசாலி; அவனுடைய அக்கிரமங்களுக்கு எல்லாம் அவள் அடி பணிந்து வந்தாள். வாய்திறந்து ஒரு வார்த்தையும் சொல்லமாட்டாள்.

மைக்கேல் இறக்கும் போது மிகவும் கஷ்டப்பட்டே இறந்தான். ஐந்து நாட்கள் படுக்கையில் புரண்டு துடித்த வண்ணமிருந்தான். சில சமயம், 'கொஞ்சம் விஷமாவது கொடேன்' என்று மனைவியிடம் கெஞ்சுவான்.

நில்வோனு டாக்டரை அழைத்து வந்து மைக்கேலை பரிசோதிக்கச் செய்தாள். டாக்டர் பல வகையான வியாதிகளைக் கூறிவிட்டு, ஒரு ஆபரேஷன் செய்ய வேண்டும் என்றுர்.

“ நீங்கள் நாசமாய்ப் போக. நான் இப்படியே செத்துப் போகிறேன் ” என்றான் மைக்கேல்.

டாக்டர் போனதும், மைக்கேல் எதிரில் அவன் மனைவி கண்ணீர் விட்டபடி நின்றுகொண்டு, ஆபரேஷன் செய்து கொள்ளும்படி வேண்டிக் கொண்டாள். மைக்கேல் முஷ்டியை உயர்த்தி “ ஜாக்கிரதை, நான் குணமடைந்தால் முன்னைவிட அதிகமாக உன்னைத் துன்பப்படுத்துவேன் ” என்றான்.

அதிகாலையில், தொழிற்சாலையின் சங்கு அலறும் சமயம் மைக்கேல் இறந்தான். அவனுடைய மனைவி, மகன், நாய், குடிகாரனும் திருடனுமான அவனுடைய நண்பன் டேனியல், சில பிச்சைக்காரர்கள் ஆகியோர் மைக்கேலின் சவ அடக்கத்தின் போது கூட இருந்தனர்.

அவன் இறந்ததைக் குறித்து கிராமத்தில் சிலர் சந்தோஷம் அடைந்தனர். ‘ அவன் ஒழிந்ததே மேல் ’ என்றனர் சிலர். மற்றும் சிலர் ‘ அவன் இறக்கவில்லை, அவனை ஒழித்தார்கள் ’ என்றனர்.

மைக்கேல் இறந்து இரண்டு வாரம் கடந்திருக்கும். ஞாயிற்றுக்கிழமை யன்று பவல் நன்றாகக் குடித்துவிட்டு வீடுதிரும்பினான். மேஜையின் அருகில் உட்கார்ந்து தன் தகப்பனைப் போல், மேஜையைக் குத்தி ‘சாப்பாடு’ என்று கூவினான்.

அவன் அருகில் அவன் தாய் மௌனமாக வந்து உட்கார்ந்தாள். அவனது தலையை மார்மீது சாய்த்துக் கொண்டாள். அதை உடனே அவன் உதறித் தள்ளி “ அம்மா சீக்கிரம் சாப்பாடு ” என்றான்.

“ சீ, புத்தியில்லாதவனே ” என்று ஆசையோடு அவனைக் கடிந்துகொண்டு, அவனைச் சமாதானப்படுத்த முயன்றாள்.

“ நான் புகை பிடிக்கப் போகிறேன், அப்பாவின் சுக்கானைக் கொடு ” என்ருன். அவனுடைய நா குழறியது.

பவல் குடிப்பது அன்றுதான் முதன் முறை. சாராயம் அவனது உடம்பை பலவீனப் படுத்தியது. ஆனல் அவன் மனமோ “ குடி, குடி ” என்றது.

அன்னையின் பரிவு அவன் மனதைக் கலக்கிற்று. அவள் கண்ணீர் வடிப்பதைக் கண்ட அவனுக்கும் கண்ணீர் பெருகியது.

அன்னை, அவனது தலைமயிரைக் கோதிக்கொண்டே “ நீ என் இப்படிச் செய்தாய் ? நீ இப்படிச் செய்திருக்கக் கூடாது ?” என்ருள்.

அவன் மனம் சோர்வுகண்டது. அவனைப் பலவந்தமாக எடுத்துச் சென்று படுக்கையில் படுக்க வைத்தாள் தாய். பவலுக்கு எல்லாம் இருளாகக் காட்சியளித்தது. கண்கள் பலவந்தமாக மூடின. வாயில் ஒருவித கசப்புத் தட்டியது. கண்ணைத் திறந்து மெல்ல அன்னையின் முகத்தைப் பார்த்தான். “ மற்றவர்கள் குடித்தால் சந்தோஷமாக இருக்கிருர்கள்; எனக்கு இன்னும் வயதாக வேண்டும் போலிருக்கிறது ; என் மனம் சோர்வு அடைகிறது ” என்று எண்ணிக்கொண்டான்.

தொலைவிலிருந்து, ‘ இப்படிக் குடிப்பவன் எனக்கு எப்படிச் சோறு போடப் போகிருனே ’ என்ற அன்னையின் முணுமுணுப்பு அவன் காதில் விழுந்தது.

அவன் கண்களைக் மூடிக்கொண்டே, “ எல்லோரும் தான் குடிக்கிருர்கள் ” என்ருன்.

நில்வோன பெருமூச்சு விட்டாள். அவன்சொன்னது உண்மைதான்! அந்தப் பகுதியில் சாராயம் குடிப்பதைத் தவிர கண்டுகளிக்க வேறு ஒன்றுமே இல்லை. தவிர, அவர்களுக்கு சாராயத்தைவிட மேலானது எதுவும் இல்லை.

“நீ ஒன்றும் குடிக்க வேண்டிய அவசியம் இல்லை. உனக்கும் சேர்த்து உன் தகப்பனுர் குடித்துவிட்டார். எனக்கு எவ்வளவு கஷ்டம் கொடுக்க முடியுமோ அவ்வளவையும் கொடுத்துவிட்டார். உன் அன்னையிடம் கொஞ்சம் அனுதாபம் காண்பிக்க மாட்டாயா?” என்ருள்.

அன்னையின் வருத்தம் தோய்ந்த சொற்களைக் கேட்டதும் பவலுக்குத் தன் தகப்பனின் பழைய செய்கைகள் நினைவுக்கு வந்தன. தகப்பனின் வாழ்நாளில் தாய் கேட்பாரற்று இருந்தாள். மௌனமாகவும், எப்பொழுது அடிவிழப்போகிறதோ என்ற பயத்துடனும் இருந்தாள். தகப்பனுடன் சச்சரவு ஏற்படுவதைத் தவிர்க்க அவன் எப்பொழுதும் நேரம் கழித்தே வீடு திரும்புவான். பவல் கொஞ்சம் மனதைத் தேற்றிக்கொண்டு அன்னையின் முகத்தைப் பார்த்தான்.

உயரமாகவும் சற்று பருத்தும் இருந்தாள் நில்லோனு. வருஷக் கணக்காகப் பட்ட துன்பமும், கணவனிடம் பட்ட உதையும்அவள் உடலைப் பெரிதும் பாதித்திருந்தது. முகத்தில் சுருக்கமும் விழுந்திருந்தது. அவள் கண்களில் நீர் பெருகி வழிந்து கொண்டிருந்தது.

“அழாதே..... எனக்குக் குடிக்க ஏதாவது கொடு” என்ருன் பவல்.

“ஐஸ் தண்ணீர் கொண்டு வருகிறேன்” என்று சொல்லி எழுந்து சென்ருள் அன்னை.

கையில் தண்ணீர் டம்ளருடன் வந்து பார்த்தபோது, பவல் நன்ருகத் தூங்கிவிட்டான். அவனை எழுப்ப மனமின்றி டம்ளரை மேஜை மீது வைத்துவிட்டு, அவன் முகத்தையே பார்த்துக்கொண்டு நின்ருள் அன்னை.

## 2. மகனின் புதிய பாதை

மற்றவர்கள் போன வழியே பவலும் போகத் தலைப் பட்டான். புதிதாகச் சொக்காய், டை, கைப்பிரம்பு எல்லாம் வாங்கினான். மாலையில் நண்பர்களுடன் விசேஷமாக நடக்கும் விருந்து வைபவங்களுக்குப் போவான். நடனமாடவும் கற்றுக் கொண்டான். விடுமுறை நாட்களில் நன்ருகக் குடித்து வருவான். குடி மயக்கத்தில் இரவு படுத்தால், அதிகாலையில் எழுந் திருப்பான்.

ஒரு சமயம் அன்னை, "நேற்று சந்தோஷமாகக் கழிந்ததா ?" என்று கேட்டாள்.

"ஆமாம் செத்தால் போதும் போலிருந்தது. எல்லோரும் இயந்திரத்துக்குச் சமமாக இருக்கிருர்கள். மீன் பிடிக்கவோ, பட்சி வேட்டைக்கோ போயிருக் கலாம். துப்பாக்கி கூட வாங்க எண்ணிக் கொண்டிருக் கிறேன்" என்ருன் பவல் சலிப்புடன்.

வேலைக்குத் தினமும் சரியான நேரத்திற்குப் போய் வந்தான். அன்னையின் கண்களைப் போல அவனுக்கும் பெரிய கரு விழிகள் இருந்தன. அதில் ஒரு அதிருப்திக் குறி

காணப்பட்டது. கொஞ்சம் கொஞ்சமாக அவன் மற்ற வர்கள் போன வழியை மறக்கலானுன். நடனங்களுக்கும் விருந்துகளுக்கும் போவதை நிறுத்திக் கொண்டான். விடுமுறை நாட்களில் அவன் வீட்டில் தங்குவதில்லை; எங்கோ சென்று நேரம் கழித்தே திரும்புவான். ஆனுல் அப்போதெல்லாம் குடித்திருக்க மாட்டான். அன்னை அவனது செயலை உன்னிப்பாகக் கவனித்து வந்தாள். அவனுடைய கவனமெல்லாம் கூர்மையாக எதிலோ சென்றிருப்பதைக் கவனித்தாள். பழைய போக்கில் இல்லாமல் அவன் எதையோ தேடி அலைவது போலக் காணப்பட்டான்.

அவனுடைய பழைய நண்பர்கள் சில நாட்கள் அவனைத் தேடி வீட்டுக்கு வந்தார்கள். வீட்டில் அவன் இல்லாததைக் கண்டு அவர்கள் வருவதை நிறுத்திக் கொண்டார்கள்.

தன் மகன் மற்ற தொழிலாளர் பிள்ளைகளின் போக்கி லிருந்து மாறுபட்டிருப்பதைக் கண்டு அன்னை முதலில் சந்தோஷம் அடைந்தாள். ஆனுல், மகனின் புதுப்போக்கு அவள் மனதைக் கலக்காமலும் இல்லை. எந்த வழி போகிருன் என்பதே அவளுக்குப் புரியாமலிருந்தது.

தினந்தோறும் புத்தகங்கள் எடுத்து வரத் தலைப் பட்டான் பவல். அன்னைக்குத் தெரியாமல் அவற்றைப் படிக்க முயற்சித்தான். படித்து முடித்ததும் புத்தகத்தை மறைத்து வைத்து விடுவான். சில சமயம் சில பகுதிகளை காகிதத்தில் எழுதிக்கொண்டு அதையும் மறைத்து வைப்பான்.

ஒரு நாள் அன்னை, "உன் உடம்புக்கு ஒன்றும் இல்லையே?"

"இல்லை"

" ஏன் இளைத்து விட்டாய்?"

இதற்கு அவன் பதிலே சொல்லவில்லை.

தாயும் மகனும் அதிகம் பார்த்துக் கொள்ளுவதும் இல்லை. பேசுவதும் இல்லை. காலையில் அவன் மௌனமாக தேநீர் அருந்திவிட்டுத் தொழிற்சாலைக்குப் போவான். மத்தியானம் சாப்பாட்டிற்கு வருவான். சாப்பிடும் சமயம் ஏதாவது பேசுவான்; மாலையில் வீட்டுக்கு வந்ததும் கை கால்களைச் சுத்தம் செய்துகொண்டு சாப்பிடுவான். பிறகு புத்தகத்தை எடுத்துக்கொண்டு படிக்க ஆரம்பிப்பான். இரவு வெகு நேரம் கழித்தே அவன் படுக்கச் செல்வான்.

நாளுக்கு நாள் அவன், அதிக சுத்தமாகவும் சுறு சுறுப்புடனும் இருந்தான். முன்னிலும் பன்மடங்கு எளிமையாக நடக்கலானுன்.

ஒரு நாள் அவன், ஒரு சித்திரத்தைக் கொண்டு வந்தான். அதில் மூவர் மிடுக்காக நடந்து செல்வது போலிருந்தது. படத்தை அன்னையிடம் காட்டி, " இதோ இறந்த கிறிஸ்து உதயமாகியிருக்கிருர். மீண்டும் பிரகாசிக்கப் போகிருர் " என்ருன்.

அன்னைக்கு அந்தப் படம் மிகவும் பிடித்திருந்தது. " உனக்கு கிறிஸ்துவிடம் பக்தி இருக்கிறது. ஆனுல் நீ மாதா கோவிலுக்குப் போவதில்லையே " என்ருள் அன்னை.

மேலும் பல படங்கள் வரலாயிற்று. புத்தகங்கள் அதிகரித்தது போல் அலமாரிகளும் அதிகமாயின. பவலின் அறை மிகவும் அழகாகக் காணப்பட்டது.

அவன் அன்னையிடம் மரியாதையாக நடந்து கொள்ளத் தலைப்பட்டான். அரைகுறையாக '...ம்மா'

என்று அழைக்காமல் நன்ருக 'அம்மா' என்று கூப்பிடலானுன்.

அன்னையின் கவலை அதிகமாயிற்று. மகன் எந்தப் பெண்ணையாவது காதலிக்கிருனே என்று எண்ணிஞள். ஆனுல் காதல் விளையாட்டுக்கு முக்கியமாகப் பணம் வேண்டுமே! அவன் சம்பாதிப்பது அவ்வளவையும் தன்னிடமே கொடுத்து விடுவதால் அது சாத்தியமில்லை. பின், என்னதான் செய்கிருன்?...சாமியாராகி விட்டானு? அதற்குத் தகுந்த வயது இல்லையே? இப்படிப் பலவாருகச் சிந்தித்தாள் அன்னை. அவளுக்கு ஒரு வழியும் புலப்பட வில்லை.

நாட்கள் வாரங்களாகி, மாதங்களாகி கடைசியில் இரண்டு வருஷங்களும் கடந்து விட்டன. அன்னையின் கவலையோ குறைந்தபாடில்லை. மகனின் போக்கோ மாறவில்லை. அதற்குப் பதிலாக அவன் முன்னிலும் அதிக மாகப் படிப்பதும், எதையோ தேடி அலைவது போலவும் காணப்பட்டான்.

ஒரு நாள் இரவு சாப்பாடு முடிந்ததும் வழக்கம் போல் பவல், ஜன்னல் பக்கம் போய் திரையைச் சரியாக இழுத்துவிட்டு, அதனருகில் நாற்காலி போட்டு உட்கார்ந்து கொண்டான். தகர விளக்கை சற்று தூண்டி விட்டு மேஜை மீது வைத்தான். கையில் ஒரு புத்தகத்தை எடுத்துப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான். அந்தச் சமயம் அன்னை, மெல்ல ஓசை கேட்காத வண்ணம் நடந்து வந்து அவன் முன் நின்ருள். பவல் சட்டென்று தலையைத் தூக்கி அன்னையைப் பார்த்தான். அவன் பார்வை 'என்ன?' என்று கேட்பது போலிருந்தது.

"ஒரு விஷயம் உன்னிடம் கேட்க வேண்டும்! நீ என்ன படிக்கிருய்?" என்ருள் அன்னை.

"உட்கார் அம்மா" என்ருன். அன்னே உட்கார்ந்ததும் அவன், "சர்க்காரால் தடை செய்யப்பட்ட புத்தகங்களைப் படிக்கிறேன் ; தொழிலாளர்களின் துயரங்களைப் பற்றியும், அது எப்படி ஏற்பட்டது என்று கண்டறியவும் படிக்கிறேன்; உண்மையை நாடி அலேகிறேன்; இதனுல் சர்க்கார் என்னைக் கைது செய்யலாம். சிறையில் கூடத் தள்ளலாம்" என்ருன்.

அன்னே மிகுந்த கஷ்டப்பட்டு மூச்சுவிட்டாள். அவள் கண்களே அகலவிரித்து "நீ ஏன் அவற்றைப் படிக்கிருய் பவல்?" என்று கேட்டாள். அவள் கண்களில் திடீரென்று நீர் பெருகிற்று.

"அழாதே அம்மா, சற்று யோசித்துப்பார்: நீ எப்படிப் பட்ட வாழ்க்கை நடத்தியிருக்கிருய் ? அப்பா உன்னே அடித்தார் என்ருல் அதற்கு காரணம் அவர் அல்ல. அவரால் கஷ்டம் தாங்க முடியவில்லே. பிறர் அவரைத் துன்பப்படுத்திஞர்கள். அதை உன்னிடம் அவர் காட்டிஞர். அவ்வளவுதான். முப்பது வருஷங்கள் உழைத்தார். சாதாரண தகரக் கொட்டகையாகத் தொழிற்சாலே ஆரம்பிக்கப்பட்ட சமயம், அவர் வேலே செய்யத் தொடங்கிஞர். இப்பொழுது அந்தத் தொழிற்சாலே பல்லாயிரக் கணக்கானவர்களின் ரத்தத்தை உறிஞ்சும் அளவுக்குப் பெரிதாகி விட்டது" என்ருன்.

தாயின் கண்கள் நீரைச் சொரிந்தன. அவளே எவரும் அப்படிக் கேட்டதே இல்லே. எல்லோரும் தங்கள் கஷ்டம் பற்றிச் சொல்லுவார்கள். அவளும் தன் கஷ்டத்தைப் பிறரிடம் சொல்லுவாள். 'ஏன் கஷ்டப் படுகிருய் ? அதற்கு என்ன காரணம் ?' என்று யாரும் சொன்னதும் இல்லே. கேட்டதும் கிடையாது.

பவலும் முதல் பிரசங்கத்தை தன் அன்னையிடம் செய்து விட்டான். தான் அவ்வளவு தெரிந்து கொண்டிருக்கிறோம் என்று அவனுக்குப் பெருமிதம் ஏற்பட்டது. " உனக்கு சந்தோஷம் என்றால் என்ன என்று தெரியுமா? உனது பழைய வாழ்க்கை பற்றி நீ என்ன சொல்ல முடியும் ?" என்று கேட்டான் பவல்.

அவள் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். கஷ்டம் நிறைந்த அவளது வாழ்க்கையில் ஒரு சுடர் பிரகாசிப்பதுபோல் இருந்தது மகனுடைய கேள்விகள். ஒருபுறம் கவலையுடன் இருந்தாலும், மறுபுறம் அவள் சந்தோஷம் அடைந்தாள். சிறை, கைது என்று மகன் சொன்னது அவளுக்குக் கவலையைக் கொடுத்தது. ஆனால் அவன் நடத்தை மாறிவருவது கண்டு சந்தோஷம் அடைந்தாள்.

" அதைப் படித்து என்ன செய்யப் போகிறாய் ?" என்று கேட்டாள் அன்னை.

" முதலில் படிக்க வேண்டும் ; பிறகு, பிறருக்குச் சொல்லிக் கொடுக்க வேண்டும். தொழிலாளர்களாகிய நாங்கள், வாழ்க்கை ஏன் கடினமாக இருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் " என்றான்.

அவனுடைய நீலக் கண்கள் கூர்மையாகவும் உற்சாகத்துடனும் இருப்பதைக் காண அன்னைக்கு அளவில்லாத மகிழ்ச்சி. " மகனே உன்னை நாசமாக்கி விடுவார்கள் " என்று சொல்ல நினைத்தாள். ஆனால் பேசவில்லை. அவன் பேசுவதையே கேட்டுக்கொண்டிருக்க விரும்பினாள்.

" உண்மை தெரிந்தவர்கள் ஜனங்களுக்கு மிக முக்கியமாகத் தேவை. அப்படிப்பட்டவர்களை, அவர்களுடைய

எதிரிகள் சிறையில் தள்ளி விடுகிருர்கள்; தேசப் பிரஷ்டம் செய்கிருர்கள். அடிமை வேலைக்கு அனுப்பிவிடுவார்கள். அப்படிப்பட்டவர்களை நான் பார்த்திருக்கிறேன். உலகி லேயே அவர்கள் சிறந்தவர்கள்'' என்ருன் பவல்.

"அப்படியா?" என்ருள் அன்னை. அவள் மேலும் ஏதோ சொல்ல நினைத்தாள். சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு, "அதிக நேரமாகிவிட்டது, காலையில் வேலைக்குப் போக வேண்டும்; படுக்கப்போ'' என்ருள்.

"சரி, அம்மா, நான் சொன்னது நினைவிருக்கிறதா?''

"ஹூம்''

"நான் எங்கே போகிறேன், என்ன செய்கிறேன், என்பதைச் சொல்லிவிட்டேன். உன்னிடம் மன்ருடிக் கேட்டுக் கொள்கிறேன். என்மீது உனக்கு அன்பிருந்தால் என் வேலைகளில் நீ குறுக்கிடாதே.''

பவலின் கையைத் தன் கையில் எடுத்துக்கொண்டு, "எனக்கு இவை எல்லாம் தெரியாமல் இருந்தால் நன்ருக இருந்திருக்கும். போகட்டும், உன் வேலைகளுக்குத் தடையாக இருக்கமாட்டேன். உன்னைக் காப்பாற்றவே பக்கத்தில் இருப்பேன்'' என்ருள் அன்னை.

மேலும், சிறிது நேரம் இருவரும் மௌனமாக இருந்தனர். அன்னை மீண்டும், "கடவுள் உன் பக்கத் துணையாக இருப்பார். நான் எவரிடமும் பேசமாட்டேன். ஆனுல் நீ உன்னைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். ஜனங்கள் ஒருவரை ஒருவர் வெறுக்கிருர்கள். பொருமைப் படுகிருர்கள். அவர்கள் போக்கைக் கண்டு குறை கூறினுல் உடனே உன்னை ஒழிக்க முற்படுவார்கள்'' என்ருள்.

"ஜனங்களின் இந்தப் போக்கைக் கண்டு வருந்த வேண்டும். நாம் உண்மையைப் பூரணமாக அறியும் சமயம் ஜனங்களும் மாறிவிடுவார்கள்.........நான் சிறு பிராயத்தில் எதையும் கண்டு பயப்படுவேன். பெரியவனுகி விட்ட பிறகு எல்லோரிடத்திலும் வெறுப்பு ஏற்பட்டது. ஆனல் இப்பொழுது ஜனங்களைக் காணும்போது வேறு விதமாகத் தோன்றுகிறது. அவர்கள் துயரம்கண்டு என் மனம் இரங்குகிறது. என் மனம் நுட்பமாகிவிட்டது" என்ருன் பவல்.

"கடவுள் உன்னைக் காப்பாற்றட்டும். உன் பாதை மிகவும் அபாயகரமானது" என்ருள் அன்னை.

மகன் படுத்துத் தூங்கிய சமயம், அன்னை மெல்ல எழுந்து வந்து அவன் முகத்தைப் பார்த்தாள். அவள் கண்களில் நீர் பெருக்கெடுத்தது. கவலையுடன் அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள்.



## 3. ரகசியக் கூட்டம்

தாயும் மகனும் மௌனமாகவே நாட்களைக் கடத்தி வந்தனர். அன்று விடுமுறை நாள். பவல் வெளியே புறப்படத் தயாரானுன். அப்பொழுது "சனிக்கிழமை யன்று சிலர் இங்கே வருவார்கள்" என்ருன்.

"யார் அவர்கள்? எப்படிப்பட்டவர்கள்?"

"இந்தக் கிராமத்தைச் சேர்ந்தவர் சிலர்; மற்றும் சிலர் நகரத்திலிருந்து வருவார்கள்."

"நகரத்திலிருந்தா?" என்று கேட்டுவிட்டு அன்னை கண் கலங்கினுள்.

"ஏன் அம்மா? எதற்காக இப்படிக் கண்ணீர் பெருக்குகிருய்?"

அன்னை கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "என்னவோ சட்டென்று கண்ணீர் வந்துவிட்டது" என்ருள்.

பவல் குறுக்கும் நெடுக்குமாக அறையில் நடந்து, "நீ பயந்துவிட்டாயா?" என்று கேட்டான்.

" ஆமாம் பயந்துதான் போனேன்....நகரத்திலிருந்து சிலர் வருவதாகச் சொன்னுயே அவர்களைப் பற்றி எனக்கு என்ன தெரியும் ?"

பவல் குனிந்து அன்னையின் முகத்தைப் பார்த்தான். பிறகு கோபக் குரலில், " இந்தப் பயம்தான் நம்மைப் படுநாசமாக்கி விட்டது. நம்முடைய பயத்தைச் சிலர் பயன்படுத்திக் கொண்டு நம்மை மேலும் பயமுறுத்து கிருர்கள். நம்மீது குதிரை ஏறுகிருர்கள். பயந்தால் நாம் அழிந்தே போய்விடுவோம். இனித் தைரியமாக இருக்க வேண்டும். எது எப்படியாலுைம் அவர்கள் இந்த வீட்டிற்கு வந்தே திருவார்கள் " என்ருன்.

" நான் என்ன செய்வேன்? என் வாழ்நாள் பூராவும் பயந்தே காலம் தள்ளியிருக்கிறேன்."

" கோபமாகப் பேசியதற்கு என்னை மன்னித்துவிடு அம்மா " என்று கூறிவிட்டு பவல் வெளியே சென்று விட்டான்.

மூன்று நாட்கள்வரை, அன்னை மனதிற்குள்ளாகவே கவலைப்பட்டுக் கொண்டிருந்தாள். மகன் சொன்ன சனிக்கிழமையும் வந்தது. அன்று பவல் தொழிற்சாலையி லிருந்து வந்ததும் முகம், கை, கால்களைச் சுத்தம் செய்து நல்ல உடை உடுத்திக்கொண்டு அன்னை இருக்குமிடம் வந்தான். அன்னையின் முகத்தைப் பார்க்காமலே "அவர்கள் வந்தால் உட்காரச் சொல்லு; நான் சீக்கிரமே வந்து விடுகிறேன். அவர்கள் நம்மைப் போன்றவர்கள்தான். பயப்பட வேண்டாம்" என்ருன்.

கிட்டத்தட்ட மயக்கமுற்ற நிலையில் அன்னை நாற் காலியில் உட்கார்ந்தாள்.

வருத்தத்துடன் பவல் அன்னையை நோக்கினான். பிறகு, "நீ எங்காவது போய் வருகிறாயா?" என்று கேட்டான்.

"இல்லை. எங்கே போனாலும் ஒன்றுதான்" என்றாள் அன்னை.

நவம்பர் மாதம் முடிந்து கொண்டிருந்தது. எங்கும் பனி அதிகமாகப் பெய்து கொண்டிருந்தது. பவல் மேலும் அன்னையிடம் ஒன்றும் பேசாமல் வெளியே நடந்தான். பனியில் அவன் செல்லும் திசையைப் பார்த்துக்கொண்டு அன்னை உட்கார்ந்திருந்தாள்.

பனி பெய்யும் இருளில் அவ்வீட்டின் அருகில் பலர் போய்க்கொண்டும் வந்துகொண்டும் இருந்தனர். யாரோ ஒருவன் வீட்டின் அருகிலேயே வருவதுபோலவும் தென் பட்டது.

யாரோ ஒருவன் சீட்டி அடித்து ஒரு அருமையான இசையை ஆலாபனம் செய்வது போலிருந்தது. சீட்டி யடிப்பதிலிருந்து அவன் யாரையோ தேடுவது போலக் காணப்பட்டது. திடீரென்று சீட்டி சப்தம் நின்றது. வாசல் கதவருகில் வரும் காலடி ஓசை கேட்டது. கதவைத் திறந்துகொண்டு சற்று பருத்த மனிதன் உள்ளே நுழைந்து, "வந்தனம்" என்றான்

அன்னையும் பதில் வந்தனமளித்தாள்.

"பவல் இல்லையா?"

மேல் அங்கியைக் கழற்றிக்கொண்டே அவன், வீட்டைச் சுற்றிலும் பார்வையைச் செலுத்தினான். மேஜையினருகில் உட்கார்ந்துகொண்டு, "இது உங்கள் சொந்த வீடா, வாடகை வீடா?" என்று கேட்டான்.

அன்னை அவன் எதிரில் உட்கார்ந்துகொண்டு, "வாடகை வீடுதான்; பவல் இப்பொழுது வந்துவிடுவான்" என்றாள்.

வந்தவன் பல கேள்விகளைக் கேட்டுக்கொண்டே போனான். அதில் அன்னையின் நெற்றியில் இருந்த ஒரு வடுவைப் பற்றிய கேள்வியும் ஒன்று. அவன் கேள்விகளுக்கெல்லாம் பொறுமையாகப் பதில் சொல்லி வந்த அன்னைக்கு இதற்கு என்ன பதில் சொல்வதென்று தோன்றவில்லை. ஆத்திரமாக ஏதாவது சொன்னால் அது மகனுக்குத் தெரிந்தால் ஆபத்தாயிற்றே என்று பயந்தாள். அதனால் அந்தக் கேள்விக்கு சாந்தமாகவே பதில் அளித்தாள்.

"உன் பேச்சிலிருந்து நீ ரஷ்யன் இல்லை என்று தெரிகிறது. அப்படித்தானே ?" என்று அன்னையும் அவனை ஒரு கேள்வி கேட்டாள்.

"ரஷ்யனில்லைதான். உக்ரேனியாவைச் சேர்ந்தவன்."

"இந்தப் பக்கத்திலேயே அதிக நாட்களாக வசிக்கிறாயா ?"

"நகரத்தில் ஒரு மாதம் இருந்தேன். இங்குள்ள தொழிற்சாலைக்கு வந்து ஒரு மாதம்தான் ஆகிறது. இங்கு சிலர் நல்லவர்களாக இருக்கிறார்கள். உங்கள் மகன் பவல் அதில் முக்கியமானவன். இன்னும் சில நாட்கள் இங்கேயே இருப்பேன்" என்றான்.

மகனைப்பற்றி அவன் புகழ்ச்சியாகச் சொன்னது அன்னையின் மனதைக் கவர்ந்தது. "தேநீர் சாப்பிடுகிறாயா ?" என்று கேட்டாள்.

"எனக்கு மாத்திரமா ? வேண்டாம். எல்லோரும் வரட்டும்: பிறகு பார்க்கலாம்."

மற்றவர்களும் அவனைப்போலவே இருக்கவேண்டும் என்று அன்னை விரும்பினுள்.

மீண்டும் காலடிச் சப்தம் கேட்டது. கதவு திறக்கப் பட்டது. ஒரு கிராமத்துப் பெண் வந்தாள். "என் பெயர் நாட்ஷா, உங்கள் பெயர்?" என்று அன்னையைக் கேட்டாள்.

"நில்வோனு" என்ருள் அன்னை. அந்தப் பெண்ணும் அன்னையின் மனதைக் கவர்ந்துவிட்டாள்.

மீண்டும் கதவு திறக்கப்பட்டது. பழைய திருடன் டேனியலின் மகன் நிக்கோலாய் உள்ளே வந்தான். அவனைக் கண்டதும் அன்னை வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக்கொண்டாள். 'இவனுமா' என்று எண்ணினுள்.

இரண்டு வாலிபர்கள் வந்தனர். அவர்களில் ஒருவனை அன்னைக்குத் தெரியும். அவன் தொழிற்சாலை காவல்காரன் மகன் யாகோப்.

கடைசியில் பவல் வந்தான். "தேநீர் தயார் செய்து விட்டாயா அம்மா" என்ருன்.

தன் அபிமானத்தைக் காட்ட அன்னை, "கொஞ்சம் மது வாங்கி வரட்டுமா?" என்ருள்.

"அது தேவை இல்லை" என்று சொன்ன வண்ணம், பவல் தன் அங்கியைக் கழற்றினுன். அன்னையைப் புன் முறுவலுடன் பார்த்தான்.

"இவர்கள் எல்லோருமா சட்டத்திற்கு விரோத மானவர்கள்?" என்று அன்னை கேட்டாள்.

"ஆமாம்" என்ருன் சாவதானமாக.

'இருக்காது; சிறு குழந்தைகள் அல்லவா' என்று அன்னை எண்ணினுள்.

அன்னை எல்லோருக்கும் நேரே கொடுத்தாள்; அருந்திய பிறகு, எல்லோரும் விளக்கு ஒளியில் அமர்ந்தனர். படங்களுடன் கூடிய ஒரு புத்தகத்தை நாட்ஷா பிரித்தாள். கடகடவென்று படித்துக் கொண்டே போனாள். சில சமயம் புத்தகத்தில் இல்லாதவற்றையும் தனியே சொல்லி வந்தாள். நாட்ஷாவின் குரல் மிகவும் இனிமையாக இருந்தது. சொற்களைக் கணீர் என்று உச்சரித்தாள்.

இடை நடுவில் வாக்குவாதமும் ஏற்படும்; பிறகு மௌனம் நிலவும்.

"சிலர், எது சரியானது என்று தெரிந்து கொள்ள நினைக்கிறார்கள். தெரியாதவர்களுக்கு உண்மை எது என்று சொல்லவேண்டும். எது உண்மை, எது தவறானது என்று நாமும் தெரிந்துகொள்ள வேண்டும்" என்று சொன்னாள் நாட்ஷா.

பவல் எழுந்தான், "நமக்குத் தேவையானதைப் பெற்றால் போதுமா?...இல்லை, நாம் மனிதர்களாக வாழ வேண்டும். நம்மீது குதிரை சவாரி செய்பவர்களுக்கு, நாம் எல்லாவற்றையும் தெரிந்து கொண்டோம் என்பதைக் காண்பிக்க வேண்டும். நாங்கள் மூடாத்மாக்கள் அல்ல; மிருகமும் அல்ல. வெறும் சோறு மட்டும் எங்களுக்குத் தேவை இல்லை. ஆனால் நாங்களும் மற்றவர்களைப்போல வாழ விரும்புகிறோம். நம்மை எவ்வளவு கஷ்டப்படுத்தினாலும் நம்முடைய லட்சியத்தை நாம் அடைந்தே தீருவோம் என்பதை நமது எதிரிகளுக்கு உணர்த்த வேண்டும்" என்றான்.

அன்னை மௌனமாக மகனின் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

"வயிறு நிறைய உண்பவர் சிலர்தான்; ஆனால் தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்பவன் எவனுமில்லை. தன்மானத்தைக் காக்க நாம் முற்படவேண்டும். அப்படிப்பட்டவர்களைத் தயார் செய்யவேண்டும்" என்றான் உக்ரேனியன்.

மீண்டும் விவாதம் ஆரம்பித்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் அது அடங்கிவிட்டது.

இரவு வெகுநேரம் ஆகிவிட்டது. எல்லோரும் கலைந்து செல்லத் தீர்மானித்தனர். நாட்ஷா கிளம்பும் சமயம், "இவள் என்ன செய்கிறாள்?" என்று பவலிடம் கேட்டாள் அன்னை.

"உபாத்தியாயினியாக இருக்கிறாள்" என்றான் பவல்.

"அவள் உடுத்தியுள்ள உடையைப் பார்த்தால் உடனே ஜலதோஷம் பிடித்துக்கொள்ளும் போல இருக்கிறதே. அவளுடைய பெற்றோர் எங்கு இருக்கின்றனர்?"

"மாஸ்கோவில் இருக்கிறார்கள். பெரிய பணக்காரக் குடும்பம். அவளுடைய தந்தை இரும்பு வியாபாரம் செய்கிறார். இந்தக் கூட்டத்தில் சேர்ந்ததற்காக அவளுடைய தகப்பனார் அவளை வீட்டை விட்டுத் துரத்தி விட்டார். சுகமாகத்தான் வாழ்ந்து வந்தாள். ஆனால் இப்பொழுது நான்கு மைல் நடந்து செல்லுகிறாள்" என்றான் பவல்,

அன்னை திடுக்கிட்டாள். "அவள் நகரத்திற்கா போகிறாள்?"

"ஆமாம்."

"பயமில்லையா?"

" இல்லை " என்று சிரித்துக்கொண்டே கூறினன் பவல்.

" இரவு தங்கிவிட்டு நாளைக் காலையில் போகக் கூடாதா ?"

" யாராவது பார்த்து விடுவார்கள். நாங்கள் அதை விரும்பவில்லை."

" எனக்கு ஒன்றுமே புரியவில்லை பவல். நீங்கள் என்ன தவருக நடக்கிறீர்கள் ?...ஏன் தவருனதைச் செய்கிறீர்கள் ?"

" தவருன வழிக்கு போகவும் மாட்டோம்; செய்யவும் மாட்டோம். ஆனலும் சிறை எங்களை அழைக்கிறது."

" கடவுள் உங்களைக் காப்பாற்றட்டும் " என்று சொல்லிக் கொண்டே அன்னை படுக்கச் சென்று விட்டாள்.

## 4. ஊருக்குள் வதந்தி

ஒவ்வொரு சனிக்கிழமையும் கூட்டம் தொடர்ந்து நடைபெற்று வந்தது. புதிய மனிதர்கள் பலர் வந்த வண்ணம் இருந்தனர். பவலின் இந்தச் சிறிய வீடு நிரம்பி விட்டது. ஒவ்வொரு கூட்டமும் அவர்களை ஒரு படி உயர்த்தியது ; ஆனால் சிகரம்தான் தெரிந்தபாடில்லை.

ஒரு நாள் கூட்டத்தில், சாஷா என்ற யுவதி முதன் முதலில், "நாம் பொதுவுடமை வாதிகள்" என்றாள். அவள் குரலில் காம்பீர்யம் இருந்தது.

அன்னை இது கேட்டு சாஷாவின் முகத்தை உற்றுப் பார்த்தாள். ஆனால் சாஷா தன் கண்களை மூடிக்கொண்டு முன்னிலும் உறுதியான குரலில் "நமது சக்திகள் அனைத்தையும் புது வாழ்க்கைக்குப் பயன்படுத்த வேண்டும் ; இதற்காக நமக்குப் பிரதிப் பிரயோஜனம் கிடைக்காது என்பதை உணரவேண்டும்" என்றாள்.

பொதுவுடமை வாதிகள்தான் முன்பிருந்த ஜார் சக்ரவர்த்தியைக் கொன்றவர்கள் என்பது அன்னைக்குத் தெரியும். அது, அவள் இளமையாயிருக்கும்போது நடந்தது. விவசாய அடிமைகளை நிலச்சுவான்தார் பிடிப்பி

லிருந்து விடுவிக்க ஜார் சக்ரவர்த்தி உத்தேசித்து அதற்கான சட்டத்தை இயற்றி உத்திரவு பிறப்பித்தார். அதைக் கண்ட நிலச்சுவான்தார்கள் வெகுண்டு, ஜார் சக்ரவர்த்தியை ஒழிக்காமல் தங்கள் முடிகளைக் கத்தரிப்பதில்லை, முகச் சவரமும் செய்து கொள்வதில்லை என்ற சபதம்கொண்டனர். அவர்களுடைய கட்சி பொதுவுடமைக் கட்சி என்று அப்போதிருந்தவர்கள் சொல்லிக்கொண்டனர். தற்சமயம் தன் மகனும் மற்ற தோழர்களும் தங்களைப் பொதுவுடமை வாதிகள் என்று கூறிக் கொள்வதை அவளால் புரிந்துகொள்ள முடியவில்லை.

கூட்டம் முடிந்து எல்லோரும் போன பின்பு பவல் தனியாக இருந்தான்.

“பவல் நீ பொதுவுடமையாளனா?” என்றாள் அன்னை.

“ஆமாம். ஏன்?” என்றான்.

அன்னை ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள். பார்வையைத் தாழ்த்திக் கொண்டு “அப்படியா? பொதுவுடமையாளர்கள்தானே முன்பு ஜார் அரசனைக் கொன்றார்கள்? அவருக்கு விரோதி!” என்று கேட்டாள்.

பவல் புலியைப்போல் இப்படியும் அப்படியும் உலாவிக்கொண்டே “நாங்கள் அப்படிச் செய்யவேண்டியதில்லை” என்றான்.

அவன் சொன்னது அன்னைக்குச் சமாதானமாக இருந்தது. தன் மகன் கொலைகாரத் தொழிலில் ஈடுபட மாட்டான் என்று நம்பினாள்.

அடிக்கடி கூட்டம் நடந்து, பல புதிய மனிதர்கள் வந்துகொண்டிருந்தனர். அதனால் அன்னையின் மனதில் தைரியமும் நம்பிக்கையும் ஏற்பட்டது. அவர்கள் படிப்

பதையும் விவாதிப்பதையும் கேட்டு, உண்மை வானமண்டலத்தின் இருளைக் கிழித்துக்கொண்டு சூரியன் உதயமாவது போல் தெரியலாயிற்று.

கூட்டங்கள் நடப்பதுடன் நிற்கவில்லை. தினமும் பவல் வேலை செய்யும் தொழிற்சாலையிலிருந்தும் அவனது தோழர்கள் வரத் தலைப்பட்டனர். கை கால்கள் சுத்தம் செய்ததும் பவல் தன் தோழர்களுடன் செய்திப் பத்திரிகையோ, புத்தகமோ படிக்கப் போய்விடுவான்.

உக்ரேனியனிடம் அன்னைக்குத் தனி அன்பு இருந்தது. அவன் தனியாக அதே கிராமத்தில் வசிப்பதைக் கண்டு அவனைத் தன் வீட்டிலேயே இருக்கச் செய்ய நினைத்தாள். தன் மகனிடமும் விவரத்தைச் சொன்னாள். அவன் இருந்தால் பவலுக்கு உதவியாக இருக்கும் என்று கூறினாள்.

மறுநாளே உக்ரேனியன் அவ்வீட்டில் குடியேறினான்.

அந்தச் சிறிய வீடு பலருக்குச் சந்தேகத்தைக் கொடுத்தது. பலர் பலவிதமாகப் பேசத் தலைப்பட்டனர். பல வதந்திகளும் கிளம்பின. அந்த வீட்டினுள் அடங்கியிருக்கும் ரகசியத்தை ஜனங்கள் ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்கலானார்கள்.

ஒரு நாள் தெருவில், சத்திரக் காவல்காரக் கிழவன் அன்னையைச் சந்தித்தான். "சௌக்கியமா? உன் மகன் சௌக்கியமா? உன் மகனுக்குக் கலியாணம் செய்து விடுவதுதானே? கலியாணமானால்தான் வாழ்க்கையின் பொறுப்புத் தெரியும். மாதா கோவிலுக்குப் போவதையே வாலிபர்கள் நிறுத்திவிட்டார்கள். ரகசியமாகக் கூடிப் பேசுகிறார்கள். என்ன ரகசியமோ எனக்குத் தெரியவில்லை" என்றான் அவன்.

தொழிற்சாலைக்கு உணவு எடுத்துச் சென்று விற்கும் விதவை மரியாவை அன்னை சந்தித்த சமயம், “உன் மகனைப் பற்றியே எங்கும் பேச்சாக இருக்கிறது. நல்ல படியாகப் பேசினால் பரவாயில்லை. மிகவும் கீழ்த்தரமாகப் பேசுகிறார்கள். அவன் ஏதோ சங்கம் அமைப்பதாக வும், அதற்கு ஏதோ பெயர் என்றும் சொல்லிக்கொள்ளு கிறார்கள். பூச்சிகளை நசுக்குவதைப்போல் நசுக்கிவிடப் போகிறார்கள்......” என்றாள் மரியா.

“உளராதே” என்றாள் அன்னை.

“நான் உளரவில்லை; என் காதில் விழுந்ததைச் சொன் னேன். அவ்வளவுதான்” என்று சொல்லி அவள் போய் விட்டாள்.

இவை அனைத்தையும் மகனிடம் அன்னை கூறினாள். அவனைக் கலியாணம் செய்து கொள்ளும்படி கேட்டுக் கொண்டாள்.

அதைக் கேட்ட உக்ரேனியன் சிரித்தான். சாவதான மாக “அவர்களுக்கு என்ன தெரியும்? கலியாணம் செய்து கொள்ளுவது ஒன்றுதான் அவர்கள் கண்டது” என்றான்.

அலெக்ஸி ஐவானேவிச், ‘மனிதன் தனக்கு முக்கிய மானதை எல்லாம் பெற்று பூரண வாழ்வு வாழ வேண்டும்’ என்று சொல்லியிருக்கிறார்; நீயும் காதலித்தவளை மணப்பதுதானே?” என்றான் உக்ரேனியன்.

“அது நமக்கு இல்லை. கலியாணம் செய்து கொண் டால் உன் கடமையை நீ செய்ய முடியாது. எதிர் காலத்தில் உனக்கு நம்பிக்கை இருந்தால் நீ எல்லா சுகத்தையும் இழக்க வேண்டியதுதான்” என்றான் பவல்.

"பாதி மனம் காதலிக்கிறது; பாதி மனம் வெறுக்கிறது. இது என்னடா மனம்!" என்ருன் உக்ரேனியன்.

"அது இருக்கிறபடி இருக்கட்டும். நீ உன் வேலையைப் பார்!" என்று சொல்லிவிட்டு பவல் ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்கினுன்.

அன்னை அவன் பேச்சைக் கேட்டு கண்ணீர் வடித்த வண்ணம் படுக்கையில் படுத்திருந்தாள்.

## 5. தொழிலாளரிடையே சலசலப்பு

தங்களைப் பொதுவுடமையாளர்கள் என்று கூறிக் கொண்டவர்கள் தொழிற்சாலையின் துண்டுப் பிரசுரங்களை விநியோகிக்கலானார்கள். அதில் தொழிலாளர்களின் துயரங்கள், தெற்கு ரஷ்யா, பீட்டர்ஸ் பர்க் முதலிய இடங்களில் நடந்த வேலை நிறுத்தம் முதலியவை விவரிக்கப்பட்டிருந்தன. தொழிலாளர்கள் தங்கள் நலனைக் காத்துக்கொள்ள ஒன்று சேரவேண்டும் என்பதைப் பலமாக வற்புறுத்தப்பட்டிருந்தது.

அதிகச் சம்பளம் பெறுபவர்கள், அந்தப் பிரசுரங்களைப் படித்துவிட்டு, "கலகக்காரர்கள்! இந்த விஷயத்தில் அவர்கள் தங்கள் முகங்களிலேயே கரி பூசிக்கொள்ளுவார்கள்" என்றார்கள்.

வாலிபர்கள் படித்து விட்டு, "இது முற்றிலும் உண்மை" என்றார்கள்.

பெரும்பான்மையான தொழிலாளர்கள், "ஒன்று படுவதால் மட்டும் எதுவும் நடந்து விடாது" என்று கருதினார்கள். ஆனால் பிரசுரங்கள் ஜனங்களிடையே ஒரு சலசலப்பை ஏற்படுத்திவிட்டன. ஒரு நாள் பிரசுரம்

தொழிற்சாலையினுள் வரவில்லை என்ருல் தொழிலாளர்கள் அதைத் தேடி அலைவார்கள். மறு நாள் கிடைத்ததும், கருத்து வேற்றுமையின்றிப் படிப்பார்கள்.

தொழிற்சாலைப் பகுதியில் புதியவர்கள் தலைகாட்டடத் தொடங்கினர். பலரைச் சந்தித்துப் பல கேள்விகள் கேட்டனர். சிலரைச் சந்தேகித்தனர்.

இவை முழுவதும் பவலின் வேலை என்று அன்னைக்கு நன்ருகத் தெரியும். மகன் செய்யும் காரியத்தால்தான் தொழிற்சாலையே கலகலத்து வருகிறது என்பதை அவள் அறிவாள். இந்த வேலையில் பவல் மட்டும் தனியாக இல்லை. அவனுடன் பலர் வேலை செய்கின்றனர். இருப்பினும் அன்னை மனதில் பவல் ஒருவன்தான் இருந்தான்.

அன்னை, ஜன்னல் அருகில் உட்கார்ந்து ஏதோ சிந்தனை செய்து கொண்டிருந்தாள். அந்தச் சமயம் மரியா வந்தாள். மிகவும் ரகசியமாக, "முன் ஜாக்கிரதை யாக இரு. இன்று உங்கள் வீட்டைச் சோதனை செய்யப் போகிருர்களாம்......" என்ருள். அதற்கு மேல் என்ன சொன்னுள் என்பதை அன்னை காதில் போட்டுக்கொள்ள வில்லை. அவசர அவசரமாக மாஜின் வீட்டிற்கு ஓடினுள். உடல் நலமில்லாததால் மாஜின் தொழிற் சாலைக்குப் போகவில்லை என்று அன்னைக்குத் தெரியும்.

ஜன்னல் அருகில் மாஜின் உட்கார்ந்து புத்தகம் படித்துக் கொண்டிருந்தான். அன்னையைக் கண்டதும் துள்ளி எழுந்தான். விஷயத்தை அன்னை சொல்லி, "இப்பொழுது என்ன செய்வது?" என்று கேட்டாள்.

"பயப்படாதீர்கள். சற்று பொறுங்கள்" என்ருன் மாஜின்.

" நீயே பயந்துவிட்டாயே !" என்றாள் அன்னை.

" நானா !.........ஆமாம் பயங்காளி !.........பவலுக்கு இந்தச் செய்தி தெரியவேண்டும். என் தங்கையிடம் அவனுக்குச் சொல்லிஅனுப்புகிறேன். நீங்கள் வீட்டிற்குப் போங்கள். அவர்கள் நம்மை ஒன்றும் செய்துவிட மாட்டார்கள். " என்றான் மாஜின்.

வீடு திரும்பிய அன்னை, புத்தகங்களை அலமாரியிலிருந்து எடுத்தாள். மார்போடு அணைத்துக்கொண்டு அங்கும் இங்குமாக நடந்தாள். பவலுக்கு இதற்குள் செய்தி கிடைத்திருக்கும். தொழிற்சாலையிலிருந்து வந்துவிடுவான் என்று கருதினாள். ஆனால், நேரமாகியும் அவன் வரவில்லை. புத்தகங்களைப் பல இடங்களில் மறைத்து வைத்தாள். கவலை தோய்ந்த முகத்துடன் உட்கார்ந்திருந்தாள்.

பவலும் உக்ரேனியனும் வந்ததும் அன்னை, "உங்களுக்குத் தெரியுமா ? நம் வீட்டைச் சோதனை செய்யப் போகிறார்களாம் " என்றாள்.

" தெரியும். நீ பயந்து விட்டாயா ?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் பவல்.

" ஆமாம், ஆமாம். "

" பயப்பட வேண்டியதில்லை;ஒன்றும் நடைபெறாது" என்றான் உக்ரேனியன்.

" இன்னும் தேநீர் தயாரிக்கப்படவில்லையா ?" என்று கேட்டான் பவல்.

" புத்தகங்களை மறைத்து வைப்பதிலேயே நேரம் போய்விட்டது. தேநீர் தயாரிக்கவில்லை " என்றாள்.

பவலும், உக்ரேனியனும் உரக்கச் சிரித்தார்கள். பிறகு சில புத்தகங்களை எடுத்து மறைக்கச் சென்றார்கள்.

உக்ரேனியன் திரும்பி வந்து அன்னை அருகில் நின்ருன். “ இவையெல்லாம், நம்மில் வயதானவர்களாக இருக்கிருர்களே, அவர்கள் செய்யும் வேலை. உலகத்தில் எவன்தான் குற்றமற்று இருக்கிருன் ? ஆனுல் நான் தவறு செய்தவனுக இருந்தால் தவறைப் பற்றியே கவலைப்பட மாட்டேன். ஜனங்கள் தங்கள் இஷ்டப்படி நடக்க விடாவிட்டால் என்ன செய்வது ? அவர்கள் செய்யும் தவறுகள் நான் செய்யும் வேலையில் குறுக்கே நிற்கின்றன. அவற்றை விலக்குவது முடியாத காரியம். அவர்கள் செய்யும் தவறை தடுத்து நிறுத்த முற்படுவதோ பிரயோசனமற்றது. முன்பெல்லாம் நான் . இப்படிப் பட்ட சமயத்தில் கோபமடைந்து விடுவேன். ஆனுல் என்னைச் சுற்றியிருப்பவர்கள் அனைவரும் மனம்உடைந்து போனவர்களாகவே காணப்பட்டனர். ஒருவன் மற்ற வனைத் தாக்கி விடுவாஞே என்று பயம் சூழ்ந்திருந்தது. அதனுல் மற்றவன் தாக்குவதற்கு முன் நாம் தாக்க வேண்டும் என்று நினைக்கிருர்கள்......’’ என்ருன் உக்ரேனியன்.

அவன் சரளமாகப் பேசினுன். போலீஸ்காரர்கள் வந்து சோதனை செய்யும் விஷயத்தை, அன்னையின் மனதி லிருந்து விலக்கவே அவன் அவ்வளவு பெரிய சொற் பொழிவை நிகழ்த்தினுன்.

அன்னை பெருமூச்சுவிட்டாள். “ கடவுள் உங்களுக்கு நன்மையைச் செய்யட்டும்.” என்ருள்.

அன்று இரவு பூராவும் சோதனை செய்ய போலீஸ் கோஷ்டி வரும் என்று எதிர்பார்த்தனர். அது வெறும் வதந்தியோ என நினைக்கும்படியாயிற்று. அவர்கள் அன்று வரவில்லை.

# 6. போலீஸ் சோதனை

வீட்டைச் சோதனைபோட, போலீசார் எதிர்பார்த்த சமயத்தில் வரவில்லை என்பது உண்மை. ஆனால் அவர்கள் வராமலும் இருந்துவிடவில்லை. சுமார் ஒரு மாதம் கழித்து ஒருநாள் நள்ளிரவில் வந்தனர். நிக்கோலாய், பவல், உக்ரேனியன் ஆகிய மூவரும், அவர்களுடைய பத்திரிகை விஷயமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். அன்னை பாதித் தூக்கத்திலேயே அவர்கள் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

ஏதோ ஒரு சப்தம் கேட்டு உக்ரேனியன் எழுந்து சமையல் அறைக்குச் சென்றான். அங்கேயிருந்து எதையோ பார்த்துவிட்டு "தெருவில் செந்தலைப் பூச்சிகள்" என்றான்.

அன்னை படுக்கையை விட்டு எழுந்தாள். பவல் அவளைத் தடுத்து "உனக்கு உடம்பு சரியாயில்லை படுத்துக் கொள்" என்றான்.

கதவருகில் யாரோ வரும் காலடிச் சப்தம் கேட்டது. கதவின் பக்கம் போய் நின்று "யாரது?" என்று கேட்டான்.

வெளியிலிருந்து கதவைப் பலமாகத் தள்ளினார்கள். கதவு திறக்கப்பட்டதும் இரண்டு போலீஸ்காரர்கள் வாசலில் நின்றனர். ஒரு அதிகாரி பவலைப் பிடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தான்.

போலீஸ் அதிகாரி, அவனுடைய மேலதிகாரிக்கு பவலைச் சுட்டிக்காட்டி "இவன் தான் பவல். அதோ அவனுடைய தாய்" என்றான்.

"பவல், உன் வீட்டைச் சோதனை செய்யப் போகிறோம்" என்றான் மேலதிகாரி. பிறகு வாசல் பக்கம் திரும்பி "யார் அது ?" என்று கூப்பிட்டான்.

இருவர் உள்ளே வந்தனர். அவர்களில் ஒருவன் டெரிகாவ், மற்றவன் ரிபின். வந்தவர்கள், "என்ன இது ? இவ்வளவு நள்ளிரவில் !" என்றனர். அதற்கு எவருமே பதில் சொல்லவில்லை.

வீட்டைச் சோதனை போட முனைந்தனர் போலீஸ் அதிகாரிகள். சமையல் அறையிலிருந்து, உடைந்த சட்டி பானைகளைக் கவிழ்த்துவைக்கும் குட்டிச்சுவர் வரை சோதனை போட்டார்கள். நிக்கோலாய், உக்ரேனியன் இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்த வண்ணம் இருந்தனர்.

ஒரு போலீஸ் அதிகாரி அலமாரியில் வைக்கப்பட்டிருந்த புத்தகங்களை எடுத்தான். ஒவ்வொன்றாகப் பார்த்துவிட்டுத் தரையில் வீசி எறிந்தவண்ணம் இருந்தான். புத்தகங்களை வீசி எறிவதைக் கண்டதும் அவர்களுக்குப் பதை பதைத்தது. நிக்கோலாய் உரத்த குரலில் "போலீஸ்காரர்களே, புத்தகங்களைப் பொறுக்கி எடுத்துவையுங்கள்" என்றான்.

எல்லாப் போலீஸ்காரர்களும் அவன்பக்கம் திரும்பிப் பார்த்தார்கள் பிறகு அதிகாரியைப் பார்த்தனர். அதிகாரி

நிக்கோலாயை ஒரு முறை உன்னிப்பாகப் பார்த்துவிட்டு, போலீஸ்காரர்களிடம், " ஹும் எடுத்து வையுங்கள் " என்ருன்.

" நிக்கோலாய் ஏன் பேசாமல் இருக்கமாட்டேன் என்கிருன் " என்று அன்னை பவலிடம் மெல்லக் கேட்டாள். உக்ரேனியன் தலை கவிழ்ந்து மௌனமாக இருந்தான்.

" பைபிளை யார் படிக்கிருர்கள் ?" என்ருன் அதிகாரி, அதிகாரத் தோரணையில்.

" நான் " என்ருன் பவல்.

" இந்தப் புத்தகங்கள் யாருடையவை ?"

" என்னுடையவை"

" அப்படியா என்று அதிகாரி கூறிவிட்டு நாற்காலியில் நன்ருகச் சாய்ந்துகொண்டான். நிக்கோலாயைப் பார்த்து " உன் பெயர் ஆண்டரியா ?" என்று கேட்டான். ஆமாம் என்று சொல்லிக்கொண்டு நிக்கோலாய் முன்னுல் நகர்ந்துவந்தான்.

உக்ரேனியன் அவனை விலக்கிக்கொண்டு " அவன் தவறுதலாகச் சொல்லுகிருன். நான் ஆண்டரி " என்ருன்.

அதிகாரி நிக்கோலாயைப் பார்த்துக் கையை ஆட்டிய வண்ணம் " ஜாக்கிரதை !" என்று கூறிவிட்டு, " இதற்கு முன், ஆண்டரி ! உன்னை அரசியல் காரணமாக போலீஸ் சோதனை செய்தது உண்டா ?" என்று கேட்டான் அதிகாரி.

" ஸாரடாவிலும், ரோஸ்டாவிலும் சோதனை செய்திருக்கிருர்கள். ஆனுல் அங்குள்ள போலீஸ் அதிகாரிகள் மிகவும் மரியாதையாக நடந்துகொள்ளுவர்ர்கள்."

“ஸ்ரீமான் ஆண்டரி—ஆமாம் ஸ்ரீமான் ஆண்டரி தான் நீ—தொழிற்சாலையில் விநியோகிக்கிறார்களே துண்டு பிரசுரங்கள் அதுபற்றி உனக்கு ஏதாவது தெரியுமா? அந்தத் துரோகிகள் யார் என்று தெரியுமா?”

ஆண்டரி பதில் சொல்லுவதற்குள், நிக்கோலாய் துடிதுடித்த வண்ணம், “ துரோகிகளைச் சந்திப்பது இதுதான் எங்களுக்கு முதல் தடவை ” என்றான்.

“ இந்த நாயை இழுத்துச் செல்லுங்கள் ” என்றான் அதிகாரி. உடன் இரண்டு போலீஸ்காரர்கள் வந்து அவனைப் பலவந்தமாக அங்கிருந்து இழுத்துச் சென்றனர்.

“நாங்கள் எல்லா இடங்களையும் தேடிவிட்டோம். ஒன்றும் அகப்படவில்லை” என்றான் ஒரு போலீஸ் அதிகாரி.

மேலதிகாரி சிரித்த வண்ணம், “பழைய ஆசாமி ஒருவன் இங்கே இருக்கிறான். எதுவும் அகப்படாது தான்” என்றான். பிறகு ஆண்டரியின் பக்கம் திரும்பி “உன்னைக் கைதுசெய்கிறோம்” என்று கூறிவிட்டு போலீஸ்காரர்களை அழைத்தான்.

“ எதற்காக?” என்று கேட்டான் ஆண்டரி.

“ பிறகு சொல்லுகிறேன் ” என்றான் அதிகாரி.

“உனக்குப் படிக்கவும் எழுதவும் தெரியுமா?” என்று அன்னையைப் பார்த்துக்கேட்டான் அதிகாரி.

அன்னைக்குப் பதிலாக பவல், “ அவளுக்கு ஒன்றும் தெரியாது ” என்றான்.

“ உன்னைக் கேட்கவில்லை. அவள் சொல்லட்டும் ” என்றான் அதிகாரி. அந்த அதிகாரியைப் பார்த்ததிலிருந்து

அன்னைக்குப் பயம் ; அவன் உரத்த குரலில் பேசியபோது மேலும் பயந்துவிட்டாள் அவள்.

அவள் தலையை அசைத்துவிட்டு, “ஏன் கூப்பாடு போடுகிறீர்கள் ? நீங்கள் இன்னமும் வாலிபர்கள்” என்றாள்.

“இந்தச் சமயத்தில் நீ தைரியமாக இருக்கவேண்டும்” என்றான் பவல் அன்னையிடம்.

“எதற்காக இவனைக் கைது செய்தீர்கள் ?” என்று ஆண்டரியைக் காட்டிக் கேட்டாள் அன்னை.

“நீ வாயை மூடு ; அது உன் விஷயம் அல்ல” என்றான் அதிகாரி.

ஒவ்வொருவராக அதிகாரி அழைத்தான். மேஜையின் மீது ஒரு காகிதத்தை வைத்து அதில் கையெழுத்திடச் சொன்னான். அந்த வேலை முடிந்ததும், நிக்கோலாய், ஆண்டரி இருவரையும் அழைத்துக்கொண்டு போகும்படி போலீஸ்காரர்களுக்கு உத்திரவிட்டான்.

“ஆகா, இந்த இடத்தில் இவர்கள் எவ்வளவு சுதந்திரமாக இருந்திருக்கிறார்கள்” என்று அதிகாரி சொல்லிக்கொண்டே போனான்.

நிக்கோலாயும், ஆண்டரியும் போகும் போது, “தோழர்களே, வந்தனம் போய் வருகிறோம்.” என்றனர்.

பவலும் அன்னையும் பதிலுக்கு வந்தனம் செலுத்தினார்கள். அன்னையின் கண்களில் நீர் பெருக் கெடுத்தது. அதைக் கண்ட பவல் “இன்னும் எவ்வளவோ நடக்க வேண்டியிருக்கிறது. இதற்குள்ளாகவே இப்படி வருத்தப்படுகிறாயே !” என்றான்.

"உன் மனம் கல்லாகிவிட்டது பவல். நான் ஏதாவது சொன்ஞல் நீ மேலும் மோசமாக எதையாவது சொல்லு கிருய்" என்ருள் அன்னே.

பவல், அன்புடன் அன்னையிடம் வந்து, "நான் என்ன செய்வது அம்மா! எதையும் என்ஞல் மறைக்க முடியாது. பொய் சொல்லவும் முடியாது. இவற்றை நீ பொறுத்துக்கொள்ளத்தான் வேண்டும்" என்ருன்.

## 7. தொழிற்சாலையில் போராட்டம்

பக்கின், ஸாமலாவ், ஸோமோவ் மற்றும் ஐவர் மேலும் கைது செய்யப்பட்டார்கள் என்று மறுநாள் தெரியவந்தது.

மாலையில் மாஜின் ஓடி வந்தான். அவன் வீட்டிலும் சோதனை நடைபெற்றது. அவன் தன்னை ஒரு வீரனாகவே எண்ணியிருந்தான்.

“ஏண்டா பயந்து விட்டாயா ?” என்று அன்னை அவனைக் கேட்டாள்.

அவன் முகம் வெளுத்து விட்டது. அவன் படபடப்புடன் “ஆமாம் போலீஸ் அதிகாரி என்னை அடிப்பானோ என்று பயந்தேன். கறுப்புக்கண்ணாடி, கறுப்புத்தாடி, ரோமம் நிறைந்த விரல்கள், தடித்த உடம்பு இவற்றைப் பார்க்கும் போது நான் திடுக்கிட்டுப்போனேன். அவன் கத்தினான். காலால் தரையை உதைத்தான். என்னை சிறைக்குள் தள்ள வேண்டும் என்றான். என்னை, என் தாயோ, தந்தையோ வேறு யாருமோ அடித்ததில்லை. அந்த அதிகாரி மாத்திரம் என்மீது கைவைத்திருந்தால் பிறகு தெரிந்திருக்கும் ” என்றான்.

"நியாயத்திற்காக வாதாடு, உயிரையும் கொடு. ஆனல் ஒருபோதும் பலாத்காரத்தில் இறங்காதே!" என்ருன் பவல்.

இந்தச் சமயத்தில் ரிபின் சமையல் அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தான். "இதோ மீண்டும் வந்துவிட்டேன். நேற்று போலீஸ்காரர்கள் அழைத்து வந்தார்கள். இன்று நாளுக வந்திருக்கிறேன்......அம்மா எனக்குத் தேநீர் வேண்டும்" என்ருன்.

அன்னை தேநீர் தயாரிக்க உள்ளே சென்ருள்.

"பவல், இன்று உன்னிடம் மனம்விட்டுப் பேச வேண்டும்; அதற்காகவே இப்பொழுது வந்திருக்கிறேன். உன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில்தான் நான் வசிக்கிறேன். பலர் உன் வீட்டிற்கு வருகிருர்கள். குடிப்பதில்லை. மற்ற கெட்ட பழக்கங்களையும் காணேம். சந்தடிசெய்யாமல் இருப்பதால் பிறர் கவனத்தைக் கவருகிருர்கள். நான் அப்படி இருப்பதால்தான் என்மீது பலருடைய கண்கள் பார்வை விலகுவதே இல்லை" என்ருன்.

பவலும் அவன் நண்பன் மாஜினும் மௌனமாக ரிபின் சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தனர்.

மீண்டும் ரிபின் சொன்னுன்: "எல்லோரும் உன்னைப் பற்றி ஏதேதோ பிதற்றுகிருர்கள். நீ மாதாகோவிலுக்குப் போவதில்லை, அதனுல் என் எஜமானர் உன்னை நாஸ்திகன் என்கிருர். போகட்டும். தொழிற்சாலையிலும் மற்ற இடங்களிலும் பரவிற்றே துண்டுப் பிரசுரங்கள் அதற்கு நீதானே காரணம்?"

"ஆமாம்" என்ருன் பவல் கம்பீரமாக.

"நீ ஒருவனு பொறுப்பாளி? மற்றவர்கள்?" என்ருள் அன்னே.

" துண்டுப் பிரசுரங்கள் நல்ல வேலே செய்தன. தொழிலாளரிடையே ஒரு கலக்குக் கலக்கிவிட்டது."

பவல் மௌனமாகத் தலே அசைத்தான்.

" துண்டுப் பிரசுரங்கள் எல்லாவற்றையும் நான் படித்தேன். சில எனக்குப் புரியவில்லே. சில அபூர்வ மானவை...அந்த உக்ரேனியன்—அவன் பெயர் என்ன—ஓ ஆண்டரி மிக நல்லவன். ஒருநாள் தொழிற்சாலேயில் அவன் பேசியிருக்கிருன் பார்! மகா தைரியசாலி. எல்லாம் தெரிந்தவன். நான் உன்னேக்காட்டிலும் ஒருமடங்கு வயதில் பெரியவன். ஒருவன் குளித்து உடல் அழுக்கைப் போக்கிக் கொள்ளுகிருன். நல்ல ஆடைகளே உடுத்திக் கொண்டு சுத்தமாக இருக்கிருன். ஆனுல் மனம் அழுக்குப் படிந்து இருக்கிறது. அதை எப்படிச் சுத்தம் செய்வான்?" என்று கேட்டான் ரிபின்.

ரிபின், மதப்பற்று உள்ளவன் ; அவன் போக்கை பவல் அறிந்து கொண்டான். புன்னகை செய்து கொண்டே, "கடவுள் பெயரைச் சொல்லி ஏமாற்றப் பட்டு விட்டோம். முட்டாள்களாக ஆக்கப்பட்டோம். நமது மதக் கோட்பாடுகள் பல பொய்யானவை' என்ருன்.

ரிபின் மேலும் கடவுள், மதம் என்று பேச ஆரம் பித்ததும் அன்னே குறிக்கிட்டு, "கடவுளேயும் மதத்தையும் பற்றிப் பேசும்போது ஜாக்கிரதையாகப் பேசு ரிபின். பிறர் மனம் நோகும்படி எதுவும் பேசாதே " என்ருள்.

" மத போதகர்கள், கடவுளேக்கூட நம் வரை மறைத்து விட்டார்கள். நமக்கு எதிராகப் பல கோட்

பாடுகளை ஏற்படுத்தினார்கள். கடவுள் மனிதனை தனது பிரதி பிம்பமாகச் சிருஷ்டித்தார். ஆனால் மனிதன் கடவுள் தன்மையாகவா இருக்கிறான். மிருகத்திலும் கேடுகெட்ட வனாக வல்லவா இருக்கிறான். மாதாகோவிலில், நம் எதிரில் அவர்கள் சிருஷ்டித்த கடவுளைத்தான் காட்டுகிறார்கள். நாம், நம்முடைய கடவுளையே மாற்றியாகவேண்டும்'' என்றான் ரிபின் முன்னுக்குப் பின் முரணாக !

"என்னால் இந்தப் பேச்சைக் கேட்கவே முடியாது'' என்று கூறி அன்னை உள்ளே சென்று விட்டாள்.

"இதற்கு முக்கியமாக, நாம் மனித சமூகத்தையே விடுவிக்கவேண்டும்'' என்றான் பவல்.

ரிபின் அதற்குமேல் விவாதம் செய்யவில்லை. நேரமாகி விட்டது என்று போய்விட்டான்.

* * *

ரிபின் சொன்னது போல், பவலின் வீடு பலர் பார்வைக்கு இலக்காயிற்று. பலர் சந்தேகப் பார்வை பார்த்துச் செல்வார்கள். பலர் வந்து போவது அதற்கு உறு துணையாக இருந்தது.

ஜனங்கள் மெல்ல பவலுக்கு மதிப்புக் கொடுக்கத் தலைப்பட்டனர். தன் மகன், பலர் மதிப்புக்குப் பாத்திர மாகிறான் என்று அன்னைக்கு தெரியவந்ததும் பெருமிதம் கொண்டாள்.

தொழிற்சாலையைச் சுற்றி பிர் என்ற ஒருவகை மரம் காடுபோல வளர்ந்திருந்தது. அதிலிருந்து துர்நாற்றம் வீசும். வெயில் காலத்தில் மஞ்சள் நிறத்தில் நுரை ஒன்று கிளம்பும். அதனால் கொசுக்களும் பூச்சிகளும் அதிகரிக்கும். அந்தப் பகுதி தொழிற்சாலையைச் சேர்ந்திருந்தது.

அந்தப் பகுதிக்கு அருகிலேதான் தொழிலாளர்கள் வசித்துவந்தனர். கொசு, பூச்சி, துர்நாற்றம், இவை

ஒழிந்தால் தொழிலாளர்களுக்கு நன்மைதான் ! தொழிற் சாலைக்குப் பணம் சேர்க்க, இதை ஒரு காரணமாக உபயோகிக்கத் திட்டமிட்டார் புது மானேஜர். தொழி லாளர் தலைவர்களை அழைத்துப் பேசினர். கடைசியாக, மானேஜரே, தொழிலாளர்களின் சம்பளத்தில் ஒரு சதம், காடு சுத்தப் படுத்துவதற்காகப் பிடிப்பது என்று தீர்மானித்தார். இதை அறிந்ததும் தொழிலாளர்கள் முணு முணுத்தார்கள்.

அன்று சனிக்கிழமை. பவலுக்கு உடல் நலமின் மையால், தொழிற்சாலைக்குப் போகவில்லை. மானேஜ ருடைய தீர்மானம் அவனுக்குத் தெரியாது. மறு நாள் பவல் வேலைக்குப் போனதும்,ஸிஜாவ் நடந்த விஷயத்தைச் சொன்னன். "நாங்கள் எங்கள் தோழர்களுடன் பேசுகிறோம், நீதான் எங்களில் எல்லாம் தெரிந்தவன். அதனுல் நீயே எங்களுக்காக மானேஜரிடம் போய்ப் பேச வேண்டும். கொசுக்களையும் பூச்சிகளையும் ஒழிக்க தொழிலாளர் பணம்தான் அகப்பட்டதா?" என்ருன் ஸிஜாவ்.

தோழர்களின் விருப்பப்படி தொழிற்சாலை முதலாளி களைச் சந்தித்துப் பவல் பேசினன். அவர்களும் சரி சரி என்று தலை அசைத்து அவனை அனுப்பி விட்டனர்.

பவல் வீடு திரும்பியதும், அன்னையிடம் விஷயத்தைச் சொல்லி "வயதானவர்களும், நெடுநாள் தொழிற்சாலையில் வேலை செய்தவர்களும் கூட இப்பொழுது உண்மையைத் தெரிந்து கொள்ள ஆரம்பிக்கின்றனர்" என்ருன்.

அன்னை சந்தோஷத்தால் பூரித்துப் போனள். "வயதானவர்கள்கூட உன் தயவை நாடி வருகிருர்கள்?" என்ருள்.

பதில் சொல்லாமல் ஒரு கடிதத்தைக் கொடுத்து, நகரத்தில் ஒரு இடத்தின் விலாசத்தைச் சொன்னான், "உடனே போய், இதை யோகார் ஐவானேவிச் என்பவரிடம் கொடுக்க வெண்டும்" என்று கட்டளை யிட்டான். அன்னைக்கு இடும் முதல் பணி இதுதான்!

அன்னை பதில் பேசாமல் போனாள். மாலையில் வெகு நேரம் கழித்தே வீட்டுக்குத் திரும்பினாள். "சாஷா வைச் சந்தித்தேன். அவள், தன் நன்றியை உனக்குத் தெரிவிக்கச் சொன்னாள். ஆஹா, ஐவானேவிச் இருக் கிறாரே என்ன எளிமையான மனிதர், எவ்வளவு ஹாஸ்யமாகப் பேசுகிறார்" என்று புன்முறுவலுடன் கூறினாள் அன்னை.

"உனக்குக்கூட அவர்கள் பிடித்து விட்டார்களே; மிகவும் சந்தோஷம்" என்றான் பவல்.

பவல் திங்கட்கிழமை யன்று மீண்டும் தலைவலி என்று வேலைக்குப் போகவில்லை. பகல் உணவுக்கு தொழிலாளர்கள் போகும் சமயம், மாஜின் ஓடோடியும் வந்தான். "வா பவல் தொழிற்சாலையே விழித்தெழுந்திருக் கிறது. அவர்களே உன்னை அழைத்து வரும்படி சொன்னார்கள்; நீ தான் மானேஜரிடம் பேசக்கூடிய சரியான ஆள்......ஆஹா, அங்கே, என்ன கலாட்டா என்ன கூச்சல்!" என்றான் மாஜின்.

பவல் எழுந்து உடை மாற்றச் சென்றான்.

வெளிக் கிளம்பும் சமயத்தில், அன்னை தானும் வருவ தாகக் கூறினாள். 'வா' என்றான் பவல்.

தொழிற்சாலைப் பகுதிக்குப் போகும் போதே, 'பவல் வருகிறான்' என்ற கோஷம் கேட்டது. கூடியிருந்த வர்கள் அவனைக் கை கோர்த்துக் கூட்டிச் சென்றனர். அன்னை தனியே விடப்பட்டாள்.

பவல் கூட்டத்தில் பேச ஆரம்பித்தான். ஜனங்களின் கூச்சலை அடக்க எங்கிருந்தோ முளைத்தான் ரிபின்.

“நாம், ஒரு சதம் பிடிக்கப்படுவதை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யவில்லை, நமக்கு நீதி வேண்டும்; பணம் வட்டமாகத்தான் இருக்கிறது, இலேசாகவும் இருக்கிறது. ஆனால், அதில் மனித ரத்தம் தோய்ந்திருக்கிறது” என்றான் ரிபின்

“தோழர்களே” என்றான் பவல். அவன் குரல் கம்பீரமாகவும் தெளிவாகவும் இருந்தது. “......நாம் தான் மாதா கோவிலையும் தொழிற்சாலையையும் கட்டினோம். நாணயம் இயந்திரம், பொம்மை எல்லாவற்றையும் செய்வது நாம் தான். உலகத்திலுள்ள எல்லோருடைய ஆனந்தத்துக்கும் உழைப்பவர்கள் நாம். ஆனால் நம் வாழ்க்கையோ மிகவும் பிற்போக்கானது” என்றான் பவல்.

“ஆ, அப்படி; அப்படி!” என்றான் ரிபின்.

“வேலைக்கு முந்தி. வாழ்க்கையில் பிந்தி. நம்மை யார் கவனிக்கிறார்கள்” நாம் நன்றாக இருக்க வேண்டும் என்று நினைப்பவர் எவர்? நம்மை மனிதர்கள் என்றுகூட யாரும் மதிக்கிறார்களா?”

“ஒருவர் கூட இல்லை!”—பல குரல்கள் கிளம்பின.

இதற்குள் சிலர் பொறுமை இழந்தனர். மானேஜரிடம் போய்ப் பேசும்படி கூச்சல் போட்டனர். மானேஜரிடம் பேசுவதற்கு ஒரு குழுவை நியமித்தனர். இதற்குள் கூட்டத்திலிருந்து, ‘அதோ மானேஜரே வருகிறார்’ என்ற குரல் கிளம்பிற்று. கூட்டம் மானேஜருக்கு வழி விட்டது, “என்ன கூட்டம்? ஏன் வேலையை நிறுத்தினீர்கள்?” என்று மானேஜர் கூக்குரலிட்டார்.

பவல், ரிபின், ஸிஜாவ் மூவரும் மானேஜர் முன் வந்து 'நாங்கள் தொழிலாளர் சார்பான குழு' என்று கூறிக்கொண்டு தொழிலாளர் சம்பளத்திலிருந்து பிடிப் பதை கைவிடும்படி கேட்டுக் கொண்டனர்.

"நான், தொழிலாளர்களிட மிருந்து பணம் பறிக்கவா இந்த யோசனை செய்தேன் என்று நினைக் கிறீர்கள்" என்றார் மனேஜர்.

"ஆமாம்" என்றான் பவல்

"ரிபின் நீ என்ன சொல்லுகிறாய்?"

"ஆமாம்" என்றான் ரிபின்.

"நீ என்ன நினைக்கிறாய்?" என்று ஸிஜாவைப் பார்த்துக் கேட்டார் மானேஜர்.

"நானும் தான்" என்றான் ஸிஜாவ்.

மானேஜர் தலைகுனிந்தார். பிறகு தலை நிமிர்ந்து, பவலைப் பார்த்து, "நீ புத்திசாலியாகத் தெரிகிறாய், உனக்குத் தெரியவில்லையா? கொசு, பூச்சிகளை ஒழிப்பது எவ்வளவு நல்லது?" என்றார்.

"நல்லதுதான்; இல்லை யென்று சொல்லவில்லை. அதற்கு ஏற்படும் செலவை தொழிற்சாலை ஏற்றுக் கொண்டால் எங்களுக்கு ஆட்சேபணை இல்லை" என்றான் பவல்.

"தொழிற்சாலை தர்ம ஸ்தாபனம் அல்ல! உடனே போய் வேலையைப் பாருங்கள்" என்றார் அதிகார தோரணையில்.

கூட்டத்தில் முணு முணுப்புச் சப்தம் கேட்டது.

"என்ன......இன்னும் பதினைந்து நிமிஷத்தில் எல்லோரும் வேலையில் ஈடுபட வேண்டும். இல்லா

விட்டால் ......" என்று சொல்லிப் போய்விட்டார் மானேஜர்.

மானேஜர் போனபின் சிலர் பவலைப் பார்த்து, "ஏ பெரிய வக்கீலே! இனி என்ன செய்வது?" என்று கேலியாகக் கேட்டனர்.

"என்ன செய்வதா? வேலை நிறுத்தம் செய்யுங்கள்" என்றான் பவல்.

"வேலை நிறுத்தமா?"

"ஒரு சதத்திற்காகவா?"

"நம்மை வேலையை விட்டே நீக்கி விடுவார்கள்!"

மாறுபட்ட பல குரல்களைக் கேட்டான் பவல். மௌனமாக அங்கிருந்து வெளியேறினான். கூட்டத்தில் குழப்பம் ஏற்பட்டது. அவன் மனம் வேகமாகத் துடித்தது. சிலர் அவனை அணுகி, அவன் பேசியதைப் பாராட்டினர். 'ஜனங்கள் இன்னும் சரியாக எதையும் தெரிந்துகொள்ள மாட்டேன் என்கிறார்களே' என்று வருத்தப் பட்டனர் சிலர்..

பவலுக்கு ஏற்பட்ட அவமானத்தால், அவன் யாரிடமும் பேசவில்லை. அவன் மனதில் எவ்வளவோ கனவுகள் கண்டிருந்தான். ஆனால் இப்படிப்பட்ட தோல்விக் கனவை அவன் கண்டதே இல்லை. அன்னையை அழைத்துக் கொண்டு அவன் வீட்டிற்குப் புறப்பட்டான்.

இரவு அன்னையும் பவலும் நன்றாகத் தூங்கிக்கொண்டிருந்த சமயம், போலீஸ் வந்தது. வீடு முழுதும் சோதனை போடப்பட்டது. முன்பு வந்த அதிகாரியேதான் இப்பொழுதும் வந்தான். கோபமாகப் பேசினான்; கண்டபடி ஏசினான். இந்தச் சமயம் அன்னை பயப்படவே இல்லை. மகன் முகத்தைப் பார்த்த வண்ணம் தைரியமாக நின்றுகொண்டிருந்தாள்.

கடைசியாக, பவலைக் கைது செய்து அழைத்துச் சென்றனர். பவல் போகும் சமயம், அன்னையின் மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்டான். அன்னை கண்களில் நீர் பெருகியது. ஆனால், அடுத்த நிமிஷமே கண்களைத் துடைத்துக் கொண்டு "போய்வா பவல். உன்னைக் கடவுள் காப்பாற்றுவார்" என்றாள்.

## 8. மகன் பாதையில் அன்னை

தொழிலாளர்களை வேலைக்குப் போ என்று தூண்டுவதுபோல தொழிற்சாலைச் சங்கு அலறியது. மழையும் குளிருமாக இருந்தும் தொழிலாளர்கள் பயந்து கொண்டு தொழிற்சாலையை நோக்கி விரைந்தார்கள்.

ரிபின் சீட்டி அடித்துக் கொண்டே அன்னையின் வீட்டிற்கு வந்தான். அவனது காலடிச் சப்தம் அன்னையின் சிந்தனையைக் கலைத்தது. இரவு,பவல் கைதாகிப் போனதிலிருந்து தூக்கமின்றி அன்னை ஜன்னல் அருகில் உட்கார்ந்திருந்தாள்.

"பவலை உன்னிடமிருந்து அபகரித்துச் சென்று விட்டார்கள்" என்றான் ரிபின்.

"ஆமாம், அந்த நாய்கள் அப்படித்தான் செய்தன" என்றாள் ஆத்திரத்தோடு.

"என்னைக்கூடச் சோதனை போட்டார்கள். கேலி செய்தார்கள். கேவலமாகப் பேசினார்கள். ஆனால் வேறு ஒன்றும் செய்யவில்லை. மானேஜர் போலீஸ்காரர்களுக்கு லஞ்சம் கொடுத்தான். அவர்களும் அவனுக்குத் தக்கபடி

தலை ஆட்டிவிட்டார்கள். அதனுல்தான் பவல் கைது செய்யப்பட்டான். ஒருவன் ஜனங்களின் சட்டைப் பையைச் சோதனை போடுகிருன். மற்றவன் அவனுக்குத் துணையாகக் கையில் துப்பாக்கியுடன் நிற்கிருன்" என்ருன்.

"உங்களுக்காகவே பவல் சிறை சென்ருன். நீங்கள் எல்லோரும் ஒன்றுகூடி அவனுக்குத் துணையாக நிற்க வேண்டும்" என்ருள் அன்னை.

"அது முடியாத காரியம். எங்களுடைய எஜமானர்கள், ஆயிரக்கணக்கான வருஷங்களாக தங்களுடைய பலத்தைப் பெருக்கி வந்திருக்கிருர்கள். எங்களுடைய மனம் அப்படியும் இப்படியும் அசையாமல் இருப்பதற்கு நிறைய ஆணிகளை அடித்து வைத்திருக்கிருர்கள். உடனடியாக எங்களால் ஒன்றுபட முடியாது. முதலில், எங்களுக்குள் ஒன்றுபட முடியாமல் குறுக்கே நிற்கும் தடைகளை அகற்ற வேண்டும்" என்று கூறிவிட்டு அவசரமாகப் போய் விட்டான் அவன்.

மழை பெய்து கொண்டிருந்தது. அன்னையின் மனமும் சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தது. ஆகாரத்தின் மீதுகூட அவளுக்குக் கவனம் செல்லவில்லை. மாலைவரை அப்படியே உட்கார்ந்திருந்தாள்.

மாலை மங்கிவரும் சமயம், ஸாமாவ், வந்தான். அவனுடன் வந்தவன் தொப்பியைக் கழட்டும் சமயம், அன்னை அவனைப் பார்த்து விட்டாள். உடன் அவளுடைய சஞ்சலம் அகன்றது. ஆச்சரியத்துடன் "யோகார் ஐவானேவிச்சா ?" என்ருள்.

"ஆமாம் நானேதான்" என்று கூறி தலையைத் தாழ்த்தி வந்தனம் செலுத்திஞன் யோகார்.

" உட்காருங்கள். இதோ வருகிறேன் " என்று உள்ளே போய் உடைகளை மாற்றலானுள் அன்னை. அவள் வெளியே வந்ததும் யோகார் சொன்னுன்: "நிக்கோலாய் இன்று காலையில் சிறையிலிருந்து வந்து விட்டான். உங்களுக்குத் தெரியுமா?"

" தெரியாது, அவன் எத்தனை நாள் சிறையிலிருந் தான்?"

"ஐந்து மாதம்; ஆண்டரி, பவல் இருவரையும் அவன் பார்த்தானும். சிறைச்சாலை நன்ருக இருக்கிறதாம். வெளியில் கஷ்டப்பட்டுச் சென்றவர்களுக்கு, அது ஒரு ஓய்விடமாக இருக்கிறதாம். அது இருக்கட்டும்; நேற்று பவலுடன் எத்தனை பேர்கள் கைதானுர்கள் தெரியுமா?"

" தெரியாது."

" சுமார் நாற்பத்தி ஒன்பது பேர். இன்னும் பத்துப் பேர் கைது செய்யப்படலாம். இதோ இருக்கிருரே இவர்கூட கைது செய்யப்படலாம் " என்று ஸாமாவைச் சுட்டிக் காட்டினுன் யோகார்.

அன்னையின் மனதிலிருந்து பாரம் சற்று இறங்கியது போலக் காணப்பட்டது: " இவ்வளவு பேரைக் கைது செய்தவர்கள் அதிக நாட்கள் அவர்களை வைத்திருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன் " என்ருள்.

" அப்படிச் சொல்ல முடியாது. பவல் சிறையிலிருந்து வெளிவரும் சமயம் புதிய மனிதனுகவே இருப்பான். ஆனுல் அவனை சட்டென்று விட்டு விடுவார்கள் என்று நான் நினைக்கவில்லை."

" ஏன்?"

" அதற்குக் காரணம் இருக்கிறது. அவன் வெளியே இருக்கும் சமயம் தொழிற்சாலையினுள் துண்டுப்

பிரசுரங்களும், தடை செய்யப்பட்ட புத்தகங்களும் உலாவின. அவனைக் கைது செய்த பிறகு அவை மறைந்து விட்டன. மீண்டும் அவை தொழிற்சாலைக்குள் புகுந்தால்தான் பவல் விடுதலை யடையலாம்" என்றான் யோகார் திடமாக.

"அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?"

"நீங்கள்தான் அந்த வேலையை எப்படியாவது செய்ய வேண்டும். துண்டுப்பிரசுரங்கள்,புத்தகங்களை உங்களிடம் கொண்டு வந்து சேர்க்கிறோம்" என்றான் ஸாமாவ்.

அன்னை சிறிது நேரம் யோசித்தாள். பிறகு தைரியமாக ஆகட்டும் என்று தலை அசைத்தாள். யோகாரும், ஸாமாவும் அவளுக்கு நன்றி கூறிவிட்டுச் சென்றார்கள்.

அவர்கள் போனதும் அன்னை, மண்டியிட்டுக் கண்ணை மூடிக்கொண்டு கடவுளைத் துதி செய்தாள். பிறகு கதவை இழுத்துப் பூட்டிவிட்டு, மரியா வீட்டிற்குச் சென்றாள். மரியா அன்னையைக் கண்டதும் சந்தோஷத்துடன் வரவேற்று "என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டாள்.

"தனியாக வாழ்வது எனக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது; அதனால், உனக்கு உதவியாக என்னை வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டும்" என்று அன்னை கேட்டாள்.

மரியா,தொழிற்சாலையில் பலகாரம் விற்பவள். அன்னை, அவளுக்குப் பல உதவிகள் முன்பு செய்திருக்கிறாள். பவல் கைது செய்யப்பட்ட பிறகு அன்னையின் கஷ்டத்தைக் குறைக்க மரியா, அவளை வேலைக்கு வைத்துக் கொள்ளச் சம்மதித்தாள்.

மரியாவுக்குப் பதிலாக, மறு நாள் பலகாரம் விற்க அன்னை தொழிற்சாலைக்குச் சென்றாள். மத்தியானம் வரை பலகாரம் விற்ற பிறகு, மரியா வீட்டிற்கு வந்தாள் அன்னை. மாலை வரை அவளோடு பேசிக்கொண்டிருந்து விட்டு வீடு திரும்பினாள் அன்னை.

முன் தினம் சொன்னபடி, யோகார் வரக் காணோம். தான் ஏற்றுக்கொண்ட காரியத்தை செய்யமுடியாமல்போய் விடுமோ, மகன் விடுதலையாகாமலே இருந்து விடுவானோ என்று அன்னையின் மனம் பலவாறு படாத பாடு பட்டது. இரவு ஆக ஆக அவள் துடிதுடித்தாள்.

வெளியில் மழை ‘ சோ ’வென்று பெய்துகொண் டிருந்தது. அச்சமயம், யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டு, அன்னை போய் கதவைத் திறந்தாள். ஸாஷா அவசரமாக உள்ளே வந்தாள். “ நீ இந்தப் பக்கம் வந்து வெகு நாட்கள் ஆகிவிட்டனவே ?” என்றாள் அன்னை.

“ நான் நிக்கோலாயுடன் சிறையிலிருந்தேன்...... யோகார் வருவதற்குள் நான் உடைகளை மாற்றிக் கொள்ள வேண்டும் ” என்றாள் ஸாஷா. அவள் உடை களைக் கழற்றிய போது பொல பொல வென்று துண்டுப் பிரசுரங்களும் புத்தகங்களும் கீழே விழுந்தன. அன்னை இதைப் பார்த்துச் சிரித்தாள். “ அதுதானே பார்த்தேன் ; ஸாஷாவா, இப்படிப் பெருத்து விட்டாளே என்று சந்தேகப்பட்டுக் கொண்டிருந்தேன் ; இப்பொழுதல்லவா தெரிகிறது ?” என்று சொல்லி புத்தகங்களையும் துண்டுப் பிரசுரங்களையும் எடுத்து மறைக்கலானாள் அன்னை.

அப்பொழுது யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. ஸாஷா பயந்தே போனாள். “ அது போலீஸாக இருக்கலாம். அவர்கள் உள்ளே வந்தால் ஆபத்து.

உங்களைக் கேட்டால் இவளை எனக்குத் தெரியாது என்று கூறிவிடு" என்றாள்.

"எதற்காக அப்படிச் சொல்ல வேண்டும்? நான் சொல்ல மாட்டேன்" என்று சொல்லி, கதவு தட்டும் முறையைக் கவனித்து, "இது யோகார் போலத் தோன்று கிறது" என்றாள் அன்னை.

கதவைத் திறந்த சமயம், அன்னை நினைத்தபடியே அது யோகார்தான்!

யோகார் உள்ளே நுழைந்ததும், தனி அறைக்குச் சென்று சிறிது நேரத்தில் திரும்பினான். தேநீர் வேண்டுமா என்று அன்னை கேட்டாள்.

"என் தகப்பனார் ஒரு நாளைக்கு இருபது கோப்பை தேநீராவது குடிக்காமல் இருக்கமாட்டார். எழுபத்து ஆறு வயது இருந்தார். அவரைப் போன்ற பலசாலி வாஸங்காவிலேயே இல்லை" என்றான் யோகார்.

அன்னை சிறிது யோசித்து, "நீங்கள் ஐவானுடைய மகனா?" என்று கேட்டாள்.

யோகார் துள்ளிக் குதித்தான். "உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டான்.

"நானும் அந்தக் கிராமத்தைச் சேர்ந்தவள்தான். உங்கள் வீட்டிற்குப் பக்கத்து வீட்டில் இருந்தாரே நில்-அவருடைய மகள்தான் நான்" என்றாள் அன்னை.

இருவரும் சிரித்தனர். ஒரே கிராமத்தினர் என்று தெரிந்ததும் இருவரும் முன்னிலும் அதிகமாக நேசிக்க லானார்கள். மூவருக்கும் தேநீர் தயாரித்து வந்தாள் அன்னை. ஸாஷா தேநீரை எடுத்துக் கொடுத்தாள். மூவரும் தேநீரை அருந்திய பிறகு, அன்னையை அழைத்துக்

கொண்டு ஸாஷா சமையல் அறைக்குச் சென்ருள். அன்னையின் காதில் "பவலைச் சந்தித்தால் என் நன்றியைச் சொல்லுங்கள்" என்று கூறி அன்னையை முத்தமிட்டு விட்டுச் சென்ருள்.

ஸாஷா நகரத்தை நோக்கி மழையில் போவதை அன்னை பார்த்துக் கொண்டிருந்தாள். சமையலறையை விட்டு வெளியே வந்ததும், "பாவம் பயந்து போயிருக்கிருள்" என்ருள் அன்னை.

"ஆமாம், பணக்கார வீட்டுப் பெண். இந்த வேலையில் ஈடுபட்டதால் எதற்கும் துணிய வேண்டி வருகிறது. இருந்தாலும், கொஞ்சம் பயப்படாமலும் இருக்க முடியாது. உங்களுக்கு இந்த விஷயம் தெரிந்திருக்கும் என்று நினைக்கிறேன்" என்ருன் யோகார்.

"எது?"

"இவளும் பவலும் ஒருவரை ஒருவர் காதலிக்கின்றனர்."

"அப்படியா, அவன் என்னிடம் எதையும் சொல்வதில்லை."

"தேச சேவையில் ஈடுபட்டிருப்பவர்கள், கலியாணமே செய்து கொள்ளக் கூடாது. அவர்கள் இன்று இங்கு இருப்பார்கள், நாளை எங்கு இருப்பார்கள் என்பதே நிச்சயமற்றது. என் நண்பன் ஒருவன் இருக்கிருன். அவன் தன்னுடன் தேச சேவையில் ஈடுபட்டிருந்த ஒருத்தியை மணந்தான். என்ன பிரயோசனம்? அவன் வெளியே இருக்கும் சமயம், மனைவி சிறையில் இருப்பாள். அவள் வெளியே வரும்போது, இவன் நாடு கடத்தப்பட்டிருப்பான்.....எனக்கும் ஒரு அருமையான மனைவி வாய்த்திருந்தாள். இதேபோல

நானும் அவளும் ஐந்து வருஷம் வாழ்க்கை நடத்திய பிறகு, அவள் இறந்து விட்டாள்.''

இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர். பிறகு யோகார், "அது இருக்கட்டும். முக்கியமான விஷயத்தைக் கவனிப்போம்'' என்று சொல்லி விட்டு மெள்ள அன்னே செய்யப்போகும் வேலையைப் பற்றி பேசலானன். புத்தகங்களையும், துண்டுப் பிரசுரங்களையும் அன்னே எந்தவிதம் தொழிற்சாலைக்குள் கொண்டு சேர்க்கப் போகிருள் என்பதைக் கேட்டுத் தெரிந்து கொண்டான் யோகார். மற்றவைகளை காலையில் பேசிக்கொள்ளலாம் என்று பக்கத்து அறைக்குத் தூங்கப் போய்விட்டான். அன்னேயும் தூங்கச் சென்ருள்.

மறுநாள் காலை தேநீர் அருந்திய பிறகு, யோகார் சொன்னன்: "நீங்கள் செய்யப் போகும் காரியத்தினல் என்ன ஆகும் தெரியுமா?''

"என்ன ஆகும்?''

"உங்களைக் கைது செய்து சிறைக்குள் தள்ளுவார்கள்''

"நான் இங்கிருந்து யாருக்கு என்ன ஆக வேண்டும்? சந்தோஷமாகப் போகிறேன்.''

"எதற்கும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்; உங்கள் உதவி முக்கியமாக இருக்கிறது; நன்ருக யோசிக்க வேண்டும்.''

அன்னே பதில் சொல்லாமல் சிரித்தாள்.

அன்று பகலே, அன்னே புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்களைத் தன்னுள் பதுக்கிக் கொண்டு, தொழிற்சாலைக்குப் புறப்படத் தயாராஞள். யோகார் அன்னேயின் தைரியத்தைக் கண்டு உள்ளம் பூரித்தான்,

## 9. முதல் வெற்றி

புத்தகங்களையும் துண்டுப் பிரசுரங்களையும் மறைத்து எடுத்துச் சென்ற அன்னை, நேராக மரியா வீட்டிற்கு வந்தாள். மரியா, தயாராகக் கூடையில் வைத்திருந்த பலகாரம் சூப்பு முதலியவற்றைக் கொடுத்தாள். தாமதிக்காமல் கூடையை எடுத்துத் தலைமீது வைத்துக் கொண்டு தொழிற்சாலையை நோக்கி நடந்தாள் அன்னை.

தொழிற்சாலையின் வாசலில் ஒரு போலீஸ்காரனும் மற்றும் இருவரும் இருந்தனர். தொழிற்சாலைக்குள் ஒவ்வொருவரையும் அவர்கள் சோதனை செய்தே உள்ளே போக அனுமதித்தனர். அன்னை போன சமயம் கூட்டமாகச் சிலர் இருந்தனர். அவர்களை ஒவ்வொருவராகச் சோதனை செய்யும்போது நேரம் அதிகமாயிற்று. அன்னை பொறுமை இழந்தாலும் அதை வெளிக்குக் காட்டாமல் போலீஸ்காரனிடம், "பளு தாங்க முடியவில்லை, நான் போகட்டுமா?" என்று கேட்டாள்.

போலீஸ்காரனும் மற்ற இருவரும் அவளை முறைத்துப் பார்த்தனர். பிறகு 'போ' என்று சொல்லி விட்டனர்,

அன்னை மெள்ள நடந்து உள்ளே சென்றாள். ஒரு மரத்தடியில் கூடையை இறக்கி வைத்துவிட்டு, "சூடான சூப்" என்று குரல் கொடுத்தாள்.

அன்னை வருவதைத் தொலைவிலேயே பார்த்த ஐவானும் வேஸ்லியும் அவளை நோக்கி விரைந்து வந்தனர்.

"தின்பண்டம் கொண்டு வந்திருக்கிறாயா?" என்று இருவரும் கேட்டனர்.

ஐவானும் வேஸ்லியும் முன்பே சொல்லி வைக்கப் பட்டவர்கள். 'தின் பண்டம்' என்பது அவர்களுடைய மர்மச் சொல். அன்னை புன்முறுவலுடன் தலை அசைத் தாள். உடன் அவசர அவசரமாக வேறு யாரும் வருவ தற்குள் புத்தகங்களையும், துண்டுப் பிரசுரங்களையும் எடுத்துக் கொடுத்தாள். அவர்களும் அதை மறைத்துக் கொண்டு போய் உள்ளே வைத்து விட்டு திரும்பி வந்தனர். பிறகு சூப்பை அருந்திக் கொண்டே இருவரும் ஏதோ பேசுவது போல் நடித்தனர். அந்தச் சமயத்தில் மேலும் பலர் வந்தனர். அவர்களில் சிவர் பவலுக்கு விரோதிகள். அவர்கள் அன்னையைக் கண்டதும் ஏசத் தலைப்பட்டனர். அவள் பலகாரம் கொண்டு வந்து விற்பனை செய்வதைப் பற்றி பேசினர். 'என்ன செய் வாள், சம்பாதிக்க மகன் இல்லை அல்லவா? அதுதான் அவளே சம்பாதிக்க வந்து விட்டாள்' என்றனர்.

அன்னை பதில் பேசாமல் தன் காரியத்தில் கண்ணு யிருந்தாள். பலகாரக் கூடை காலியானதும் மரியா வீட்டுக்குப் போனாள். அவளிடம் பணத்தையும் கூடை யையும் கொடுத்தாள். சிறிது நேரம் பேசிக்கொண் டிருந்துவிட்டு வெற்றிப் பெருமிதத்தோடு வீடு திரும்பினாள் அன்னை.

வீட்டில் அவள் சந்தோஷமாக இருந்தாள். தன்னுடைய முதல் வெற்றியை தன் மகனிடம் சொல்ல வேண்டுமென்று திட்டமிட்டாள். மேலும் மகன் சென்ற பாதையில் தானும் செல்லுகிறோம் என்ற மகிழ்ச்சி அவளை ஒரு சுற்று பருமனாக்கியது.

அவள் சிந்தனையைக் கலைக்க, குதிரையின் குளம்பு ஓசை கேட்டது. அன்னை திடுக்கிட்டு சப்தம் வந்த திக்கை நோக்கினாள். குதிரை ஒன்று அவள் வீட்டு வாசலில் நின்றது. ஒருவன் கீழே இறங்கி 'அம்மா வந்தனம்' என்றான். மிகவும் பழக்கமான குரலைக் கேட்டு அன்னை வந்தவனை உற்று நோக்கினாள். உடனே சந்தோஷத்தால் அவள் கண்கள் மலர்ந்தன. அவள் கைகளை விரித்து 'வா ஆண்டரி' என்று அழைத்தாள். சட்டென்று அவள் கண்களில் நீர் பெருகியது.

"கவலைப்படாதே அம்மா. பவலைச் சீக்கிரமே விடுதலை செய்து விடுவார்கள். என் பேச்சை நம்பு" என்றான் ஆண்டரி.

அன்னை, அவனை அழைத்துக் கொண்டு உள்ளே சென்றாள்.

"பவல் சௌக்கிமாயிருக்கிறான். உனக்கு அவனுடைய அன்பையும் வந்தனத்தையும் சொல்லி அனுப்பினான். சிறையில் ஒரே கூட்டம். நூற்றுக்கணக்கானவர்கள் இங்கிருந்தும் நகரத்திலிருந்தும் கைது செய்து கொண்டு வரப்பட்டிருக்கின்றனர்" என்றான்.

அன்னை தேநீர் கொண்டு வந்து கொடுத்தாள். ஆண்டரி அதை அருந்திக் கொண்டே "உனக்கு எப்படி பொழுது போகிறது?" என்று கேட்டான்.

"இன்று நான் என்ன செய்தேன் தெரியுமா?" என்று அன்னை, 'புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்களைத் தொழிற்சாலைக்குள் கொண்டு சென்ற'தை விவரித்தாள்.

ஆண்டரி மெல்ல சீட்டி அடித்தான். அவன் கண்கள் சந்தோஷத்தால் விரிந்தன.

"வாழ்க்கை முழுவதும் நான் எதற்காக வாழ வேண்டும்? அடிபடவும், வேலை செய்யவுமா? இதைத் தவிர, என் கணவனிடமிருந்து நான் எதையுமே கண்டதில்லை. இருபது வருஷங்கள் இந்த வாழ்க்கையை அனுபவித்தேன். நான் ஏதும் அறியாத மூடம்!" என்றாள் அன்னை. அவள் நா தழுதழுத்தது. துக்கத்தால் தொண்டை கம்மியது. "கணவன் இறந்தபின் மகன் விஷயத்தில் என் சிந்தனையைச் செலுத்தினேன். அவன் தன் போக்கிலே போனான்...எல்லாம் என் அதிர்ஷ்டம் என்றே நினைக்கிறேன்" என்றாள் அன்னை.

"எல்லோரும் தம்மோடு நெருங்கி யிருப்பதையே நேசிக்கிறார்கள். ஆனால், ஒரு பரந்த இதயம் வெகு தொலைவிலுள்ளதைக் கூட நெருங்கச் செய்யும் சக்தி வாய்ந்தது. நீ உன் பவலை அதிகமாக நேசிக்கிறாய்."

"உண்மைதான். ஆனால் உன்னை அவனிலும் அதிகமாக நேசிக்கிறேன். பாரேன், ஸாஷாவை பவல் காதலிக்கிறான். ஆனாலும் அதைப்பற்றி அவன் என்னிடம் சொன்னதே கிடையாது."

"அது நடக்காத காரியம், பவல் ஒரு அபூர்வ மனிதன்; இரும்பு மனம் கொண்டவன்."

"ஆமாம். அதனால்தான் சிறையில் இருக்கிறான்" என்று கூறி நிறுத்தி மீண்டும், "பழைய வாழ்க்கை இருக்கட்டும், இப்போது நான் செய்த வேலையினால் பெருமிதம்

அடைகிறேன். இம்மாதிரி சேவை செய்யவே விரும்புகிறேன். இந்த வாழ்க்கை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. நான் செய்த காரியம், செய்ய எண்ணியிருப்பவை பற்றி என்னாலேயே என்னை நம்பமுடியவில்லையே. நானா இப்படி மாறிவிட்டேன் என்ற கேள்வி எனக்கு ஏற்படுகிறது. எனக்கு உங்கள் கட்சி பற்றி ஒன்றுமே தெரியாது. எனக்கு யாருமே சொல்லிக் கொடுத்ததும் இல்லை.''

அவள் சொல்லுவதை எல்லாம் ஆண்டரி பொறுமையுடன் கேட்டுக்கொண்டிருந்தான். தூக்கம் வந்ததற்கு அறிகுறியாக கண்கள் மயங்கின. அன்னை, "உனக்குத் தூக்கம் வந்துவிட்டது. நீ போய்த் தூங்கு'' என்று கூறிவிட்டுத் தானும் படுக்கச் சென்றாள்.

## 10. கல்வியில் ஆர்வம்

மறுநாள் அன்னை தொழிற்சாலைக்குச் 'சூப்' எடுத்துச் சென்ற சமயம் வாசலில் காவலாளிகள் அவளை நிறுத்திவிட்டார்கள். தலையில் இருந்த கூடையை பல வந்தமாக இறக்கும்படி கட்டளையிட்டனர். கூடையை ஜாக்கிரதையாகச் சோதனையிட்டனர்.

"சூப் ஜில்லென்று போய்விடும்" என்றாள் அன்னை.

"வாயை மூடு" என்றான் ஒருவன்.

மற்றொருவன் அவள் தோளைப் பிடித்துத் தள்ளி விட்டு, "துண்டுப் பிரசுரங்களை வேலிக்கு அப்பால் போட்டிருப்பாள் என்று நினைக்கிறேன்" என்றான்.

வயதான ஸிஜாவ் வந்தான். "துண்டுப் பிரசுரங் களைப் பற்றி கேள்விப்பட்டாயா? ரொட்டியின்மீது உப்பைத் தூவுவதுபோல, துண்டுப் பிரசுரங்கள் தொழிற் சாலை பூராவும் பரப்பப்பட்டிருக்கின்றன. உன் மகனையும் என் மருமகனையும் வீணாக சிறைக்கு அனுப்பினார்கள். எண்ணங்கள் வெறும் பூச்சிகள் அல்ல. அவற்றைப் பிடித்து நசுக்கிவிட முடியாது என்பது நன்றாகத் தெரிகிறது" என்றான்.

காவலாளிகள் ஏமாந்த முகத்துடன் அவளை உள்ளே செல்ல அனுமதித்தனர்.

சூப் விற்கும் சமயம் ஐவானும் வேஸ்லியும் வந்தனர். சிரித்துக்கொண்டே "சரியான பாடம் கற்பித்தாய் அம்மா !" என்றனர்.

அன்னை பதில் கூருமல் சிரித்தவண்ணம் தன் வேலையைக் கவனித்து வந்தாள். சூப் விற்று முடிந்தது; வீட்டுக்குச் செல்லத் தயாராளுள். அந்தச் சமயம் மூன்று தொழிலாளர்கள் அவ்வழியே பேசிக்கொண்டு போனுர்கள்.

" துண்டுப் பிரசுரங்களில் உண்மையான சில விஷயங் கள் எழுதப்பட்டிருக்கிறதாம். நேரில் படித்துக் கேட்க வேண்டும் என்பதே என் ஆசை " என்ருன் முதல் ஆசாமி.

" எனக்குப் படிக்கத் தெரியாது; ஆனுல் என்னிடம் அது இருக்கிறது " என்ருன் இரண்டாவது ஆசாமி.

" இயந்திரம் இருக்குமிடத்துக்குப் போகலாம் வாருங்கள். நான் படிக்கிறேன் " என்ருன் மூன்ரு வது ஆசாமி.

வீடு திரும்பிய அன்னை, ஆண்டரியிடம் " படிக்கத் தெரியாவிட்டால் எவ்வளவு கஷ்டமாக இருக்கிறது என்பதை, இப்பொழுதுதான் வயதான தொழிலாளர்கள் எண்ணத் தொடங்கியிருக்கின்றனர். அவர்கள் மாத்திரம் என்ன ? நான் கூடத்தான் ! சிறுவயதில் கொஞ்சம் படிக்கக் கற்றுக்கொண்டேன். பிறகு மறந்து விட் டேன் " என்ருள் அன்னை.

" மீண்டும் படிக்கக் கற்றுக்கொள் " என்ருன் ஆண்டரி.

" இந்த வயதிலா ?"

ஆண்டரி பதிலே பேசாமல் ஒரு புத்தகத்தை எடுத்தான். ஒரு எழுத்தின்மீது கத்தியை வைத்து " இது என்ன எழுத்து ?" என்று கேட்டான்.

" ஆர் "

" இது ?'

" ஏ "

" அன்னை வெட்க மடைந்தாள். ஆண்டரி சிரித்துக் கொண்டே, "ஒன்றும் மறந்து விடவில்லை; படித்தால் வந்துவிடும்" என்ருன்.

" உண்மையிலேயே நீ எனக்குக் கற்றுக்கொடுக்கப் போகிருயா ?"

" அதில் தவறு என்ன ?"

ஆண்டரி மேலும் மேலும் 'அது என்ன ? இது என்ன ?' என்று கேட்கத் தலைப்பட்டான். அன்னையும் சொல்லிக்கொண்டே வந்தாள். " சாகிற காலத்தில் படிக்கவா கற்றுக்கொள்ள வேண்டும் ?" என்ருள் அன்னை.

ஆண்டரி அதைப் பொருட்படுத்தவில்லை. படிக்கத் தெரியாததால் உண்டாகும் கஷ்டங்களை விளக்கினுன். அதனுல் வாழ்க்கை எவ்வளவு துன்பம் அடைகிறது என்பதையும் எடுத்துச் சொன்னுன்.

" வாலிபமாயிருக்கும்போது ஒன்றும் தெரியாது. என் வயதுவரை வளர்ந்துவிட்டால் மனதில் வேறு எண்ணமே ஏற்படாது. சதா கவலைதான் " என்ருள் அன்னை.

ஆண்டரி போன பின்பு, அன்னை அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்து அதில் பார்வையைச் செலுத்தினாள். மறந்துபோன படிப்பை சிறிது நினைவு படுத்திப் படிக்கத் தொடங்கினாள்.

யாரோ கதவைத் தட்டும் சப்தம் கேட்டது. "யார் அது ?" என்று கேட்டுக்கொண்டே போனாள் அன்னை.

கதவைத் திறந்ததும் ரிபின் தாடியை உருவியபடி நின்றுகொண்டிருந்தான். "முன்பெல்லாம் யார் வந்தாலும் கேள்வி கேட்காமல் உள்ளே விட்டுக்கொண்டிருந்தாயல்லவா ?.........ஆண்டரி இருப்பான் என்று எண்ணினேன். இன்று அவனைப் பார்த்தேன், மனிதனைச் சிறைச்சாலை கெடுத்துவிடவில்லை ; மடத்தனம்தான் ஒருவரைக் கெடுத்துவிடுகிறது." என்றான் ரிபின். அவன் உள்ளே வந்ததும் புத்தகம், துண்டுப்பிரசுரம் எல்லாம் எங்கிருந்து வருகிறது ? யார் இவற்றை எழுதுகிறார்கள் ? உனக்குத் தெரியுமா ?" என்று கேட்டான்.

அன்னை கவலை தோய்ந்த முகத்துடன், "தெரியாது" என்றாள்.

"நான் சொல்லுகிறேன். புத்தகம், துண்டுப்பிரசுரம் இவைகளை வெளியிட பணம் தேவை இல்லையா ? பணம் எங்கிருந்து வருகிறது ?—எல்லாம் நமது எஜமானர்கள் செய்யும் வேலைதான். அவர்களே பணம் போட்டு பிரசுரிக்கிறார்கள் ; நம்மிடையே விநியோகிக்கிறார்கள் ; சமயம் வந்தால் நம்மை முன்னுக்குத் தள்ளிவிட்டு அவர்கள் மறைந்துவிடுகின்றனர் ; உண்மை எனக்குத் தெரிய வேண்டும் என விரும்பினேன். இப்பொழுது எனக்குத் தெரிந்துவிட்டது. ஆனால் எஜமானர்களை எதிர்த்துக் கொள்ள நான் விரும்பவில்லை" என்றான்.

"நீ சொல்லுவதை நான் நம்பமாட்டேன். புத்தகம் துண்டுப் பிரசுரங்களை வெளியிடுபவர்கள் நீ சொல்லுவது போன்ற ஆசாமிகள் அல்ல. அவர்கள் மனித ரத்தத்தை உறிஞ்சுபவர்களும் அல்ல" என்றாள் அன்னை.

"உண்மையாக உழைப்பவர்கள் இப்படித்தான் நினைத்திருக்கிறார்கள். எனக்குத் தெரிந்தவரை இவற்றால் ஒரு பயனும் ஏற்படாது."

"உன் மனதில் என்னதான் இருக்கிறது? சொல்லேன்."

"எனக்கு உண்மை தெரியும். படிக்கவும் பேசவும் தெரியும். யாருக்கு முதலில் சேவை செய்யவேண்டும் என்பதும் தெரியும். அதனால் நான் கிராமங்களுக்குச் செல்லப்போகிறேன். கிராம மக்கள் புரிந்து கொள்ளும் வகையில் அவர்களிடையே பிரசாரம் செய்வேன்."

"வேலையை விட்டுவிடப் போகிறாயா?"

"விட்டாகி விட்டது; நாளைக் காலையில் கிராமத்திற்குப் போகிறேன்; நினைவிருக்கட்டும் நான் வருகிறேன்" என்று கூறிவிட்டு ரிபின் சென்றான். அவனை வழியனுப்பிவிட்டு அன்னை கதவைத்தாளிட்டு விட்டு, உள்ளே வந்தாள். அவள் மனம் பூராவும் ரிபின் கிராமத்துக்குப்போய் பிரசாரம் செய்யப்போவதிலேயே லயித்திருந்தது.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஆண்டரி வந்தான். அவனிடம் ரிபினைப்பற்றிய விஷயங்களை அன்னை சொன்னாள். அவன் ஆச்சரியத்தோடு "போகட்டும், கிராமத்திற்குப் போகட்டும். கிராமத்தவர்களுக்கு உண்மையை எடுத்து விளக்கட்டும். இங்கு அவனால் இருக்க முடியாது" என்றான்.

" இந்த வெளியீடுகளுக்கு 'யாரோ எஜமானர்கள்' இருப்பதாக ரிபின் சொல்லுகிறனே அது உண்மையா ?"

" யாரோ உன்னைத் தவறான பாதையில் தள்ளப் பார்க்கின்றனர். உண்மையைக் கூறுகிறேன் கேள். நாங்கள் அனைவரும் பலரிடம் பணம் சேகரித்து இந்தக் காரியத்தைச் செய்கிறோம். உதாரணமாக ஐவானை எடுத்துக் கொள்ளலாம். அவருக்கு மாதச் சம்பளம் எழுபத்தைந்து ரூபிள்கள். அதில் நம் காரியத்திற்காக ஐம்பது ரூபிள்களைக் கொடுத்து விடுகிறார். இம்மாதிரி பலர்; கல்லூரி மாணவர்கள்கூட காலும் அரையுமாகச் சேர்த்து உதவுகின்றனர்; இவர்களில் எத்தனையோ ரகம். சிலர் நம்மை விட்டுப் பிரிவார்கள்; பலர் நம்முடனேயிருந்து முன்னேறுவார்கள்" என்றான் ஆண்டரி.

அவன் எளிமையாகவும் தெளிவாகவும் பேசினன். அவன் சொன்னவை, அன்னையின் மனதில் அப்படியே பதிந்தது; இருந்த சந்தேகம் தானகவே பறந்தது.

அவன் மேலும், "இரவு படுத்துப் பொழுது விடிந்ததும் கண்விழித்துப் பார். எங்கும் அசுத்தமாகவும், பனி படிந்தும் இருக்கும். எல்லோரும் சோர்வடைந்தும் பசியுடனும் இருப்பார்கள். மனித சமூகமே சார் பிழிந்தெடுத்த சக்கைபோல காணப்படும்" என்று கூறிவிட்டு சிறிது நேரம் மௌனமாக அன்னையின் முன்நின்று உற்றுப் பார்த்தான். பிறகு, "நான் சொன்னது உன் மனதைக் கலக்கியிருக்கலாம். மனிதனை நம்பவே கூடாது; அவனைக் கண்டு வெறுக்க வேண்டும்; மனிதன் வாழ்க்கையில் இரு கூறுகப் பிரிக்கப்பட்டிருக்கிறான். நீ அவனை நேசிக்கத்தான் விரும்புகிறய். அது எப்படிச் சாத்தியமாகும்? உன்னை மனிதப் பிறவி என்று கருதாதவன், மிருகத்தைப் போல அடிக்கிறான், உதைக்கிறான்.

உனக்கு எதிராக நடக்கிறான்—அப்படிப்பட்டவனை நீ எப்படி மன்னிப்பாய், மன்னிக்கவே கூடாது. அந்த அவமானம் உன்வரை நின்றுவிடவில்லை. எங்களையும் சார்ந்ததே! ஒருமுறை பலப்பரீட்சை செய்துபார்த்தவன், பிறர் முதுகையும் ஒடிக்கப் பார்ப்பான். அதற்கு இடம் கொடுக்கக்கூடாது. எல்லோரையும் ஒரே மாதிரியாகக் கருதிவிடக்கூடாது. மனிதனை நிதானிப்பதில் ஜாக்கிரதை வேண்டும்'' என்றான்.

ஆண்டாரியின் பேச்சினால், அன்னைக்குத் தன் கணவனின் பெரிய உருவம், கண்முன் கனவுபோல் காட்சி தந்தது.

ஆண்டாரி மேலும் ஏதோ பேச எண்ணினான். ஆனால், என்ன நினைத்துக் கொண்டானோ, " நீ கொஞ்சம் படிக்கிறாயா " என்று கேட்டான்.

" என் கண்கள் வரவர மங்கிவருகின்றன. கண்ணாடி போட்டுக் கொண்டால் நல்லது " என்றாள் அன்னை.

அன்னை, அடிக்கடி கேட்கும் கேள்விகளிலிருந்து அவள் தனிமையில் படிக்கிறாள் என்பதை, ஆண்டாரி யூகித்துக்கொண்டான். தன் முன்னிலையில் படிக்க சங்கோஜப் படுகிறாள் என்பதாலேயே, அப்படிச் சாக்குப் போக்குச் சொல்லுகிறாள் என்பதையும் அவன் தெரிந்து கொண்டான். அதை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் " வருகிற ஞாயிற்றுக்கிழமை நகரத்திற்குப் போய் கண்ணாடி வாங்கி வரலாம்'' என்றான் அவன்.

## 11. மகன் விடுதலை

சிறையிலிருக்கும் மகனைச் சந்திக்க அன்னை பல முறை அதிகாரியிடம் அனுமதி கோரினள். ஒவ்வொரு முறையும் அதிகாரி மிகவும் மரியாதையாக ‘ இப்பொழுது முடியாது. அடுத்த வாரம் பார்க்கலாம் ’ என்றே சொல்லி வந்தான். அன்னை மனம் உடைந்துபோன சமயம் அனுமதி கிடைத்தது.

அன்று மகனைக் காணப்போகிறோம் என்ற சந்தோஷத்தில் சிறிது நேரம் முன்பே சிறைச்சாலைக்குச் சென்றாள். அவளைப்போல், பலர் அங்கு வந்து காத்திருந்தனர். பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். எதையும் காதில் போட்டுக்கொள்ளாமல் அன்னை தன் காரியத்தில் கண்ணாக இருந்தாள். பலர் தங்கள் உறவினர்களைச் சந்திக்க அதிகாரிகளால் அழைத்துச் செல்லப்பட்டனர். தன் முறை எப்போதோ என்று அன்னை ஏங்கிக் கொண்டிருந்தாள். வெகு நேரத்திற்குப் பிறகு அதிகாரி ஒருவன் வந்து, “நீதானே நில்வோனா?” என்றான். ‘ஆமாம்’ என்று அன்னை தலை அசைத்தாள்.

அதிகாரி தன்னுடன் வருமாறு அழைத்தான். அன்னை அவனைப் பின் தொடர்ந்தாள்.

ஒரு சிறு அறையில் பவல் நின்றுகொண்டிருந்தான். அன்னை அவனைக் கண்டதும், கட்டி அணைத்துக் கொண்டாள். அதிகாரி இருவரையும் பிரித்து, விலகி யிருக்கும்படி கூறினான். விலகி நின்றுகொண்டு முதலில் சௌகரியத்தைப் பற்றி இருவரும் விசாரித்துக் கொண்டனர். பிறகு அன்னை: "உன்னை ஏன் சிறையில் வைத்திருக்கிறார்கள்? புத்தகங்களும் பிரசுரங்களும் தான் மீண்டும் தொழிற்சாலையினுள் வெளியாகின்றனவே" என்றாள்.

பவலின் கண்கள் விரிந்தன. "அப்படியா?"

"அந்தப் பேச்சு கூடாது! சட்ட விரோதம்" என்று அதிகாரி எச்சரித்தான்.

"சரி சரி, அந்தப் பேச்சு வேண்டாம்; நீ என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான் பவல்.

"மரியாவின் பலகார விற்பனையை நான் செய்கிறேன்; சூப், பலகாரம் இவற்றை தொழிற்சாலைக்கு எடுத்துச் செல்லுகிறேன்" என்றாள் அன்னை.

பவல் தெரிந்து கொண்டான். அவன் மனதினுள் சந்தோஷம் அடைந்தான். "நல்லது அம்மா! அந்த வேலை உனக்கு கஷ்டமாக இல்லையே?"

"துண்டுப் பிரசுரங்கள் தொழிற்சாலையில் மீண்டும் தோன்றியதும் என்னைச் சோதனை செய்தார்கள்."

"மீண்டும் அந்தப் பேச்சா? மனிதனைச் சிறையில் அடைப்பது எதற்காக? வெளி விஷயங்கள் உள்ளே தெரியப்படாது என்பதற்காகத்தானே! நீ அந்த விஷயங்

களையே மறுபடியும் ஒப்புவிக்கிருயே?" என்று அதிகாரி கூக்குரலிட்டான்.

"வேண்டாம் அம்மா அந்தப் பேச்சு! இந்த அதிகாரி நல்லவர்; நம்மால் அவருக்குத் தீங்கு ஏற்படக் கூடாது. நீ சொல்லும் விஷயத்தால் தனக்குக் கெடுதல் ஏற்படலாமோ என்று பயப்படுகிருர் அவர்" என்ருன் பவல்.

"நேரமாகி விட்டது" என்ருன் அதிகாரி.

தாயும் மகனும் தழுவிக்கொண்டு விடை பெற்றனர்.

வீடு வந்ததும், ஆண்டரியிடம் எல்லாவற்றையும் அன்னை விவரித்தாள். "தான் மறை முகமாகக் கூறியதை பவல் தெரிந்து கொண்டான்" என்ருள்.

"ஜனங்களுக்கு எத்தனையோ விஷயங்கள் தேவையா யிருக்கின்றன. ஒரு தாய்க்கு வேண்டிய தெல்லாம் அன்பு தான்! ஒரு மனிதனின் மனதுக்குத் தேவையானதைவிட உனக்கு அதிகமாகக் கிடைக்கும் நிச்சயமாக!" என்ருன் ஆண்டரி.

"நீ என்னவோ இப்படிச் சொல்லுகிருய். சிறைச் சாலைக்கு வந்த பலரையும் பார்த்தேன். தங்கள் உறவினன், சிறையில் வாடுவதைப் பற்றி அவர்கள் கவலைப்பட்ட தாகவே தெரியவில்லை. தங்கள் மனம் போனபடி ஏதேதோ பேசிக் கொண்டிருக்கிருர்கள்"

"அது உண்மைதான். நம்மிடத்தில் சட்டம் கடுமை யாக இருப்பது போல் அவர்களிடம் இல்லை. கொலை களவு செய்பவனுக்குக் கூடச் சில சலுகை உண்டு; சட்டம் அவர்களுக்கு ஒரு பாதுகாப்புத் தருகிறது. நமக்கோ அது நம் கை கால்களை நீட்ட முடக்க முடியாதபடி போடப்பட்டும் விலங்கு"

மூன்று நாட்களுக்குப் பிறகு, மாலை நேரம் நிக்கோலாய் கையில் ஒரு சிறிய பொட்டலத்துடன் வந்தான். அந்தச் சமயம் அன்னையுடன் ஆண்டரியும் இருந்தான். வந்தவன் உட்காராமலேயே, “ இன்று இங்கே படுத்துக் கொள்ள எனக்கு அனுமதி தரவேண்டும் ” என்றான்.

“ இதை நீ கேட்கவே வேண்டாம். தாராளமாகப் படுத்துக் கொள்ளலாமே ” என்றாள் அன்னை.

“ பெற்றோர்களைக் கண்டு இந்தக் காலத்தில் குழந்தைகள் வெட்கப்படவேண்டும்; உங்களைச் சொன்னதாக நீங்கள் நினைக்க வேண்டாம். நான் இனி என் தகப்பன் வீட்டிற்குப் போகமாட்டேன். எனக்குத் தகப்பன் என்று ஒருவன் இல்லவே இல்லை ” என்றான்.

அவன் மனதில் ஏதோ சஞ்சலம் இருக்கிறது என்பதை இருவரும் தெரிந்து கொண்டனர். “ சாப்பிட ஏதேனும் கொண்டு வருகிறேன் ” என்று அன்னை உள்ளே சென்றாள்.

“ சிலரைக் கொன்று விடவேண்டும் ” என்றான் நிக்கோலாய்.

“ ஏன் ?”

“ செய்யும் வேலைக்குக் குறுக்கே நிற்கிறார்கள் ”

“ உன் வேலைக்குக் குறுக்கே நிற்பவர்கள் யார் ?”

“ எத்தனையோ பேர் ; ஐஸாவ் கார்பாவ் இருக்கிறானே அவனை லேசில் விடமாட்டேன். அவன் மண்டையை நொறுக்கி விடப்போகிறேன். அவன் ஒற்றன் வேலை செய்கிறான் ; அவனால்தான் என் தகப்பனின் மூளையும் கெட்டுவிட்டது. தகப்பனும் ஒற்றன் வேலை செய்யத் தலைப்பட்டிருக்கிறான்.”

“ நாம் இவர்களை எல்லாம் எதிர்த்துப் போராடும் காலத்தில் ஒரு பெரிய கசாப்பு வேலையே நடைபெறும். போராட நமக்கு எப்பொழுது அழைப்பு வருமோ தெரியாது. முதலில் நாம், கைகால்களுக்குப் பலத்தைப் பெருக்கிக் கொள்வதைவிட, மூளைக்கு ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அதுதான் எனக்குத் தெரியும் ” என்றான் ஆண்டரி.

“ மனதிற்கு ?” என்றான் நிக்கோலாய்.

“ மனதிற்குக் கூடத்தான் !”

அன்னை தேநீர் கொண்டு வந்தாள். மூவரும் அருந்தினார்கள். பிறகு, நிக்கோலாய் படுக்கையை விரித்தான். அந்தச் சிறிய அறையில் இருவர் படுக்க இடம் போதாது. இருப்பினும் அதைப் பொருட்படுத்தவில்லை. அன்னை படுக்கையில் படுத்த வண்ணம் “ உலகத்தில் ஜனங்கள் எப்பொழுது சுகமாக இருக்கப் போகிறார்களோ ?” என்றாள்.

“ வெகு சீக்கிரமே அப்படிப்பட்ட நாள் வரும் ” என்றான் ஆண்டரி.

* * *

நாட்கள் அதி வேகமாக ஓடிக் கொண்டிருந்தன. புதியவர்கள் பலர், அன்னையின் வீட்டிற்கு வரத் தொடங்கினார்கள். சிலர் புத்தகம், துண்டுப் பிரசுரம் முதலியவற்றைக் கொண்டு வந்தனர். வந்தவர்கள் வெகுநேரம் வரை இரவு ஆண்டரியுடன் மெல்லிய குரலில் பேசிக் கொண்டிருப்பார்கள். போகும் சமயம், முகத்தை நன்றாக மூடிக்கொண்டு மறைந்து செல்லுவார்கள் ; அன்னை முதலில் பார்த்தது போல் இப்பொழுது இல்லை. எல்லாம்

நன்ருகப் பழகிவிட்டதால் மிகவும் தைரியமாக இருந்தாள். வந்தவர்கள் அன்னையிடத்தில் மிகவும் மரியாதையுடன் நடந்து கொண்டனர். சிலர் ' அம்மா ' என்றும், சிலர் ' காம்ரேட் ' என்றும் அழைப்பார்கள்.

முன்பெல்லாம், தான் இருப்பது வீண் என்று அன்னை கருதியிருந்தாள். அந்த எண்ணம் இப்பொழுது மாறி விட்டது ; கணவன் இருக்கும் காலத்திலும் தான் வீண் என்றே கருதியிருந்தாள். பவல் பெரியவனுகி வெளியில் போய்வரத் தலைப்பட்டதும் மகனுக்குக் கூட, தான் தேவை இல்லை என்று பட்டது. ஆனுல் தற்சமயம், தான் சமூகத்திற்குப் பெரிதும் உதவுவதாகவும், தான் இருப்பது அவசியம் என்றும் எண்ணினுள். அதனுல் அவள் வாழ்க்கை வறண்ட பாலைவனமாக இல்லாமல் சந்தோஷ மாக இருந்தது.

தொழிற் சாலைக்குப் புத்தகம், துண்டுப் பிரசுரம் முதலியவற்றை அன்னை அடிக்கடி எடுத்துச் சென்ருள். காவலாளிகளிடமிருந்து தப்ப பல வழிகளைக் கையாண் டாள். தொழிற்சாலையைச் சுற்றியுள்ள ஒற்றர்களை நன்ருகத் தெரிந்து வைத்துக் கொண்டிருந்தாள். அன்னை பல முறை சோதனைக்குள்ளானுள். ஒவ்வொரு சமயமும் தப்பித்துக்கொண்டே வந்தாள். காவலாளிகளையும், ஒற்றர் களையும் ஏமாற்றி வேடிக்கை பார்க்க அன்னை நினைக்கும் போது அதைச் செய்தே முடிப்பாள். புத்தகம், துண்டுப் பிரசுரங்களை எடுத்துச் செல்லாத சமயம், அவர்களைக் கண்டு பயப்படுவது போலவும், சந்தேகப்படும்படி யாகவும் நடந்து கொள்ளுவாள். அதைக்கண்ட அவர்கள் சோதனையிடமுற்படுவார்கள். பிறகு ஏமாந்துபோவார்கள். அன்னை சிரித்துக்கொண்டும், ரசித்துக்கொண்டும் தன் வேலையைக் கவனிக்கச் சென்று விடுவாள்.

விடுமுறை தினமான அன்று, அன்னை கடைத் தெருவுக்குச் சென்று திரும்பினுள். வீட்டின் கதவைத் திறந்து உள்ளே பார்த்த சமயம் அவள் திகைத்து நின்று விட்டாள்.

" அதே அம்மா தான் !" என்ருன் ஆண்டரி.

பவல் அதிவேகமாக அன்னையின் பக்கம் தன் பார்வையைச் செலுத்தினுன்.

" ஆஹா, வந்துவிட்டாயா பவல் ?"

" உண்மையிலேயே நீதான் என் அன்னை ; என் அருமைத் தாய் " என்று கூறி அன்னையின் முன் வந்து அவளை அன்புடன் அணைத்துக் கொண்டான். " நான் என்ன செய்து விட்டேன் பவல், பிரமாதமாகப் புகழ்வதற்கு. எல்லாம் நீ செய்ததுதானே !" என்ருள் அன்னை.

ஒரு உயர்ந்த லட்சியத்திற்கு நீயும் உதவி செய்தது மிகவும் வரவேற்க வேண்டியதுதான். உனக்கு நான் எப்படி நன்றி தெரிவிப்பது ? இப்படிப்பட்ட அன்னை கிடைத்ததே எனக்குப் பெருமை அல்லவா ?" என்ருன் பவல்.

" ஆண்டரி பல விஷயங்களை எனக்குச் சொல்லிக் கொடுத்தான். படிக்கக்கூட கற்றுத்தர விரும்பினுன் ; யோகார் இருக்கிருரே அவர் என் தாய் ஊரைச் சேர்ந்தவர் "

" ஆண்டரி உனக்குப் படிக்கக் கற்றுத்தர முயற்சித்தான். நீ வெட்கப் பட்டுக்கொண்டு மறைவில் படிக்க ஆரம்பித்தாயாக்கும் " என்ருன் சிறிது கிண்டலாக பவல்.

" அதுகூட உனக்குத் தெரிந்து விட்டதா ?" என்று, வெட்கமும் சந்தோஷமும் கலந்த தொனியில் சொன்னுள் அன்னை.

"பவேலைப் பாருங்கள் அம்மா! புரட்சிக்காரர்களைப் பழி வாங்குவதற்குப் பதிலாக, சர்க்கார் அவர்களைக் கொழுக்கவைத்து அனுப்புகிறது" என்ருன் ஆண்டரி.

மூவரும் சாப்பிட உட்கார்ந்தனர்; பல விஷயங்கள் குறித்துப் பேசினர். அவற்றில் ரிபினைப்பற்றிய பேச்சு வந்தது. ரிபின் செய்யப் புகுந்த விஷயமாக, ஆண்டரிக்கும் பவலுக்கும் விவாதம் ஏற்பட்டது. இதுபோல் அவர்கள், பலமுறை பல விஷயங்கள்பற்றி விவாதித்திருக்கிருர்கள். விவாதத்தின்போது பலமாகக் கத்துவார்கள். சண்டை போடுவது போலவும் தோன்றும். ஆனுல் இருவரும் மறு விநாடியே அடங்கி விடுவார்கள். அதேபோலத்தான் இன்றும் நடந்தது. கடைசியாக, "ஐயா, நீங்கள் நன்ருகச் சாப்பிடுகிறீர்கள்; ஆனுல் அவசரத்தில் அள்ளிப் போட்டுக் கொண்டு விடுகிறீர்கள். தொண்டையில் விக்கிக்கொள்ளப் போகிறது. நன்ருக மென்று விழுங்குங்கள்" என்ருன் ஆண்டரி பவலைப் பார்த்து.

அன்னை வயிறு குலுங்கச் சிரித்தாள்.

# 12. மே தின முயற்சி

வஸந்த காலம் நெருங்கிக் கொண்டிருந்தது. எங்கும் புழுதி படிந்து காணப்பட்டது.

மே தினம் கொண்டாட ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. தொழிற்சாலைகளிலும் கிராமங்களிலும் துண்டுப் பிரசுரங்கள் காற்றைப் போல் எங்கும் பரவலாயிற்று. மே மாதம் முதல் தேதி விடுமுறை தினமாக அனுஷ்டிக்க பிரசாரம் நடந்து வந்தது.

யோகார் அடிக்கடி பவல் வீட்டிற்கு வரலானர். அவருடன் பல தோழர்களும் வந்தனர். "தற்கால முறைகளை மாற்ற நாம் பாடுபட வேண்டும்; தோழர்களே அதைவிட நம் முறைகளை அதிவேகமாகச் செய்து முன்னேற அதிகக் கஷ்டப்பட வேண்டும். நான் ஒரு ஜதை பூட்ஸ் வாங்க வேண்டும். இல்லாவிட்டால் முடியாது" என்று யோகார் நண்பர்களிடையே ஹாஸ்யமாகவும் கருத்துடனும் சொல்வார்.

நாட்ஷா, ஸாஷா போன்ற பெண்களும் அடிக்கடி வரலானர்கள். ஒரு நாள் ஸாஷா வந்தாள். "நீ தான்

ஊர்வலத்தின்போது, நமது கொடியை ஏந்திச் செல்லப் போகிருயா ?" என்று கேட்டாள் பவலேப் பார்த்து.

" ஆமாம் " என்ருன் சாவதானமாக பவல்.

" முடிவாகி விட்டதா ?"

" முடிவாகி விட்டது."

" மீண்டும் சிறைவாசமா ? அது உன்ஞல் முடியாது"

" ஏன் ?"

" வேறு யாராவது அந்த வேலேயைச் செய்யட்டுமே ! நீயும் ஆண்டரியும் எவ்வளவு முக்கிய மானவர்கள் தெரியுமா ? புரட்சிப் பணியில் நீங்கள் முதன்மையான வர்கள். உங்களேக் கைது செய்தால் வெகு தொலேவிற்குக் கொண்டுபோய் விடுவார்கள். நன்ருக யோசித்துப் பார் !"

" எல்லாவற்றையும் யோசித்தே முடிவு செய்து விட்டேன் "

" எனக்காகக் கூட உன் திட்டத்தை மாற்றிக் கொள்ள மாட்டாயா ?"

" நீ அந்த மாதிரி பேசக் கூடாது " என்ருன் பவல்.

அன்னே கூடச் சிறிது அசந்து போஞள். காதலி சொல்லுவதைக் கூட அவன் கேட்கவில்லேயே என்று கலங்கிஞள்.

" சரி உன் இஷ்டம் !" என்று கூறிவிட்டு ஸாஷா சென்று விட்டாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அன்னே பவலிடம் வந்து,

"மே மாதம் முதல்தேதி நீ என்ன செய்யப்போகிருய்?" என்று பேச்சைத் துவக்கிஞள்.

"தொழிற்சாலையில் மே மாதம் முதல்தேதி, விடுமுறை தினமாக முதலாளிகள் அறிவிக்க வேண்டும். இல்லா விடில் வேலை நிறுத்தம் செய்ய உத்தேசித்திருக்கிறோம். ஊர்வலம் நடைபெறும். ஊர்வலத்தின்போது, முதலில் நமது கட்சிக் கொடியை நான் ஏந்திச் செல்லுவேன்"

அன்னையின் கண்கள் சிவந்தன. ஒரு வறண்ட உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. பவல் அன்னையின் செயலைக் கண்டு, அவள் கையைத் தன் கையில் எடுத்துக் கொண்டான். நான் இதைச் செய்தே ஆகவேண்டும். நான் சொல்லுவதைக் கேள். அதுதான் என் மனதிற்குச் சந்தோஷத்தை அளிக்கும். நீ வருத்தப்படக் கூடாது. சந்தோஷமாக இக்காரியத்துக்கு ஒவ்வொரு தாயும் தங்கள் புதல்வர்களை அனுப்ப வேண்டும். அதனால் அவர் களுக்கு மரணமே சம்பவித்தாலும் கண் கலங்கலாமா?" என்றான்.

"நான் ஏதாவது சொன்னேனா? உங்கள் கட்சி வேலையில் நான் குறுக்கிட்டதே இல்லை; உனக்காகத்தான் கவலைப் படுகிறேன். அதுதான் தாயின் தனி வழி!"

பவல் அவளை விட்டு விலகிச் சென்றான். அவனைத் தனியாகச் சந்தித்த ஆண்டரி "உன்னுடைய வீரத்தைப் பற்றி உன் அன்னையிடமே பேசுவதா? அன்னையிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதே உனக்குத் தெரியவில்லை. அவள் மனம் நோகும்படியாகப் பேசுவது தான் வீரத்தனமா?" என்று கேட்டான்.

"நான் என்ன செய்வது? எதையும் யாரிடமும் மறைக்கக் கூடாது என்பதே என் எண்ணம்" என்றான் பவல் வருத்தத்துடன்.

மூவரும் தேநீர் அருந்தியபின் படுக்கச் சென்றனர். படுக்கையில் படுத்த அன்னை உதட்டை நன்முக மூடிக் கொண்டாள். தான் அழுவது வெளியில் தெரியக் கூடாது எனக் கருதினள். ஆனல் கண்கள், அவளுடைய கட்டளைக்கு இணங்க மறுத்தன ; நீரைப் பெருக்கிய வண்ணமிருந்தன.

## 13. ஒற்றன் கொலை

மறுநாள் பவலும் ஆண்டரியும் வெளியில் சென்றார்கள். சிறிது நேரத்திற் கெல்லாம் கோர்ஸனேவா வந்தான். " ஐஸே கொல்லப்பட்டான் " என்றான்.

" யார் கொன்றது ?" என்று அன்னை வருத்தத்துடன் கேட்டாள்.

"யாரோ ஒருவன் ஐஸேயைக் கீழே தள்ளி அடித்துக் கொன்றானும்."

ஐஸேயின் சடலத்தைக் காண அன்னை வெளியே வந்தாள். வழியில் மரியாவைச் சந்தித்தாள். " யார் கொன்றிருப்பார்கள். எல்லாம் உங்கள் கட்சி ஆசாமிகளாகத்தான் இருக்கும் ; ஐஸே ஒற்றன் வேலை பார்த்து வந்தான் " என்றாள் மரியா.

" அப்படி நினைக்கவே கூடாது.........யார் குற்றம் செய்தானே அவன் தண்டனை அடைந்தே தீருவான் " என்று சொல்லி அன்னை வேகமாக நடந்தாள்.

ஐஸே சடலம் கிடந்த இடத்தில் கூட்டம் கூடி விட்டது. ஒரு போலீஸ்காரன் காவல் இருந்தான். ஐஸே

தூங்குவது போலக் காணப்பட்டான். உடம்பில் ஒரு ரத்தக் காயம் கூட இல்லை.

அன்னை வீட்டுக்கு திரும்பி வந்தாள். வழி முழுதும் அவள் கண்முன் நிக்கோலாய் தோன்றிக் கொண்டிருந்தான். முன்பு ஒரு நாள் அவன் ஐஸேயைப் பற்றிச் சொன்னது அவள் நினைவுக்கு வந்தது. அவன்தான் இக் காரியத்தைச் செய்திருக்க வேண்டும் எனக் கருதினாள்.

வீட்டில் பவலும் ஆண்டரியும் இருந்தனர். ஐஸேயின் மரணத்தைச் சொல்லிவிட்டு "ஒருவன் கூட அவன் செத்ததற்கு வருத்தப்படவில்லை......நிக்கோலாய் என்ன ஆனான்?" என்றாள்.

"அவன் நேற்றே நதிக்கரைப்பக்கம் போய்விட்டான். அவன் இருந்திருந்தால் அவன்மீதுதான் பழிசுமந்திருக்கும்" என்றான் பவல்.

சாப்பிடும்பொழுது பவல் திடீரென்று கரண்டியைக் கீழே போட்டுவிட்டு "எனக்கு இதுதான் அர்த்தமாக வில்லை" என்றான்.

"எது அர்த்தமாகவில்லை?" என்று கேட்டான் ஆண்டரி.

"ஒன்றைத் தின்பதற்காக அதைக் கொல்வதே கெட்டது. மிருகத்தனமானது. அதுவும் மனிதனை மனிதன் கொல்வது மிகவும் கேவலமானது. எப்படித் தான் ஒருவனைக் கொல்ல மனம் வருகிறதோ?"

"கொன்றவன் மிருகமே தான்!"

"அது தெரியும் எனக்கு......நீ இம்மாதிரி கொல்லத் துணிவாயா?"

"என் வரையில் நான் ஒரு உயிரையும் கூடத் தொடமாட்டேன். ஆனால் தோழனே, பொது நலனுக்காக எதையும் செய்யத் தயங்கமாட்டேன். என் சொந்த மகனையேகூடக் கொன்று விடுவேன்" என்றான் ஆண்டரி வீராவேசமாக.

அன்னை திடுக்கிட்டாள்.

"வேறு வழி இல்லை அம்மா! நம் வாழ்க்கை அப்படிப்பட்டது" என்றான் பவல் அன்னையிடம்.

ஆண்டரி கையை வீசிக்கொண்டு எழுந்தான். "சில சமயங்களில் மனிதனின் செயலைத் தடை செய்யவே முடிவதில்லை. முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பவனை அகற்ற நினைக்கிறார்கள். பணத்திற்காகப் பிறரைக் காட்டிக் கொடுக்க நினைப்பவனை ஒழிக்கக் கருதுகிறார்கள்; மனித உயிரைக் காப்பதற்காக போலீஸ், ராணுவம் இருக்கிறது. ஆனாலும் அவர்களாலேயே நூற்றுக்கணக்கானவர்கள் கொல்லப்படுகிறார்கள். அவர்கள் தொழிலை நான் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. தடையாக இருப்பவனைக் கொல்வதால் ஒரு பிரயோசனமுமில்லை. நான் என்ன செய்கிறேனோ அந்தக் கறை என்னை விட்டுப் போகாது" என்று சொல்லி அவன், சிறிது முன்னே நடந்தான்.

அவனுடைய வேதாந்தப் பேச்சைக் கேட்ட பவல், "என்ன விஷயம் ஆண்டரி? ஏன் இவ்விதம் பேசுகிறாய்?" என்று கேட்டான்.

ஆண்டரி தலையை இருபுறமும் திருப்பி அன்னையையும் பவலையும் பார்த்தவண்ணம், "நான்தான் ஐஸேயை ஒழித்தேன்" என்றான்.

அன்னை சட்டென்று எழுந்தாள். ஆண்டரியைக் கட்டிக்கொண்டாள். "இல்லை நீ அப்படிச் செய்தே இருக்கமாட்டாய் ஆண்டரி.........என் அருமை மகனே! உன் மனம் என்ன பாடுபடுகிறது, ஐயோ!" என்றாள்.

"கொஞ்சம் கேள் அம்மா. எப்படி நடந்தது என்பதைச் சொல்லுகிறேன்."

"உரக்கப் பேசாதே."

பவல் அருகில் வந்து ஆண்டரியை அணைத்தவண்ணம் உட்காரச் சொன்னான். பிறகு அவன் கையை குலுக்கிய வாறு சிரித்தான்.

"நான் என் கண்களாலேயே பார்த்தேன். நீ செய்திருக்க முடியாது" என்றாள் அன்னை.

"நான் செய்யவேண்டும் என்று செய்யவில்லை அம்மா! பவல் என்னைப் பிரிந்து ஐவானுடன் போனான். அப்போது ஐஸே அந்தப் பக்கம் வந்தான். அவன் என்னைக் கேவலமாகப் பேசினான். அதுபோல எந்த நாயும் என்னைப் பேசியதில்லை. என் ரத்தம் கொதித்தது. புறங்கையால் அவன் முகத்தில் அறைந்தேன். அதுதான் நான் செய்தது. என் வாழ்க்கை உள்ளவரை இந்தக் கறையைப் போக்க முடியாது" என்றான்.

"இப்பொழுது நீ என்ன செய்யப் போகிறாய்?"

"என்ன செய்வது? நான் செய்தேன் என்று சொல்லத் தயங்கமாட்டேன். ஆனால் வெட்கப்படுகிறேன்; வேறு யார் மீதாவது குற்றம் சாட்டப்பட்டால் நான் போய் என்னைக் காட்டிக்கொள்வேன்."

அன்னையின் மனம் மேலும் படபடத்தது. யாரோ வரும் காலடி ஓசை கேட்டது. 'ஆண்டரியைக் கைது

செய்யப் போலீஸா ?' என்று கேட்டவாறு வாசல் பக்கம் திரும்பிபார்த்தான்.

" இதோ மீண்டும் வந்துவிட்டேன்." என்று சொல்லிக்கொண்டே, ரிபின் கதவைத் திறந்து உள்ளே வந்தான்.

" வா ரிபின் " என்று வரவேற்றாள் அன்னை.

" அடே பவல்! சிறையிலிருந்து விடுதலையாகி வந்து விட்டாயா ? உன் சொத்துக்கள் அதிகமாகாத போதிலும், புத்தகங்கள் அதிகமாகியிருக்கின்றன ; அதுதான் கிடைக்காத பொருள். எல்லாம் எப்படி நடக்கிறது?" என்று புத்தக அலமாரியைப் பார்த்துக்கொண்டே கேட்டான் ரிபின்.

" எல்லாம் நன்றாகவே நடக்கின்றன. உன்னுடைய கிராம வாழ்க்கை எப்படி இருக்கிறது ? " என்றான் பவல்

" எடில் சிவ் என்ற கிராமத்தில் இருக்கிறேன். என் வேலையோடு மட்டும் நிற்கவில்லை. உன்னுடைய துண்டுப் பிரசுரங்கள் என்னிடம் இருக்கின்றன ; அதை வைத்துக் கொண்டு பிரசாரம் செய்கிறேன். எனக்குப் புத்தகங்கள் வேண்டும். எனது நண்பன் யாபின் வருவதற்குள் கொடு" என்றான் ரிபின்.

" அம்மா, ரிபினுக்குப் புத்தகங்கள் கொண்டு வந்து கொடு."

" தேநீர் தயாராகட்டும். எடுத்துக் கொடுக்கிறேன் " என்று கூறிவிட்டு தேநீர் எடுத்துவரச் சென்றாள் அன்னை.

" நான் கட்சி வேலையில் பூரணமாக ஈடுபட்டு விட்டேன். புத்தகம் படிக்க அதிக ஆட்கள் இருக்

கிறார்கள். அங்கே ஒரு உபாத்தியாயர் இருக்கிறார். அவருக்கு இந்தப் புத்தகங்கள்மீது அலாதி மோகம். மற்றும் பலரும் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் இப் புத்தகங்களைப் படிக்கக்கூடாது என்று தடை இருக்கிறது. நான் அவர்கள் மூலமாகவே இப்புத்தகங்களை பரப்ப விரும்புகிறேன். போலீஸ்காரரோ, மத குருக்களோ இவற்றைக் காண நேர்ந்தால், அவர்கள்தான் விநியோகிக் கிறார்கள் என்று எண்ணவேண்டும். நான் மறைவி லிருந்தே வேலை செய்யப்போகிறேன்."

"புத்தகங்களைத் தர நான் மறுக்கவில்லை; ஆனால் உன்னுடைய செயல்தான் சரியில்லை. நீ செய்யும் காரியத் திற்கு ஏழை உபாத்தியாயர்கள் துன்புறுவார்கள்' என்றான் பவல்.

"நான் தவறான வழியில்தான் போகிறேன். உபாத்தியாயர்கள் அகப்பட்டுக் கொண்டால் என்ன ?"

அந்தச் சமயம் அன்னை தேநீர் எடுத்துக்கொண்டு வந்தாள். ரிபின் சொன்னதை ஆமோதிப்பதுபோல், "தான் செய்யும் காரியம் தங்கு தடையின்றி நடை பெறவே ரிபின் இம்மாதிரி முறையைக் கையாள்கிறான்" என்றாள்.

"அம்மா நான் செய்ய நினைத்ததைப் புரிந்து கொண்டு விட்டாள்" என்றான் ரிபின்.

கதவைத் திறந்துகொண்டு யாபின் வந்தான். அவனைப் பார்த்ததும் ரிபின், "பவல்! இவன் என் நண்பன் யாபின்: கொஞ்சம் படிக்கத் தெரிந்தவன்; நம் புத்த கங்கள் மீது இவனுக்கு அபார மோகம்" என்றான்

யாபின் உட்காராமல் அலமாரியிலுள்ள புத்தகங்கள் மீது பார்வையைச் செலுத்தினான். பிறகு பவலைப்

பார்த்து "எனக்கு சில புத்தங்கள் கொடுப்பாயா ?" என்று கேட்டான்.

'அடிமையின் சரித்திரம்', 'ஜமீந்தார்களின் அட்டூழியம்' என்ற இரண்டு புத்தகங்களையும் எடுத்து அவனிடம் கொடுத்தான் பவல். யாபினும் வெகு ஆவலோடு அதைப் பெற்றுக்கொண்டான்.

ரிபின் அன்னையுடன் சமையலறைக்குச் சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் பிரசுரங்களை எல்லாம் தன்னுள் மறைத்துக்கொண்டு வெளியில் வந்தான். "பவல் ஒன்று சொல்ல மறந்துவிட்டேன்.. கிராமத்தைப்பற்றி ஒரு பத்திரிகை வெளியிடவேண்டும். அதனால் விவசாயி களிடம் பெரிய மாறுதல் ஏற்படும். அவர்களுடைய துயரங்களை எடுத்துக் கூற, ஒரு பத்திரிகையும் இல்லை. சாதாரண குடியானவனும் தெரிந்து கொள்ளும் பாஷை யில் அந்தப் பத்திரிகை இருக்கவேண்டும்" என்றான்.

"சரி அப்படியே செய்வோம். உனக்குத் தேவை யானது அவ்வளவையும் கொடுக்கிறோம். உன் வேலையைச் செய்" என்றான் பவல்.

ரிபினும் யாபினும் விடை பெற்றுக்கொண்டு சென்ற பின், பவல் சிரித்துக்கொண்டே, "ஆளைப் பார், அசல் குடியானவனைப்போல் இருக்கிறான். ஆனால் அவன் வேலையோ குள்ளநரிச் செயலாக இருக்கிறது" என்றான்.

# 14.. மே தின ஏற்பாடு

பகல் வேளைகளில் ஓய்வின்றி அன்னைக்கு வேலை இருந்து வந்தது. அதனால் மே மாதம் முதல் தேதியைப் பற்றி அவளால் சிந்திக்கக்கூட முடியவில்லை. இரவு சோர்ந்து படுக்கச்சென்றதும் அப்பொழுது நினைவு வரும். மனம் சிறிது கஷ்டப்படும்.

காலையில் தொழிற்சாலை சங்கு ஊதியதும் பவலும் ஆண்டரியும் அன்னையிடம் சில வேலைகளை ஒப்புவித்து விட்டு வெளியே செல்லுவார்கள். நாள் முழுதும் வீட்டு வேலைகளைப் பார்ப்பதிலும், வந்தவர்களுக்குப் பதில் சொல்லுவதிலுமே அன்னைக்குப் பொழுது கழிந்தது; வந்தவர், களில் சிலர் பயந்து கொண்டே, பவலுக்குக் கடிதம் எழுதிக் கொடுத்து விட்டுப் போவார்கள்.

மே தினம் கொண்டாடுவதைப் பற்றிய துண்டுப் பிரசுரங்கள், வெள்ளத்தைப் போல் எங்கும் பரவின. ஒவ்வொரு இரவும், தொழிற்சாலையின் மதில் சுவர்களின் மீது —போலீஸ் ஸ்டேஷன் சுவர்மீது—சுவரொட்டிகள் ஒட்டப்படும். காலையில் போலீஸ்காரர்கள் ஊரைச்

சுற்றி வருவார்கள். சுவர்களின்மீது ஒட்டப்பட்டிருப் பவைகளைக் கிழித்து எறிவார்கள்.

கிராமம் பூராவிலும், தொழிற்சாலையினுள்ளும் ஜனங் கள் சிறு சிறு கூட்டமாகக் கூடி துண்டுப் பிரசுரங்கள், அறிக்கைகள் பற்றிப் பேசுவார்கள். சிலர் புரட்சிக்காரர் களை கண்டபடி ஏசுவார்கள். பலர் ஆவலோடும் நம் பிக்கையோடும் பேசுவார்கள்.

பவலும், ஆண்டரியும் அதிகாலையில்தான் வீட்டுக்கு வருவார்கள். அவர்கள் சோர்ந்து, முகம் வெளுத்துக் காணப்படுவார்கள். இரவு முழுதும் காடுகளிலும், புதர் களிலும் பொதுக் கூட்டம் கூடிப் பேசியிருப்பார்கள்.

குதிரைமீது போலீஸ்காரர்கள், கிராமம் பூராவும் சுற்றி வந்தார்கள். பல தொழிலாளர்களின் வீட்டைச் சோதனை போட்டார்கள். பலரைக் கைது செய்தார்கள். இதைக் கண்ட அன்னை, பவலும் ஆண்டரியும் எந்த நேரத்திலும் கைது செய்யப்படலாம் என்று எண்ணினாள்.

கடைசியாக, மே மாதம் முதல் தேதியும் வந்தது. அன்று காலை வழக்கம் போல் அதிக சப்தத்துடனும், அதிகார தோரணையிலும் தொழிற்சாலை சங்கு ஊளை யிட்டது. இரவு முழுதும் அன்னை தூங்கவே இல்லை. சங்கொலி கேட்டதும் படுக்கையிலிருந்து எழுந்து தேநீர் தயாரிக்க அடுப்பைப் பற்ற வைத்தாள். பிறகு வழக்கம் போல மகனையும் ஆண்டரியையும் எழுப்ப அறைக் கதவைத் தட்டப் போனாள். பிறகு எதையோ நினைத்துக் கொண்டு கதவைத் தட்டாமல் ஜன்னல் பக்கம் வந்து உட்கார்ந்தாள்.

மங்கிய ஆகாயத்தில் வெள்ளையும் சிவப்புமான மேகம் மெல்ல எழுந்தது. மேகங்களைக் கூர்ந்து பார்த்

தாள் அன்னே. அவள் இரவு முழுவதும் தூங்காததால் தலை கனத்தது. சொல்லமுடியாத ஓர் உணர்ச்சி அவள் உள்ளத்தில் எற்பட்டது. மனம் அதிவேகமாக அடித்துக் கொண்டது. "இன்ருவது அவர்கள் கொஞ்ச நேரம் தூங்கட்டும்" என்று பவலேயும் ஆண்டரியையும் பற்றி எண்ணிக் கொண்டாள்.

அறையினுள் சூரியனின் இளம் கிரணங்கள் பாய்ந்தது. இரண்டாம் முறையாகச் சங்கு ஒலித்தது. "பவல் எழுந்திரு ; அவர்கள் கூட்பிடுகிருர்கள்" என்ருள்.

வாசலில் பலர் காலடி ஓசை கேட்டது. "தேநீர் தயாராக இருக்கிறது" என்ருள் அன்னே.

"இதோ வந்து விட்டேன்" என்று எழுந்தான் பவல்.

ஆண்டரியின் அருகில் வந்து அன்னே, "பவலே விட்டு விலகிப் போய்விடாதே ; அவன் கூடவே இரு" என்ருள் மெல்லிய குரலில்.

"என்ன ரகசியம் பேசுகிறீர்கள் ?" என்று பவல் கேட்டான்.

"ஒன்றுமில்லே, முகத்தை நன்ருகத் தேய்த்துக் கழுவிக்கொள் ; அப்பொழுதுதான் எல்லாப் பெண்களும் உன்னேப் பார்ப்பார்கள் என்று அம்மா சொன்னுள்" என்ருன் ஆண்டரி சிரித்துக்கொண்டே.

'தொழிலாளர்களே விழித் தெழுங்கள்; ஒன்று படுங்கள்' என்று பாடிக்கொண்டே வந்தான் பவல்.

"உங்கள் ஊர்வல ஏற்பாடுகளேப் பற்றிச் சொல்லுங் கள்" என்ருர் அன்னே.

"எல்லாம் சரியாக ஏற்பாடாகி இருக்கிறது. நாங்கள் கைது செய்யப்பட்டால் நிக்கோலாய் வந்து சொல்லு

வான். உனக்கு எல்லா வகையிலும் உதவி செய்வான் " என்ருன் ஆண்டரி.

இந்தச் சமயத்தில் மாஜின் வந்தான். "ஜனங்கள் தெருவில் கூட்டமாகக் கூடி விட்டார்கள். தொழிற் சாலேயின் முன்பு குஸாவ், ஸாமாவ், விஸாவிச் ஆகியோர் நின்று வேலே நிறுத்தம் செய்யும்படி கேட்டுக்கொண்டு பிரசங்கம்செய்கிருர்கள். பல தொழிலாளர்கள் வீட்டுக்குத் திரும்பி விட்டார்கள். இப்பொழுது மணி பத்தாகிறது. பகல் உணவு வேளேயின்பொழுது, தொழிற்சாலேயினுள் வேலே செய்யச் சென்றவர்களும் வேலே நிறுத்தம் செய் வார்கள் " என்ருன் மாஜின்.

அன்னேயின் அருகில் பவல் சென்று, "நாங்கள் போய் வருகிருேம் " என்ருன்.

" நல்லது போய் வாருங்கள். கடவுள் உங்களேக் காப் பாற்றுவார் " என்று கண்கள் கலங்கியவாறு அன்னே கூறிஞள்.

பவல், ஆண்டரி, மாஜின் மூவரும் வாசல் பக்கம் வந்ததும் ஜனங்கள் அவர்களே வரவேற்ருர்கள். சிலர் ' நமது தலேவர்கள் வருகிருர்கள் ' என்றனர்.

கூட்டத்திலிருந்து சிலரைப் பார்த்து சில பெண்கள், " அவர்கள் ஒண்டிக் கட்டைகள். நீங்கள் அப்படி இல்லே. நன்ருக யோசித்துச் செய்யுங்கள். பிறகு கஷ்டப் படவேண்டிவரும் " என்றனர்.

" பவல் துரோகி. உன் தலேயைத் திருகிப் போடப் போகிருர்கள் பார் " என்று கூட்டத்தில் ஒருவன் கத்திஞன்.

எல்லாவற்றையும் அன்னே கவனித்தாள். அவளது கைகால்கள் நடுங்கின. அன்னே சிறிதும் யோசியாது

கதவைச் சாத்திக்கொண்டு, மகனைப் பின்பற்றி நடந்தாள். வழியில் பலர் பலவாறு பேசினார்கள். அன்னைக்கு முதலில் இருந்த பயம் போய் விட்டது. மரணமே சம்பவித்தாலும் மகனுடன் தோளுக்குத் தோள் கொடுத்துச் செல்லத் தீர்மானித்து விட்டாள்.

ஒவ்வொரு தெருவாகக் கடந்து செல்லும் போதும் கூட்டம் அதிகரித்துக் கொண்டே வந்தது. ஒரு தெருக் கோடியில் கூடியிருந்த கூட்டத்தின் மத்தியிலிருந்து சம்மட்டி கொண்டு அடிப்பது போலிருந்தது விஸாவிச்சின் பேச்சு. "தோழர்கள் நன்றாக வேலை செய்கிறார்கள். நானும் போய் கொஞ்சம் உதவி புரிகிறேன்" என்று கூறி ஆண்டரி சென்றான். சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் பேசத் தொடங்கினான்: "தோழர்களே, உலகில் பல ஜாதிகள் இருப்பதாகக் கூறுகின்றார்கள். எனக்கு அதில் நம்பிக்கையே இல்லை. எனக்குத் தெரிந்தவரை இரண்டே ஜாதிகள்தான் இருக்கின்றன. ஒன்று ஏழை; மற்றொன்று பணக்காரன். ஒருவன் உழைக்கிறான்; மற்றவன் அந்த உழைப்பைக் கொண்டு ஜீவிக்கிறான். ஒருவன் தன்னுடைய ரத்தத்தைச் சிந்துகிறான். மற்றவன் அதை உறிஞ்சுகிறான். நாம் அனைவரும் ஒரே தொழிலாளர் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள். நம்மிடையேயுள்ள வேற்றுமைகளை ஒழித்துவிட வேண்டும்" என்றான் ஆண்டரி.

கூட்டம் அதிகரித்தது; அமைதி நிலவியது. "வெளி தேசத்துத் தொழிலாளிகள் உண்மையை உணர்ந்து விட்டார்கள். மே தினத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். இந்தத் தினத்தில் அவர்கள், தாங்கள் செய்தவைகளைக் கணக்கெடுத்துப் பார்த்துக் கொள்ளுகிறார்கள்; இந்த நாளில் தொழிலாளர்கள்

அனைவரும் ஒற்றுமைப்பட வேண்டும். ஒவ்வொருவரும் சுக வாழ்க்கைக்காகத் தங்கள் உயிரையும் தியாகம் செய்ய முன்வர வேண்டும்" என்றான் மீண்டும்.

அச்சமயம், கூட்டத்திலிருந்து 'போலீஸ், போலீஸ்' என்ற குரல்கள் எழுந்தன.

## 15. ஊர்வலத்தில் அடக்குமுறை

நான்கு குதிரைகள்மீது போலீஸ்காரர்கள் வேகமாக வந்து, கையில் உள்ள சாட்டையால் கூட்டத்தினரை விரட்டி அடித்தனர். ஜனங்கள் அங்கும் இங்கும் ஓடினர். பேசிக் கொண்டிருந்த ஆண்டரி தனியே விடப்பட்டான். பவலும் அன்னையும் ஒரு இடத்தில் ஓரமாக நின்று கொண்டிருந்தனர்.

அவர்களின் அருகில் ஆண்டரி வந்ததும், மூவரும் வேறு ஒரு தெரு வழியாகச் சென்றனர். அந்தத் தெருவின் முனையில்தான் பெரிய பூங்கா இருக்கிறது. அதன் அருகில் ஒரு மாதாகோவிலும் இருந்தது. மாதாகோவிலைச் சுற்றியும், பூங்காவைச் சுற்றியும் ஜனங்கள் நிறைந்திருந்தனர். கூட்டத்தில் ஒருத்தி, "மிட்டிங்கா, வந்துவிடு. ஊர்வலத்தில் போகாதே" என்ருள்.

"போகாதே" என்றது மற்ருெரு குரல்.

அதற்குள் ஸிஜாவ் கம்பீரமாகவும், சாவதானமாகவும் பேசினுன்: "நாம் நம்முடைய பிள்ளைகளைப் புறக்கணித்து விட்டுப் போகக் கூடாது. அவர்கள் செய்த

சேவையினுல்தான் மானேஜர் நம்முடைய சம்பளத்தில் பிடிப்பதாக இருந்த ஒரு சதத்தைக் கைவிட நேர்ந்தது; அதனுல் நம்முடைய பிள்ளைகள் சிறைக்குச் சென்ருர்கள்; கஷ்டப்படுகிறவர்கள் அவர்கள். லாபத்தை அடைவது நாமா ?—இல்லை லாபம் எல்லோருக்கும் சமம்.''

தொழிற்சாலை சங்கு ஒலித்தது. உட்கார்ந்திருந் தவர்கள் எழுந்து நின்றனர். சிறிது நேரம் மௌனம் குடி கொண்டது. பவல் கூட்டத்தின் மத்தியில் வந்தான். "தோழர்களே !'' என்ருன்.

எல்லோருடைய பார்வையும் அவன்மீதே இருந்தது. "சகோதரர்களே, நம்முடைய உயிரைப் பணயம் வைக்கும் சமயம் வந்துவிட்டது; பொருமை, வெறுப்பு, பொய், பலாத்காரம் இவையோடு கூடிய வாழ்க்கை ஒழிய வேண்டும். அந்த வாழ்க்கை நமக்கு எதற்கு ?'' என்ருன்.

அன்னை அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் கண்களிலிருந்து நெருப்புப் பொறி பறப்பது போலிருந்தது. மேலும்,

"தோழர்களே, நாம் நம்மை வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளத் தீர்மானித்து விட்டோம். நாம் யார் என்பதை வெளி உலகம் அறிய வேண்டும்; நமது கட்சிக் கொடியை இன்று ஏற்றி வைக்கப் போகிறேன். 'சுதந்திரம்', 'உண்மை' என்ற தத்துவத்தைக் கொண்டது இதோ அந்தக் கொடி !'' என்று செங்கொடியை வெள்ளைக் கம்பத்தின்மீது ஏற்றினன். சிவப்புப் பறவை தனது சிறகை விரிப்பதுபோலக் கம்பீரமாகக் கொடி பறந்தது.

'தொழிலாளர் சமூகம் வாழ்க' என்ற கோஷம் கூட்டத்திலிருந்து கிளம்பியது. வானமே அதிர்ந்தது.

'சமதர்ம ஜனநாயகம் வாழ்க' என்று ஆயிரக் கணக்கானவர்கள் முழங்கினர். அது எதிரொலித்தது.

'உலகத் தொழிலாளர் வாழ்க' என்றான் பவல். ஆயிரக்கணக்கான ஜனங்கள் அந்தக் கோஷத்தை திருப்பி முழங்கினார்கள்.

ஒவ்வொருவர் முகமும் மலர்ந்தது. நிக்கோலாய் புன் முறுவல் செய்தான்.

"தோழர்களே. இப்பொழுது புனிதமான நமது ஊர் வலத்தைத் தொடங்குவோம்; நமது புதிய கடவுளையும், ஒளியையும் நோக்கிச் செல்வோமாக" என்றான் ஆண்டரி.

பவல் கம்பீரமாகக் கொடியை ஏந்திக்கொண்டு முன்னே சென்றான்; பின்னால் ஜனசமுத்திரம் அவனைத் தொடர்ந்தது. கூட்டத்தில் தொழிலாளர் பற்றிய பாட்டு பாடப்பட்டது.

ஊர்வலம் பல தெருக்களைக் கடந்து சென்றது; பவலின் கம்பீரமான நடையும், கூட்டத்தினரின் பாட்டும், எல்லோரையும் மெய்மறக்கச் செய்தது. அன்னை யினால் கூட்டத்தோடு வேகமாகப் போக முடியவில்லை. அவள் பின் தங்கிவிட்டாள். பின்னாலும் ஜனங்கள் வந்து கொண்டே யிருந்தனர்.

'சக்ரவர்த்திக்கு எதிராகவா புரட்சி! ஜார் சக்ர வர்த்தியை எதிர்த்தா போர்!' என்றான் ஒருவன்.

'ஒரு ராணுவப் படை. பள்ளிக்கூடத்திற்கு அருகில் இருக்கிறது; மற்றொன்று தொழிற்சாலையின் முன்னால் இருக்கிறது' என்றான் மற்றொருவன்.

"கவர்னர் கூட வந்திருக்கிறானும்."

"அப்படியா?"

"நம்மைக் கண்டு அரசர் பயந்துவிட்டார்; ராணுவத்தினரும் கவர்னரும் வந்திருக்கின்றனர்—"

இவற்றையெல்லாம் செவியுற்ற அன்னையின் மனம் படபடத்தது; சந்தோஷமும் துக்கமும் அவள் தொண்டையை அடைத்தது. கூட்டத்தை விட்டு வெளியேறிப் போக எண்ணினாள். அது சாத்தியப்படவில்லை.

திடீரென்று ஊர்வலம், எதிலோ முட்டிக்கொண்டு நிற்பதுபோல் நின்றது. ஊர்வலத்தினரின் பாட்டு அபசுரமாக மாறிற்று. ஆனால் மறு நிமிஷமே கோஷங்கள் வானைப் பிளந்தன.

முன்னால் என்ன நடக்கிறது என்பதை அன்னையால் காண முடியவில்லை. அவள் படபடப்புடன் ஜனங்களை விலக்கிக்கொண்டு ஊர்வலத்தை நோக்கி நடந்தாள்.

ஊர்வலம் சென்ற தெரு முனையில் ராணுவம் நிறுத்தப்பட்டிருந்தது. போலீஸ்காரர்களும் இருந்தனர்; தலைமை அதிகாரியும் கூட இருந்தான்.

ஊர்வலத்திலிருந்த சிலர் ராணுவத்தைக் கண்டு பயந்தனர். திடீரென்று ஊர்வலம் நின்றதைக் கண்ட பவல் விஷயத்தை யூகித்துக் கொண்டான். "தோழர்களே, ராணுவத்தினரும் நம்மைப் போன்ற மனிதர்களே, அவர்கள் நம்மைத் தாக்கமாட்டார்கள்; எதற்காக அவர்கள் நம்மைத் தாக்க வேண்டும்? லட்சியத்திற்தாக நாம் வெளிக் கிளம்பியிருக்கிறோம். லட்சியத்தை, அடைந்தே தீருவோம். நம்முடைய லட்சியத்தை அடைவதில் ராணுவத்தினருக்கும் அக்கறை உண்டு. பயப்படாதீர்கள்! முன்னேறுங்கள்" என்றான் பவல்.

கோஷங்கள் கிளம்பின; சிலர் எதிர் கோஷமிட்டனர். பலர் பலவாறு பேசினார்கள்.

ஊர்வலத்தை நோக்கி, வெகு வேகமாக வந்த அன்னை முன் பகுதிக்கே வந்துவிட்டாள். பவல் பேசியதைக் கேட்டாள். அவள் மனம் மேலும் படபடத்தது.

அதிகாரி ஒருவன், முன்னே வந்து ஒரு போலீஸ்கார னிடம் பவலைச் சுட்டிக் காட்டி, "அவனை அடி" என்று கர்ஜித்தான்.

"அடக்குமுறை ஒழிக" என்ருன் மாஜின்.

எதிரே ராணுவத்தினர் துப்பாக்கி தாங்கி நின்று கொண்டிருந்தனர். துப்பாக்கியின் முன் பாகத்தில் கத்தி பொருத்தப்பட்டிருந்தது. சூரிய ஒளியில் அது பளபள வென்று மின்னியது.

"நடந்து வாருங்கள்" என்ருன் பவல்.

ஊர்வலம் முன்னே செல்லத் தலைப்பட்டது. பவல் முன்ருல் கொடியேந்திய வண்ணமிருந்தான். அவனருகில் ஆண்டாி கம்பிரமாகத் தோற்றமளித்தான்.

அன்னை இதைப் பார்த்துப் பூரித்துப் போனுள்.

"நில்லுங்கள்" என்றது அதிகாரியின் குரல்.

பவல் அதைப் பொருட்படுத்தாமல் முன்னேக்கி நடந்து கொண்டிருந்தான்.

"ஊர்வலம் கலைந்து போகட்டும்" என்ருன் அதிகாரி.

கூட்டத்தில் பல பெரியவர்கள் பலவாறு பேசினுர்கள்; தங்கள் அன்புக்குரியவர்களைக் கலைந்து செல்லும்படியும், ஓடிவிடும்படியும் கூறினர். ஒரு முதியவர், பவலிடம் வந்து 'கொடியை என்னிடம் கொடுத்துவிடு. நான் மறைத்துப் பத்திரமாக வைத்துக் கொள்ளுகிறேன்' என்று சொன்னுர்.

பவல், புன்முறுவல் செய்துவிட்டு, முன்னே போய்க் கொண்டிருந்தான்.

"அவன் கையிலிருக்கும் கொடியைப் பிடுங்குங்கள்."

"கீழே போட்டுவிடு."—அதிகாரியின் கட்டளை.

ஒரு சிப்பாய் வந்து பவலிடமிருந்து கொடியைப் பிடுங்கினுன். கொடியை கிழித்தெறியும்படி அதிகாரியின் கட்டளை பிறந்தது. சிப்பாய் கொடியைக் கிழித்துக் கீழே போட்டான். கொடிக் கம்பை காலில் போட்டு ஒடித்தான். துண்டுகளை வீசி எறிந்தான்.

கொடிக் கம்பின் ஒரு துண்டு, அன்னையின் காலடியில் வந்து வீழ்ந்தது. அவள் அதை எடுத்துப் பத்திரப் படுத்தி வைத்துக்கொண்டாள்.

"கலைந்து போங்கள்" என்று அதிகாரி, சிப்பாய்களை விட்டு ஊர்வலத்தினரை விரட்டச் சொன்னுன். பவலையும் அவன் அருகில் இருந்தவர்களையும் கைது செய்யச் சொன்னுன் அதிகாரி. பவலும் ஆண்டரியும் முதலில் கைதானுர்கள்.

இவரும் புன்முறுவலுடன், ஊர்வலத்தினரை நோக்கி தலைவணங்கி வந்தனத்தை செலுத்திவிட்டு நடந்தனர். அன்னை அவர்களின் கம்பீரத் தோற்றத்தைக்கண்டு உள்ளுக்குள் மகிழ்ந்தாள்.

"வாருங்கள் அம்மா" என்று ஸிஜாவ் அன்னையை அழைத்து வரவேற்ருன். கூட்டத்தினருக்கு அவளை அறிமுகம் செய்து வைத்தான். அவள், அவர்களுக்கு தலை வணங்கி வந்தனம் செலுத்தினுள். கூட்டத்தில் கோஷம் கிளம்பிற்று.

சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த வீதி நிசப்தமாகியது. கோலாகலமாக இருந்த வீதியில் மயான மௌனம் குடி கொண்டது.

## 16. நகரத்தை நோக்கி அன்னை

அன்று பூராவும் அன்னைக்கு, பெருமூச் செறிவதிலும், பழைய சம்பவங்களை நினைத்துப் பார்ப்பதிலுமே பொழுது கழிந்தது; பலர் வந்தனர்; பலவிதமாக ஆறுதல் கூறினார்கள். கடைசியாக மரியா வந்தாள்: "ஆஹா ஜனங்கள் விழித்தெழுந்து விட்டார்கள்; தொழிற்சாலை பூராவும் ஒரே ரகளை" என்றாள் சந்தோஷத்துடன்.

மரியா இருக்கும் சமயம், போலீஸ் அதிகாரி வந்தான். "மூன்றும் முறையாக உங்கள் வீட்டிற்கு வரவேண்டிய நிலைமை ஏற்பட்டது" என்று கூறிக்கொண்டே உள்ளே வந்தான்; "உங்கள் பிள்ளையைக் கெட்ட வழிகளில் விடாமல் இருந்திருந்தால் இந்தத் தொல்லையே இல்லையே. கடவுளையும் ஜார் அரசனையும் எதிர்க்கத் தலைப்பட்ட அவனை உங்களால் அடக்க முடியவில்லையே" என்றான்.

"நம்முடைய குழந்தைகளே நமக்கு நீதிபதிகள். நாங்கள் அவர்களை, இம்மாதிரிப் புறக்கணித்ததற்குச் சரியானபடி தண்டனை கொடுப்பார்கள்" என்றாள் அன்னை.

"அதிகப் பிரசங்கி—வாயை மூடு" என்ருன் அதிகாரி; வீடு பூராவும் சோதனை போட்டான். கடைசியாக, மரியாவைவிட்டு, அன்னையின் உடம்பைச் சோதனை செய்யச் சொன்ருன். முதலில் அன்னை எதிர்த்தாள். மரியாவின் வேண்டுகோளின்மீது பிறகு சம்மதித்தாள். சோதனை முடிந்ததும் மரியாவும் போலீஸ் அதிகாரியும் போய்விட்டனர்.

தனியே விடப்பட்ட அன்னைக்குப் பல நினைவுகள் தோன்றின ; பல எண்ணங்கள் எழுந்தன.

இரவு சாப்பாட்டிற்குப் பிறகு, அன்னை கடவுளைப் பிரார்த்தித்தாள். தன் கஷ்டங்கள் தீரவேண்டும் என, அவள் வேண்டிக்கொண்டாள் ; அவள் வேண்டுதலுக்கு செவி சாய்த்து வரம் அளித்ததுபோல், மறுவிடிையே ஐவானேவிச் வந்தான். அவனைக் கண்டதும் அன்னை நடு நடுங்கிப் போனுள், "ஏன் வந்தீர்கள் ? தெரிந்தால் போலீஸ்காரர்கள் உங்களையும் கைதுசெய்துவிடுவார்களே, பிறகு பவலுடைய கதி ?" என்ருள்.

ஐவானேவிச், சிரித்தவண்ணம் மூக்குக்கண்ணுடியை கழற்றி முகத்தைத் துடைத்துக் கொண்டு, "பவலிடம் ஒரு ஒப்பந்தம் செய்திருக்கிறேன் ; அவனும் ஆண்டரியும் கைது செய்யப்பட்டால் உங்களை நகரத்திற்கு அழைத்துப் போய்விடுவேன். இதுதான் அந்த ஒப்பந்தம். நாளைக்கே நீங்கள் என் விடுதிக்கு வந்துவிடவேண்டும். வீட்டைச் சோதனை போட்டார்களா ?" என்று கேட்டான்.

"சோதனை போட்டார்கள், வெட்கம் கெட்டவர்கள் ; நான் நகரத்திற்குப் போகவேண்டும் என்று பவல் விரும் பினுல், நான் தடையே சொல்லவில்லை. நான் வருவதால் உங்களுக்குக் கஷ்டமாக இருக்குமே ?"

" அதைப் பற்றி எல்லாம் கவலைப்படாதீர்கள் ; நான் தனியாகத்தான் இருக்கிறேன். என் சகோதரி எப்பொழுதாவது வருவாள். நீங்கள் எங்களுக்கு உதவியாக இருப்பீர்கள்."

" அப்படியானால் சரி; ஆனால் நான் வந்து என்ன செய்வது ?"

" சரிதான். எப்பொழுதும் செய்துகொண்டிருந்த கட்சி வேலைகளைச் செய்வது; உங்களுக்கு பவல் சொன்ன கிராமவாசியைத் தெரியுமா ? எந்தக் கிராமம் என்பது நினைவிருக்கிறதா ?"

அன்னை சிறிது நேரம் யோசித்தாள். ஐவானேவிச் கேட்பது ரிபினைப் பற்றித்தான் என்று தெரிந்து கொண்டு, 'நன்றாய்த் தெரியும்' என்றாள். ரிபின், தூக்க முடியாத அளவு புத்தகங்களைத் தூக்கிச் சென்றது அவள் நினைவுக்கு வந்தது. உடனே, " நீங்கள் எனக்கு என்ன வேலை கொடுத்தாலும் சரி ; புத்தகம், துண்டுப் பிரசுரம் போன்றவைகளை கிராமங்கள்—வேறு எங்கு வேண்டுமானாலும் எடுத்துச் சென்று கொடுத்து வருகிறேன் " என்றாள்.

" அதைப் பற்றி பிறகு யோசிக்கலாம். நீங்கள் மிகவும் அபாயகரமான வழியில் செல்ல வேண்டும். தீர யோசித்து முடிவு செய்யுங்கள் " என்றான் ஐவானேவிச்.

" அதைப் பற்றி கவலையே இல்லை. நான் வீண் பொழுது போக்குவதைவிட உபயோகமான வழியில் செலவழித்தால் மனதிற்கும் சந்தோஷமாக இருக்கும்."

" சரி எல்லாம் பேசி முடிவு செய்யலாம்; நாளைக்கே நீங்கள் நகரத்திற்குவருவீர்கள் அல்லவா?" என்று சொல்லி விட்டு, தன்னுடைய பையிலிருந்து மணிபர்ஸை எடுத்

தான். அதை அன்னையின் முன் நீட்டி "உங்களுக்குத் தேவையானதை எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

"எல்லோரைக் காட்டிலும் உங்களிடம் ஒரு தனிக் குணம் இருக்கிறது. பணம்கூட உங்களுக்கு அநாவசிய மானதுதான்! பணத்திற்காக சிலர் தங்கள் ஆத்மாவையே விற்றுவிடுகிறார்கள்; நீங்கள் பணத்தை வெறும் காகித மாகவே கருதுகிறீர்கள். பிறருக்காகவே, இதை உங்கள் பையில் வைத்திருக்கிறீர்கள்போல் இருக்கிறது."

"பணம், கொடுப்பதிலும், வாங்கிக் கொள்ளுவதிலும் கஷ்டம் கொடுக்கக்கூடியது" என்று சொல்லி ஐவானேவிச் சென்று விட்டான்.

அன்னை அவனது குணத்தை இரவுமுழுவதும் வியந்து கொண்டிருந்தாள்.

மறுநாள் பொழுது விடிந்ததும், தனக்கு வேண்டிய சாமான்களை எடுத்துக் கொண்டு வீட்டைப் பூட்டினாள். ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டு நகரத்திற்குப் பிரயாணமானாள்.

பொதுப்படையாக, அன்னையின் நகரப் பிரயாணத்தை தப்பர்த்தம் செய்து கொண்ட வண்டிக்காரன் "எங்கு போனாலும் கஷ்டம் நம்மை விடாது. எங்கும் துன்பத்தின் சாயைதான் படர்ந்திருக்கிறது" என்றான்.

அவன் சொன்னதைக் கேட்டு அன்னை சிரித்துக் கொண்டாள்.

## 17. சகோதரனும் சகோதரியும்

மிகவும் ஒதுப்புறமான ஒரு பழங்கால வீட்டில் ஐவாநோவிச் வசித்து வந்தான். வீட்டைச் சுற்றிலும் மரங்களும், புஷ்பச் செடிகளும் இருந்தன; பார்ப்பதற்குப் பழைய வீடாக இருந்தாலும் மனதிற்கு நிம்மதியைக் கொடுப்பதாகக் காணப்பட்டது.

தோட்டத்துப் பக்கமாக இருந்த அறையை, அன்னைக்குக் காட்டி "இந்த இடம் உங்களுக்கு சௌகரியமாக இருக்கும் அல்லவா?" என்று கேட்டான் ஐவாநோவிச்.

காற்றோட்டம் நிறைந்த அந்த அறையின் சுவர்களில் எல்லாம், புத்தக அலமாரிகள் இருந்தன. அவற்றில் எல்லாம் புத்தகங்கள் நிறைந்திருந்தன. அவற்றைக் கண்ட அன்னை, "சமையல் அறையே எனக்குப் போதுமே" என்றாள்.

ஐவாநோவிச் மனம் நொந்தான். தான் ஒதுக்கிய அறையை, அன்னை அங்கீகரிக்கவில்லையே என வருந்தினான்; அதைக் கவனித்த அன்னை தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டு அவனது விருப்பத்திற்கு சம்மதம் தெரி

வித்து விட்டாள். உடனே அவன் முகத்தில் சந்தோஷக் குறி தென்பட்டது.

அன்றையப் பொழுது பேசுவதிலும், வீட்டைச் சுத்தம் செய்வதிலும், சாமான்களைச் சரி செய்து வைப்பதிலுமே அன்னைக்கு கழிந்தது. பிறர் வீட்டில் தங்கியது அன்னைக்கு இதுதான் முதல் முறை. ஆனாலும் அன்னை அதைப் பொருட்படுத்தவில்லை.

மறுநாள் பொழுது விடிந்ததும், அன்னை தேநீர் தயாரித்தாள். ஐவானேவிச் எழுந்திருக்கும்வரை காத்திருந்தாள்.

அவன் இருமிக்கொண்டே எழுந்திருந்தான். அவனுக்குத் தேநீர் கொடுத்துவிட்டுத் தானும் பருகினாள் அன்னை.

"இன்று என் சகோதரி வருவாள்" என்றான் ஐவானேவிச்.

"கலியாணமாகி யிருக்கிறதா?"

"அவள் விதவை. அவள் கணவன், ஸைபீரியாவுக்கு நாடு கடத்தப்பட்டான். ஆனால், அங்கிருந்து அவன் தப்பி வரும் வழியில் ஜன்னி கண்டு வெளிதேசத்தில் இரண்டு வருஷத்திற்குமுன் இறந்துவிட்டான்."

"உங்களை விடச் சிறியவளா?"

"ஆறு வயது மூத்தவள். நன்றாகப் பியானோ வாசிப்பாள். இங்குள்ள பியானோவும், புத்தகங்களும் அவளுடையது தான்!"

"அவள் எங்கே வசிக்கிறாள்?"

"எல்லா இடத்திலும்தான்; எங்கே ஒரு தீரமான ஆள் தேவையோ, அங்கெல்லாம் அவளைக் காணலாம்."

"அவளும் கட்சியில் சேர்ந்திருக்கிறாளா?"

"ஆமாம்" என்ருன் ஐவானேவிச்.

சிறிது நேரத்திற்கெல்லாம், ஐவானேவிச் வேலேக்குச் சென்று விட்டான். அன்னே தன் வேலேகளேக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

பகல் பன்னிரண்டு மணியிருக்கும்; கதவு தட்டும் சப்தம் கேட்டது. அன்னே கதவைத் திறந்தாள். உயர்ந்த ஆடைகளே அணிந்துகொண்டு ஒரு மாது நின்று கொண்டிருந்தாள். அவள் அன்னேயைப் பார்த்துவிட்டு "நீங்கள் பவலின் தாயாரா?" என்று கேட்டாள்.

"ஆமாம்" என்ருள் அன்னே.

"அப்படித்தான் இருக்கவேண்டும் என எண்ணினேன்; நானும் பவலும் வெகு நாளேய நண்பர்கள். அவன் உங்களேப்பற்றி பேசாத நாளே இல்லே."

அன்னேயின் மனம் சந்தோஷத்தால் பூரித்தது. தனது மகன் தன்னேப்பற்றி, பிறரிடம் பேசியிருப்பதைக் கேட்டதும் அவள் மனம் மகிழ்ச்சியால் மலர்ந்தது.

"எனக்கு அதிகப் பசியாயிருக்கிறது. காபி இருக்கிறதா?" என்று கேட்டாள் வந்தவள்.

"இதோ தயாரித்துத் தருகிறேன்" என்று அன்னே உள்ளே சென்ருள்; சிறிது நேரத்தில், அன்னே காபி தயாரித்துக் கொண்டு வந்து கொடுத்தாள். அவள் காபி குடித்துக்கொண்டிருக்கும் சமயம் "உன் பெயர் என்ன?" என்று அன்னே கேட்டாள்.

"ஸோபியா" என்று கூறி சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு அவள்: "பவலே, சர்க்கார் அதிக நாட்கள் சிறையில் வைத்திருக்க மாட்டார்கள்! ஆனுல் அவன்மீது வழக்கு நடைபெறும்; அவனே நாடு கடத்துவார்கள். ஸைபீரியாவுக்கு அவன் போகவேண்டிய

நிலையே ஏற்படாது. அவனைத் தப்ப வைத்து அழைத்து வந்து விடலாம் '' என்றாள்.

சரியாக நான்கு மணிக்கு ஐவானேவிச் வந்தான். ஸோபியாவிடம் அவள் சௌக்கியம் பற்றி விசாரித்தான். அவள், தான் செய்துவந்த ஒரு காரியத்தைப் பற்றி மிகவும் பிரமாதமாகப் புகழ்ந்தாள். இரவு மூவரும் சாப்பிட்டனர். பிறகு பேச்சுத் தொடங்கியது.

" இதோ பார் ஸோபியா, உனக்கு இன்னும் ஒரு வேலை இருக்கிறது. நாங்கள் கிராமங்களுக்காக ஒரு பத்திரிகை நடத்தத் தீர்மானித்திருக்கிறோம். நம்மிடம் தொடர்புகொண்ட கிராமவாசிகளில் சிலர் கைது செய்யப் பட்டுவிட்டார்கள். புதிதாகக் கிராமாந்திரத்தில், பத்திரி கையையும், புத்தகங்களையும் விநியோகிக்கக் கூடிய ஒருவனை அன்னை காண்பிப்பாள். அவளுடன் நீயும் போ. எவ்வளவு சீக்கிரம் இந்தக் காரியத்தைச் செய்யமுடியுமோ அவ்வளவு சீக்கிரம் செய் '' என்றான் ஐவானேவிச்.

" சரி போகிறேன் ;அது எவ்வளவு தூரம் இருக்கும்?''

" ஐம்பது மைல்கள் '' என்றாள் அன்னை.

" நல்லது. இப்பொழுது சிறிது நேரம் பியானோ வாசிக்கப் போகிறேன் '' என்றாள் ஸோபியா.

ஸோபியா பியானோ வாசித்தாள் ; விரல்கள், மின்னல் வேகத்தில் பறந்தன. பியானோவிலிருந்து எழுந்த நாதம் மெய்சிலிர்க்கச் செய்துவிட்டது. ஒரு முறை சோகம், மறுமுறை வீரம். இப்படி மாறி மாறிப் பியானோவிலிருந்து பலவிதக் கீதங்கள் எழுந்தன.

ஸோபியா, வெகு நேரம் பியானோ வாசித்தாள். அன்னை யும் ஐவானேவிச்சும் அதில் மெய் மறந்து ஈடுபட்டிருந் தனர். அண்ணன் தங்கையின் சிநேகபாவத்தைக் கண்டு மகிழ்ந்தாள் அன்னை. அவர்கள் அன்புடன் பழகுவதைக்

கண்டு அன்னையின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது.

பியானோ வாசித்து முடிந்ததும், ஸோபியாவும் அன்னையும் பேசிக் கொண்டிருந்தனர். தன்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட சுகதுக்கங்களைப் பற்றி அன்னை சொன்னாள். அதில் அவ்வளவு துன்பமும் துக்கமும் தோய்ந்திருந்தது; ஸோபியா மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள்; "நான்தான் என்னை துரதிர்ஷ்டம் பிடித்தவள் என்று கருதியிருந்தேன்; நான் நாடு கடத் தப்பட்டேன்; தகப்பனாருடன் சண்டை பிடித்துக் கொண்டேன்; பிறகு சிறைவாசம், தோழர்களுடன் சதிவேலை, கணவன் கைது, மீண்டும் நாடு கடத்தப் படுதல், கணவன் மரணம். இவ்விதத் துரதிர்ஷ்டங்கள் எனக்கு நிறைய ஏற்பட்டிருந்தாலும் அவை எல்லா வற்றையும் உங்களுடைய ஒரு மாத வாழ்க்கைக்கு ஈடாகச் சொல்ல முடியாது. உங்களைப் போன்றவர் களுக்கு, இவ்வளவு கஷ்டங்களையும் தாங்கிக்கொள்ள எப்படித்தான் சக்தி ஏற்பட்டதோ ?" என்றாள்.

"எனக்கு இப்படிப்பட்ட துன்ப வாழ்க்கையைப் பற்றித்தெரியும் என்று கருதி வந்தேன்; நாவல்களில்கூட, அப்படிக் கஷ்டங்களை வர்ணிக்க முடியாது. அவ்வளவு கஷ்டப்பட்டவள் அன்னை. அவள் ஒரு பேசும் புத்தகம்" என்றான் ஐவானேவிச்.

பழைய நினைவுகள் வந்ததன் காரணமாக அன்னை மனம் நொந்தாள். இருந்தாலும் அவள் அவற்றை யெல்லாம் மறைத்துக் கொண்டு "நேரமாகி விட்டது. இனித் தூங்கப் போகலாம்; நாளை இன்னமும் வேண்டியதைச் சொல்கிறேன்" என்றாள் அன்னை.

மூவரும் படுக்கச் சென்றனர்.

# 18 அன்னையின் சுற்றுப் பிரயாணம்

ஸோபியா—ஐவானேவிச் இருவரிடமும், மூன்று நாட்கள் அன்னை சம்பாஷித்தாள். தன் கதைகளைச் சொன்னாள் ; அவளுக்கு அதனால் ஒரு பெரிய பாரத்தை இறக்கி வைத்தது போல் தோன்றியது. அண்ணனும் தங்கையும் மிகவும் பொறுமையாக அன்னையின் வாழ்க்கையைக் கேட்டு அறிந்தனர்.

நான்காவது நாள், அதிகாலையில் ஸோபியாவும், அன்னையும் யாத்திரை போகிறவர்களைப் போல் உடை தரித்துக் கொண்டு, இருவரும் இரண்டு மூட்டைகளைத் தோளில் தொங்கப் போட்டுக் கொண்டு, ஐவானேவிச் எதிரில் தோன்றினர். யாத்திரிகரின் உடைவேஷம் ஸோபியாவின் உயரத்தைக் குறைத்தது ; ஸோபியாவைப் பார்த்து ஐவானேவிச், "உன்னைப் பார்த்தால் வாழ்க்கை முழுதும் யாத்திரையிலேயே காலத்தைக் கடத்தியவள் போல் தோன்றுகிறது" என்றான் சிரித்துக் கொண்டே.

அவர்கள் இருவரும் விடைபெறும் போது சம்பிர தாயத்திற்குகூட ஒரு அனுதாப வார்த்தை சொல்லிக்

கொள்ளவில்லை. அன்னைக்கு இது மிகவும் புதுமையாக இருந்தது.

அன்னையும் ஸோபியாவும் நகரத் தெருக்களைக் கடந்து திறந்த வெளிப் பிரதேசத்தை அடைந்தனர். "உனக்குக் களைப்பாக இருக்கிறதா ?" என்று ஸோபியாவைக் கேட்டாள் அன்னை.

"நான் இப்படிப்பட்ட வேலைகளில் ஈடுபட்டதில்லை என்று நினைக்கிறீர்களா ? அதெல்லாம் என்வரை பழங் கதை !" என்று சொல்லிச் சிரித்து விட்டு ஸோபியா, தான் கட்சியில் சேர்ந்து செய்த காரியங்களைச் சொல்லிக் கொண்டே வந்தாள். 'மாறு பெயரில் உலாவுவது; ஒற்றர்களைக் கண்டு பதுங்குவது; ஆயிரக்கணக்கான பவுண்டு எடையுள்ள புத்தகங்கள், துண்டுப் பிரசுரங்களை கொண்டு போய் விநியோகித்தது' எல்லாவற்றையும் சொல்லிவிட்டு, "நாடு கடத்தப்பட்ட தோழர்களை ஸைபீரியாவிலிருந்து தப்பச் செய்து, வெளிநாடுகளுக்கு அழைத்துச் செல்வேன்; என்னிடம் ஒரு அச்சடிக்கும் இயந்திரம் இருந்தது; மற்ற சாதனங்களும் இருந்தன. கட்சியின் பிரசுரங்களை அச்சடித்துக் கொடுத்து வந்தேன்; சர்க்காருக்கு எப்படியோ தெரிந்து சோதனை போட வந்தனர். அச்சமயம் அச்சகத்தில் நான் மாத்திரம் இருந்தேன் ; அவர்கள் வருவது தெரிந்ததும், சட்டென்று தலையில் கைக் குட்டையைக் கட்டிக் கொண்டு, ஒரு மண்ணெண்ணெய்ப் புட்டியைக் கையில் எடுத்துக் கொண்டு, வேலைக்காரிபோல் வெளியே கிளம்பிவிட்டேன். பல முறை சிறை சென்றிருக்கிறேன், ஸைபீரியாவுக்கும் நாடு கடத்தப்பட்டிருக்கிறேன்" என்றாள்.

அவள் கதையைக் கேட்டு அன்னை சிரித்தாள் ; அவளுக்கு ஸோபியாவிடம் முன்னிலும் அதிகமான மதிப்பு ஏற்பட்டது.

வழி நெடுகிலும் ஸோபியா, வானத்தையும் மரஞ் செடிகளையும் பறவைகளையும் பார்த்துப் பாடிக் கொண்டும், அவைகளைப் பற்றி வர்ணித்துக் கொண்டும் வந்தாள். குயில் கூவுவதைக் கேட்டு அவளும் கூடக் கூவுவாள். கிளியைப்போல் கத்துவாள். அவள், பார்ப்பதற்கு வயதானவள் போலக் காணப்பட்டாலும் அவளுடைய கண்களில் யௌவனத்தின் சாயை படிந் திருந்தது. அன்னை பேச்சுவாக்கில் "உனக்கு என்ன வயதாகிறது?" என்று கேட்டாள்.

"முப்பத்திரண்டு" என்றாள் ஸோபியா.

"உன் பேச்சையும் கண்களையும் பார்த்தால், இருபது வயதுதான் மதிப்பார்கள். எனக்கு உன்னைப்பார்த்தாலே பொறுமையாக இருக்கிறது. மனிதர்களின் மனம் உனக்கு நன்றாகத் தெரிகிறது. நீங்கள், உங்களுடைய வேலையில் வெற்றி அடைவீர்கள் என்பது திண்ணம்" என்றாள் அன்னை.

"தொழிலாளர்களுடன் நாங்கள் இருக்கிறோம்; எங்களுக்கு வெற்றி நிச்சயம்"

மூன்றாவது நாள், அவர்கள் இருவரும், ரிபின் இருக்கும் கிராமத்தை அடைந்தனர். எதிரே வந்த ஒரு கிராமவாசியிடம் தார் வேலை செய்யும் இடம் எங்கே இருக்கிறது என்று கேட்டறிந்து, அங்கே போனார்கள். தொலைவிலேயே அவர்களை ரிபின் பார்த்துவிட்டான். எழுந்து வந்து உற்றுப்பார்த்து அன்னையை அவன் அடையாளம் கண்டு கொண்டான்.

அன்னையும், ஸோபியாவும், அவனை நெருங்கியதும், "நாங்கள் யாத்திரை கிளம்பினோம்; வழியில் உன் நினைவு வந்தது. சகோதரனையும் பார்த்துப் போகலாமே என்று

வந்தோம். இவள் என் தோழி அன்று" என்றாள் அன்னை.

ஸோபியா அன்னையிடம் "ஏன் பொய் சொல்லுகிறீர்கள்? இது நகரமல்ல; பொய் பேச அவசியமில்லை" என்றாள். அன்னை சிரித்துக் கொண்டே மௌனமாக இருந்தாள்.

ரிபினுடன் மற்றும் மூவர் இருந்தனர். அவர்களை, அன்னைக்கும் ஸோபியாவுக்கும் அறிமுகப்படுத்தி வைத்தான் ரிபின்.

"பவல் எப்படி இருக்கிறான்?"

"சிறையில் இருக்கிறான்!" என்றாள் அன்னை.

அனைவரும் உட்கார்ந்தனர்.

"எப்பொழுது பவலைக் கைது செய்தனர்?"

"சமீபத்தில் தான்"

யாபின், அன்னைக்கும் ஸோபியாவுக்கும் பால் கொண்டு வந்து கொடுத்தான் "நாங்கள் கிட்டத்தட்ட முனிவர்களின் வாழ்க்கை வாழ்கிறோம்" என்றான் ரிபின்.

ஸோபியாவும், அன்னையும் சிரித்தனர்.

"பவலுக்கு விசாரணை நடைபெறுமா? என்ன தண்டனை கிடைக்கும்?"

"விசாரணை நடைபெறும். ஸைபீரியாவுக்கு அனுப்புவார்கள்; கடின வேலை செய்யும்படி சொல்லுவார்கள்"

"புத்தகம் கொண்டு வந்தாயா?"

"ஆமாம். கொண்டு வந்திருக்கிறோம்" என்றாள் அன்னை.

"எனக்குத் தெரியும்; இல்லாவிட்டால் ஏன் இவ்வளவு தூரம் வரப்போகிறீர்கள்? இதோ பார் யாபின்,

மகன் சென்ற பாதையில் தாய். கண்ணை மூடிக்கொண்டு நம்மீது கை வைப்பவர்களுக்கு இப்பொழுது ஒன்றும் தெரியாது. நம்முடைய சக்தி அனைத்தும், ஒன்று திரண்டதும் அவர்கள் தெரிந்து கொள்ளுவார்கள்'' என்ருன் உரத்த குரலில் ரிபின்.

மேலும் சிறிது நேரம், எல்லோரும் பேசிக் கொண் டிருந்தனர். பிறகு, 'புத்தகங்களைக் கொடுங்கள்' என்ருன் ரிபின்.

'நடந்து வந்தது களைப்பாக இருக்கும்' என்று கூறி இருவருக்கும் படுக்கை ஏற்பாடு செய்து கொடுத்தான் ரிபின். அன்னை மாத்திரம் படுத்துக்கொண்டு தூங்கி விட்டாள். ஸோபியா கதவினருகில் உட்கார்ந்து கொண்டு, ஒரு பாட்டை முணுமுணுத்துக் கொண் டிருந்தாள்.

ரிபின் வந்தான் "அம்மா தூங்கி விட்டாளா?'' என்று கேட்டான்.

'ஆமாம்' என்று ஸோபியா தலை யசைத்தாள்.

ஸோபியாவை அழைத்துக்கொண்டு திறந்த வெளிக்கு வந்தான் ரிபின். "சமையல் வேலை கூட நாங்கள் முறை வைத்து செய்கிருேம். இன்று இக்நாடியின் முறை'' என்ருன்.

"விருந்தாளிகள் வந்ததைக் கண்டு நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன்; இதோ தேநீர் கொண்டு வருகிறேன்'' என்று இக்நாடி கூறிச் சென்ருன்.

யாபினும் யாகுப்பும் வந்தனர். ரொட்டி தேவை என்பதை அறிந்ததும், யாகுப் அதை எடுத்துவரச் சென்ருன்,

சிறிது நேரத்தில் ரொட்டி, தேநீர் இரண்டையும் கொண்டு வந்தனர். அன்னையும் எழுந்து வந்தாள். அனைவரும் சாப்பிட்டனர். அந்தச் சமயத்தில் இருமல் சப்தம் கேட்டது.

“இதோ அவன் வருகிறான்” என்று ஸோபியா விடம் ரிபின் கூறி, “எஜமானர்களால் ரத்தத்தை உறிஞ் சப்பட்டு சக்கையைத் தள்ளப்பட்டதற்கு அடையாள மாக இதோ வருகிறான் ; அவனை நகரத்திற்கு அழைத்துச் செல்லப் போகிறேன் ; ஒவ்வொரு தெருச் சந்திப்பிலும் அவனை நிறுத்தப்போகிறேன் ; அவன் சொல்வதை ஜனங் கள் கேட்கும்படி செய்வேன் ; அவன் எப்பொழுதும் ஒரே விதமாகப் பேசுவான். ஆனால் ஒவ்வொருவரும் அவன் பேச்சைக் கேட்கவேண்டும்” என்றான் ரிபின்.

“இதோ நான் வந்திருக்கிறேன்” என்று கூறிய வண்ணம் ஸேவிலி வந்து நின்றான்.

அவனுக்கு, அன்னையையும் ஸோபியாவையும் அறி முகப்படுத்தி வைத்தான் ரிபின்.

“நீங்கள் புத்தகங்கள், பத்திரிகைகளைக் கொண்டு வந்ததாகக் கேள்விப்பட்டேன் ; இந்தக் கிராமத்து ஜனங்கள் சார்பில் என் நன்றியை உங்களுக்குத் தெரி வித்துக் கொள்ளுகிறேன் ; அவர்களுக்கு படிக்கத் தெரியாது ; ஆனால் படித்துச் சொன்னால் புரிந்து கொள்ளு வார்கள்” என்று சொல்லி அவன் தன் மேலங்கியை கழற்றினான்.

எலும்புகள் தெரியும் உடல், குழி விழுந்த கண்கள், சதையற்ற கை கால்கள்—இவையே ஸேவிலியின் தோற்றம்.

“பனி வேளையில் காட்டில் சுற்றக்கூடாது ; உன் உடம்புக்கு நல்லதல்ல” என்றாள் ஸோபியா.

" எதுவும் என் உடம்புக்கு நல்லதல்ல ; சாவுதான் நல்லது " என்ருன் ஸேவிலி. சிறிது நேரம் மௌனமாக இருந்து விட்டு மீண்டும் அவன் : " ஆனுல் உலகத்திற்கு சாட்சியான நான் ஜனங்களுக்குப் பல நன்மைகளைச் செய்யலாம். என்னைப் பாருங்கள். எனக்கு இருபத் தெட்டு வயதாகிறது. நான் இறந்து கொண்டிருக்கிறேன். பத்து வருஷங்களுக்கு முன் அலட்சியமாக ஐநூறு பவுண்டு எடையுள்ள பொருளை எடுத்துத் தோளின்மீது வைத்துக்கொள்ளுவேன் ; அவ்வளவு பலசாலியான நான் எழுபது வயது இருப்பேன் என்று எண்ணினேன். ஆனுல் பத்து வருஷம்தான் வேலை செய்தேன். எனது எஜமானர்கள் நாற்பது வயதை என்னிடமிருந்து அபகரித்து விட்டனர் " என்ருன்.

" அதுதான் அவனுடைய பல்லவி " என்ருன் ரிபின்.

" அது என் ஒருவனுடைய பாட்டு மாத்திரம் அல்ல ; ஆயிரக்கணக்கானவர்களின் பாட்டும் அதுதான். ஆனுல் தங்கள் துயரத்தைப் பிறரிடம் சொல்லி அவர்கள் நன்மை யடைய வேண்டும் என்று தெரிந்து கொள்ளவில்லை. எவ்வளவு பேர் வேலை செய்து களைத்துச் செத்திருக் கிருர்கள் ? துயரம் நிறைந்த எத்தனையோ பேர் மௌன மாகப் பசியுடன் உயிர் விடுகிருர்கள் தெரியுமா ? பிறர் நன்மையடைய வேண்டும் என்ற எண்ணத்திலாவது நாம் அடைந்த அவகேட்டை வாய்விட்டுச் சொல்ல வேண்டும். தொண்டை கிழியக் கத்த வேண்டும் " என்று சொல்லி ஸேவிலி மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தான்.

யாகுப் அவனருகில் போய், " வா, ஸேவிலி பால் கொண்டு வந்திருக்கிறேன் " என்று அழைத்தான்.

ஸேவிலி மறுத்தான் ; அவனைத் தூக்கிச் சென்று மேஜையருகில் உட்கார வைத்துப் பாலை அருந்தச் செய்தான் யாகுப்.

“அவனை ஏன் இங்கே அழைத்தீர்கள்; எந்த நேரத்திலும் அவன் இறந்து விடுவான் போலிருக்கிறது” என்ருள் வருத்தத்துடன் ஸோபியா.

“அவனிடமிருந்து படிப்பினை பெறவும், உங்களுக்கு நிரூபிக்கவுமே அழைத்தோம்” என்ருன் ரிபின்.

“எஜமானர்கள் தங்கள் நலனுக்காக மற்றவர்கள் உயிரைக் கவர்கிருர்கள். நான் மில்லில் வேலை பார்த்தேன். என் எஜமானருக்குத் தன் வீட்டில் எல்லாமே பொன்ருக இருக்கவேண்டும் என்ற எண்ணம். தன் மனைவி உபயோகப்படுத்துவதற்காக ஒரு பொன் கிண்ணத்தை அவர் வாங்கிக் கொடுத்தார். அந்தக் கிண்ணத்திற்கான பணம் என் ரத்தத்தை உறிஞ்சி சேகரித்ததாகும். என்னுடைய நாற்பது வயதை அந்தப் பொன் கிண்ணம் கவர்ந்து விட்டது” என்ருன் மீண்டும் ஸேவிலி.

“புத்தகங்களைவிட இவனைப் போன்றவர்களின் காட்சியே ஒரு பெரிய படிப்பினையாகும். ஜனங்கள் இவனைப் பார்த்து, இவன் பேச்சைக் கேட்டால் போதும்” என்ருன் ரிபின்.

அனைவரும் பேசிக்கொண்டே சாப்பிட்டனர்; ஸேவிலிக்கு குளிர் அதிகமாயிருக்கிறது என்று அவன் மட்டும் கணப்பு அருகில் போய் உட்கார்ந்து சாப்பிட்டான்.

ஸோபியா, அவர்களுக்குப் பல தேசங்களிலுள்ள தொழிலாளர்களைப் பற்றியும், அவர்களின் வாழ்க்கைத் தரம் பற்றியும் விளக்கமாகச் சொன்ருள். மேலும் ‘ஒரு நாள் வரும், அப்பொழுது தொழிலாளர் சமூகத்தின் சக்தியை எல்லோரும் உணர்வார்கள்’ என்ருள்.

மறுநாள் காலை சூரியன் உதயமாகும் சமயத்தில், ஸோபியாவும் அன்னையும், தோழர்களிடம் விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டார்கள்.

## 19. பட்சி பறந்தது

அன்னையின் புது வாழ்க்கை வெகு வேகமாக முன்னேறி வந்தது. 'தன் மகன் சிறையில் இருக்கிறான். விசாரணை நடக்கப்போகிறது. கடுமையான தண்டனையும் கிடைக்கப்போகிறது' என்பது அன்னைக்குத் தெரியும். ஆனாலும் அன்னை சந்தோஷமாகத் தன் வேலையில் கவனம் செலுத்தி வந்தாள். மற்றவைகளைப் பற்றி எப்பொழுதாவது சிந்திப்பதுடன் நிறுத்திக் கொண்டாள்.

புத்தகம், துண்டுப் பிரசுரங்கள் ஆகியவற்றை எடுத்துச் சென்று, பல இடங்களில் பல தோழர்களிடம் கொடுப்பது அன்னையின் முக்கிய வேலையாயிற்று; சில சமயம் யாத்திரைக்காரி போலவும், மறு சமயம் பெரிய சீமாட்டிபோலவும் உடையணிந்து கொள்ளுவாள். வாடகை வண்டியில் ஜம்மென்று சவாரி செய்வாள். இன்னும் சில சமயம் மத்தியதர வகுப்பினரைப்போல் உடை அணிந்து ரயிலிலும் பிரயாணம் செய்வாள்; முன்பெல்லாம் பயந்ததுபோல் இப்பொழுது அன்னை பயப்படுவதே இல்லை. அவளுக்கு இந்த வாழ்க்கையே மிகவும் பழக்கமாகிவிட்டது. ஒற்றர்கள் அத்தனை பேரையும்

அவள் அறிவாள். புதுப்புது மனிதர்களுடன் பேசிப் பழகலானாள்.

ஐவானேவிச், தினமும் இயந்திரத்தைப்போல் வேலை செய்து வந்தான். காலை எட்டு மணிக்கு தேநீர் அருந்துவான். உடன் தினப் பத்திரிகை படிப்பான்; அவற்றில் உள்ள முக்கிய செய்திகளை அன்னைக்கு எடுத்துச் சொல்லுவான்; ஒன்பது மணிக்கு வேலைக்குச் செல்வான். பிறகு மாலையில்தான் திரும்புவான்.

ஸோபியா இரண்டு நாட்கள் இங்கு இருப்பாள்; பிறகு எங்காவது போவாள்; நான்கு, ஐந்து தினங்கள் கழித்து வருவாள். அவள் வாழ்க்கை ஊர் சுற்றித் திரிவதிலேயே கழிந்தது.

மாலை வேளைகளில், பல நண்பர்கள் வருவார்கள்; முக்கியமாக யோகார் வருவான். அவன், நண்பர்களிடம் தன் வியாதியைப் பற்றிக் கேலியாகவும், தமாஷாகவும் பேசுவான். சில சமயங்களில், வெகு தூரத்திலிருந்தும் சிலர் வருவார்கள். அதிக நேரம் பேச்சு நடைபெறும். அன்னை இவற்றை உன்னிப்பாகக் கவனித்து வருவாள்.

ஒரு நாள் ஸாஷா வந்தாள். பவலைப்பற்றி விசாரித்தாள். அவனைப் பார்த்தால் தன் நன்றியைத் தெரிவிக்கும்படி கூறிச் சென்றாள் அன்னையிடம்.

நாட்ஷா வந்தாள். தற்சமயம் ஒரு சிறு நகரத்தின் பள்ளி ஒன்றில் உபாத்தியாயினியாக வேலை பார்த்து வருகிறாள். அங்கே மில் ஒன்றும் இருக்கிறது. அதில் வேலை செய்யும் தொழிலாளர்களிடையே, ஒற்றுமையை ஏற்படுத்துவதும் அவர்களுக்குத் துண்டுப் பிரசுரங்கள், புத்தகங்களை விநியோகிப்பதும் நாட்ஷாவின் வேலை.

ஒரு நாள் மாலை, தினமும் வரவேண்டிய வேளையில் ஐவானேவிச் வரவில்லை. வெகுநேரம் கழித்தே வந்தான்.

அவன் படபடப்புடன், "சிறையிலிருந்து நம்மைச் சேர்ந்த ஒருவன் தப்பிவிட்டானும். அவன் யாரென்று தெரியவில்லை. அவனைத் தேடி இவ்வளவு நேரம் அலேந் தேன்" என்றான்.

"பவலாக இருக்குமா?" என்றாள் அன்னை கம்மிய குரலில்.

"இருக்கலாம். பெரிய தெருக்களில் அவனைஎப்படிக் கண்டு பிடிப்பது? நான் மீண்டும் வெளியில் போகிறேன்."

"நானும் வருகிறேன்" என்றாள் அன்னை.

"நீங்கள் யோகார் வீட்டிற்குப் போங்கள். அவனுக்கு ஏதாவது விஷயம் தெரியுமா என்று விசாரியுங்கள்" என்று கூறிவிட்டு ஐவானேவிச் வெளியில் சென்று விட்டான்.

அன்னை ஒரு கைக்குட்டையை எடுத்துத் தலையில் கட்டிக்கொண்டு யோகார் வீட்டிற்குக் கிளம்பினாள்.

யோகார் வீட்டின் வாசலை அடையும்போதே, அவள் பார்வையில் நிக்கோலாய் தென்பட்டான். சிறையிலிருந்து தப்பி வந்தவன் அவன்தான் என்பதை அன்னை கண்டு கொண்டாள். அவனை நோக்கி வந்தாள் அன்னை; ஆனால் அவன் திடீரென மறைந்து விட்டான். அதனால் இது மனப்பிராந்தியோ என அன்னை கருதி, யோகாரைக் காண வீட்டினுள் சென்றாள். யோகார் ஒரு சோபாவில் சாய்ந்து கொண்டிருந்தான். அவன் உடம்பு துரும்பு போல் இளைத்திருந்தது; எலும்புக்கூடு போலவே காணப்பட்டான். அன்னையைக் கண்டதும் அவன் எழுந்திருக்க முயற்சித்தான். ஆனால் முடியவில்லை. அன்னையும் அவனைக் கையமர்த்தி, எழுந்திருக்க வேண்டாம் எனச் சொன்னாள். பிறகு தான் வந்த விஷயத்தைச்

சொன்னுள். அவள் பேச்சு முடியும்போது, நிக்கோலாய் அங்கு தோன்றினுன்.

"சிறையிலிருந்து வெளிக்கிளம்பி வந்து விட்டேன். இப்பொழுது நான் அன்னையைக் கண்டிராவிட்டால் நேராகச் சிறைச் சாலைக்கே போயிருப்பேன்; எப்படிச் சிறையிலிருந்து தப்பினேன் என்பது எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது" என்ருன் நிக்கோலாய்.

"எப்படி வெளியேறி வந்தாய்?" என்று கேட்டான் யோகார்.

"எனக்கே தெரியாது! சிறைக் காவலாளிகளுக்கும் கைதிகளுக்குமிடையே சச்சரவு மூண்டது. காவலாளிகளில் ஒருவன் போலீஸ் படையில் இருந்தவன். அவன் ஏதோ திருடியதற்காக அவனைப் போலீஸிலிருந்து விலக்கி, சிறைக் காவலனுக நியமிக்கப்பட்டிருக்கிறது. அவன் கைதிகளுக்குள் ஒற்றன்; கோள் மூட்டுபவன்; அவனுல் தான் இந்தச் சச்சரவு. அந்தச் சமயம் நான் பார்த்தபோது வெளிக் கதவு திறந்திருந்தது; சந்தடி சாக்கில் நான் நேராக நடந்தேன். வெளிப்புறத்தில் ஒரு பெரிய பூங்கா இருந்தது. அதில் சிறிது நேரம் தங்கினேன். பக்கத்தில் சுடுகாடு. அதில் ஒரு குழந்தையைப் புதைத்துக்கொண்டிருந்தார்கள். அதைக் கண்டேன். திரும்பிப் பார்த்தபோது சிறைக் கதவு மூடப்பட்டிருந்தது. என் தோழர்களிடமோ எதுவும் சொல்லாமல் வந்துவிட்டேன். எங்கே போவது என்றே தோன்றவில்லை" என்ருன் நிக்கோலாய்.

"ஏன் மீண்டும் சிறைக்கே சென்று கதவைத் தட்டலாமே. 'மன்னிக்க வேண்டும்; வெளியே செல்லவேண்டும் போல ஒரு உணர்ச்சி ஏற்பட்டது; ஆனுல், இதோ வந்து விட்டேன்' என்று சொல்லலாமே?" என்ருன் யோகார்.

" அது போகட்டும் யோகார்! இன்னமுமா வியாதி யுடன் இருக்கிருய்?"

" ஆமாம் " என்ருன் யோகார்.

"சிறையிலிருக்கும் தோழர்களும் சரி, வெளியிலுள்ள தோழர்களும் சரி; என் வரையில் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருப்பார்கள்; கவலை கொண்டிருப்பார்கள்" என்று சொல்லி நிக்கோலாய் தலையைச் சொறிந்து கொண்டான்.

" சிறை அதிகாரிகள் கூடத்தான் கவலையுடன் இருப் பார்கள். அவர்கள்மீது உனக்கு அனுதாபம் இல்லையா?" என்று சொல்லி யோகார் சோபாவில் எழுந்து உட்கார்ந் தான். பிறகு, "எது எப்படியாவது போகட்டும்; உன்னைப் பாதுகாக்க வேண்டும்......ஏன் அம்மா பவலைப் பற்றி விசாரிக்க வில்லையா?" என்ருன்.

" பவல் சௌக்கியமாக இருக்கிருன். சிறையில் அவன் எங்களுக்கெல்லாம் வயதில் மூத்தவன் போலக் காணப்படுகிருன். தலைவனைப் போல் எதற்கும் அதிகாரி களிடம் அவன்தான் முதலில் பேசுகிருன்; அதிகாரிகளும் அவனிடத்தில் மிகுந்த மரியாதையுடன் நடந்துகொள்ளு கிருர்கள்.........எனக்குப் பசியாயிருக்கிறது. ஏதாவது சாப்பிடக் கொடு " என்ருன் நிக்கோலாய்.

" உள்ளே அலமாரியில் ரொட்டி இருக்கும். எடுத்து வந்து கொடுங்கள் அம்மா. பக்கத்து வீட்டிற்குப் போய் கதவைத் தட்டுங்கள்; ஒரு பெண் வருவாள்; அவளிடம் உள்ள தின்படங்கள் எல்லாவற்றையும் எடுத்து வரச் சொன்னதாகச் சொல்லுங்கள் "

" எல்லாவற்றையுமா எடுத்து வரச் சொல்லுகிருய், எதற்கு?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் நிக்கோலாய்.

" முதலிலே இருக்காது. இருந்தாலும் கொஞ்சம் தான் இருக்கும் பதருதே "

அன்னே போய்ப் பக்கத்து வீட்டின் கதவைத் தட்டினுள் ; ஒரு பெண் வந்து கதவைத் திறந்தாள்.

" யோகாரிடமிருந்து வந்திருக்கிறேன். சாப்பிட வேண்டுமாம். எதாவது இருப்பதைக் கொண்டுவரச் சொன்னுன் " என்ருள் அன்னே.

" அவனுக்கு நோய் அதிகமாக இருக்கிறதா ?"

" ஆமாம்."

" சரி, சாப்பிட ஒன்றும் தேவை இல்லே........... ஒ பவலுடைய அன்னேயா ? சரியாகக் கவனிக்க வில்லே. இதோ வருகிறேன் " என்று சொல்லிக் கதவைப் பூட்டி விட்டுக் கிளம்பினுள்.

அவர்கள் இருவரும் யோகார் வீட்டிற்கு வந்ததும், அவன், " என் மூதாதையருடன் சேர நான் தயாராகி வருகிறேன். லுதிமிலா, இவன் சிறையிலிருந்து தப்பி வந்து விட்டான். சற்று வெட்கப்பட வேண்டிய விஷயம் தான் ! அவனுக்குச் சாப்பிடக் கொடு. எங்காவது அவனேப் பதுக்கி வை " என்ருன்.

" பேசுவதை நிறுத்து யோகார். அவர்கள் வந்ததும் எனக்குச் சொல்லி அனுப்புவதுதானே ? மருந்து சாப் பிட்டாயா ? மருந்து சாப்பிட்டால் கொஞ்சம் சௌகரிய மாயிருக்கிறது என்று நீ தானே சொன்னுய் ?......... 'தோழரே என்னுடன் வாருங்கள். யோகாரை ஆஸ்பத்தி ரிக்கு அனுப்ப ஏற்பாடு செய்கிறேன்.' அம்மா அதோ இருக்கும் மருந்தில் யோகாருக்கு ஒரு கரண்டி கொடுங்கள் " என்று சொல்லி நிக்கோலாயை அழைத்துக் கொண்டு லுதிமிலா கிளம்பினுள்.

அன்னை மருந்து கொடுத்தாள்; அவன் அதைக் குடித்ததும் "நான்பேசாதிருந்தாலும் இறக்கத்தான்போகிறேன். சிறிது நேரம் கிடைக்கும் சந்தோஷத்தை நான் ஏன் இழக்க வேண்டும் ? அம்மா ! உங்களைப் போன்ற நல்லவர்கள் மேல் உலகத்தில் கூட இருப்பார்கள் என்று நான் நம்பவில்லை. உங்களுடன் பேசுவதில் எனக்கு அளவில்லா ஆனந்தம் ஏற்படுகிறது" என்ருன்.

அப்போது லுதிமிலா திரும்பி வந்தாள். "அம்மா நிக்கோலாய்க்கு வேறு உடை வேண்டும். வாங்கி வருகிறீர்களா ? அவனுக்கு வேறு உடை கொடுத்ததும், எங்கே போக வேண்டும் என்பதை அவனிடம் சொல்லியிருக்கிறேன்; நீங்கள் அவனை அந்த இடத்தில் கொண்டு போய் விட்டு வாருங்கள். நான் அதற்குள் யோகாரை ஆஸ்பத்திரியில் சேர்த்து வருகிறேன்'' என்ருள்.

"நான் ஆஸ்பத்திரிக்கே வருகிறேன்" என்ருள் அன்னை.

"சரி என்று, லுதிமிலா தலை அசைத்ததும், அன்னை அங்கிருந்து சென்ருள். ஒரு வாடகை வண்டியை அமர்த்திக்கொண்டு கடை வீதிக்குப் போனுள். குடிகாரக் கணவனுக்கு உடைவாங்குவதாகக் கூறிக்கொண்டே, அவள் பேரம் பேசினுள்; கடைக்காரன் அதற்கு மசியாமல் தன் காரியத்திலேயே கண்ணுக லாபத்துடன் வியாபாரத்தைச் செய்தான். அன்னையும் அதைப் பொருட்படுத்தாமல் உடையை வாங்கிக் கொண்டு வீடு திரும்பினுள்.

நிக்கோலாய்க்கு புது உடைகளை அணிவித்து, அவனை அழைத்துக் கொண்டு வெளிக்கிளம்பினுள் அன்னை. வழியில் அவர்கள் ஸாஷாவைச் சந்தித்தார்கள். அவளிடம் யோகார் பற்றிச் சொன்னுர்கள். நிக்கோலாயை ஸாஷாவுடன் அனுப்பிவிட்டு, அன்னை ஆஸ்பத்திரிக்குப் போனுள்.

அவள் ஆஸ்பத்திரிக்கு வந்து யோகார் இருக்குமிடத்தை நெருங்கியபோது, டாக்டர் அவனுக்கு மருந்து கொடுத்துக் கொண்டிருந்தார். 'பேசக் கூடாது' என்று கட்டளையிட்டார். அவர் போனதும் யோகார், "சாவு என்னை நெருங்கிக்கொண்டிருக்கிறது. என் மீது உள்ள அன்பு காரணமாக டாக்டர் கடுமையான தண்டனை போடுகிறார். என்னைப் பிழைக்கவைக்க வேண்டும் எனக் கருதுகிறார்" என்றான்.

"எதற்கும் பேசாமல் இரு யோகார்" என்றாள் அன்னை.

"அது கிடக்கட்டும் அம்மா, உங்களுடன் பேசுவதே ஒரு தனி ஆனந்தம். சிறையிலோ, அல்லது நாடு கடத்தப் பட்டோ சாவேன் என்று எண்ணியிருந்தேன். நல்லவேளையாக நீங்கள் அருகில் இருக்கும்போது சாகப்போகிறேன்... உங்களுக்குச் சிறை, நாடு கடத்தப்படுதல், கடின வேலை எல்லாம் காத்திருக்கின்றன; நீங்கள் இவைகளுக்குப் பயப்படுகிறீர்களா?" என்று கேட்டான்.

"இல்லை" என்றாள் அன்னை.

அவன் கண்களை மூடிக்கொண்டு "என்னவோ போல இருக்கிறது" என்றான்.

லூதிமிலா வந்தாள். அவனைப்பார்த்து "என்ன விஷயம்?" என்று கேட்டாள்.

"கொஞ்சம் பொறு" என்றான் அவன். வாயைத் திறந்தான். கைகளை விரித்தான். கண்களைத் திறந்து, இருவரையும் ஒருமுறை பார்த்தான். மறு விநாடியே கண்கள் கவிந்தன. தலை தோள்மீது சாய்ந்தது.

'ஐயோ' என இருவரும் அலறினார்கள். லூதிமிலா ஜன்னலருகில் சென்று, "இறந்து விட்டான். ஒருவிதக்

குறையும் இல்லாதவன்போல் நிம்மதியாக இறந்து விட்டான் '' என்றாள்.

யோகாரின் கைகளை, மார்புக்கு நேராக மடக்கி வைத்தாள் அன்னை. போர்வையால் போர்த்தினாள். பிறகு லூதிமிலாவிடம் வந்து அவள் தலையை விரல்களால் கோதிக்கொண்டே ஆறுதல் கூறினாள்.

லூதிமிலா கண்களில் நீர் பெருகக் கம்மிய குரலில், "யோகாரை எனக்கு வெகு நாட்களாகத் தெரியும். நானும் அவனும் ஒன்றாகச் சிறையில் இருந்தோம். நாடு கடத்தப்பட்டோம். கஷ்டம் வந்தபோது பல தோழர்கள் தாங்க முடியாமல் தவித்தார்கள். பலர் உயிரிழந்தனர். ஆனால்,யோகார் எப்பொழுதும் சந்தோஷமாக இருப்பான். கோழையாக உள்ளவனைத் தைரியப்படுத்துவான். ஒவ்வொருவருக்கும், தன்னால் முடிந்த அளவு உதவி யிருக்கிறான். எப்படித்தான் அவன் இவற்றில் தேர்ச்சி பெற்றானோ தெரியாது. நான்தான் மற்றவர்களைவிட அவனோடு அருகில் இருந்தவள். அவனுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டவள். அவனிடமுள்ள அனைத்தையும் எனக்குக் கொடுத்தான். ஆனால் அவைகளுக்குப் பிரதியாக என்னிடம் எதையும் கேட்டதில்லை '' என்று கூறிவிட்டு கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

டாக்டர் வந்தார். யோகாரைப் பார்த்துவிட்டு, "எவ்வளவு நேரமாகிறது ?'' என்று கேட்டார்.

இருவரும் பதிலே சொல்லவில்லை. அவர் தன் நெற்றியை வருடிக்கொண்டே "யோகார் மனதிற்கு இது அதிசயமே இல்லை. ஆறுமாதங்களுக்கு முன்பே இப்படி நடந்திருக்க வேண்டும் '' என்றார். அவர் குரல் உறுதியாக இருந்தது. சிறிது நடுக்கமும் காணப்பட்டது. டாக்டர் சுவற்றின் மீது சாய்ந்து

கொண்டார். யோகார் மரணம், அவர் மனதைப் பெரிதும் பாதித்து விட்டது.

மூவரும் மௌனமானுர்கள். சிறிது நேரத்தில் டாக்டர் தன் வேலையைக் கவனிக்கச் சென்று விட்டார். ஞாதிமிலாவும் அன்னையும் வீட்டுக்குத் திரும்பினுர்கள்.

மாலையில் ஐவாஞேவிச், சோபியா, அன்னை மூவரும் தேநீர் பருகிக் கொண்டிருந்தார்கள். அப்போது, வெகு உற்சாகமாக ஸாஷா வந்தாள். சந்தோஷமாக எதையோ பற்றிப் பேசினுள். ஆனுல் ஐவாஞேவிச் ஆகியோருக்கு அது பிடிக்கவில்லை; இடை மறித்து "நாங்கள் யோகார் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம்'' என்றுள் ஸோபியா.

"ஆஹா, யோகாரைப்பற்றியா பேசிக் கொண்டிருக்கிறீர்கள்; அவன் எப்படிப்பட்டவன்; அவனைப் போன்ற தோழர்கள் இருக்கமுடியுமா? கவலை என்பதே அவன் முகத்தில் காணமுடியாது; ஹாஸ்யமில்லாத வார்த்தை அவன் வாயிலிருந்து வராது; அவனைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் அவனுக்கு என் கடமையும் நினைவும் வருகிறது. அவனை நான் மிகவும் நேசிக்கிறேன்'' என்றுள் முன்னிலும் அதிகச் சந்தோஷத்துடன்.

"இன்று அவன் இறந்து விட்டான்'' என்றுள் ஸோபியா.

"என்ன யோகார் இறந்து விட்டானு? ஐயோ என்னுல் நம்பக்கூட முடியவில்லையே!'' என்று முகத்தை மூடிக்கொண்டு ஸாஷா அழலானுள்.

"உண்மையைத்தான் சொல்லுகிறோம்.'' என்றுன் ஐவாஞேவிச்.

ஸாஷா எழுந்தாள்; குறுக்கும் நெடுக்கும் நடந்தாள்; வீராவேசம் வந்தவள் போல், "மரணம் எதைக் காட்டு

கிறது? இறந்தது எது? யோகாருக்கு நாம் வைத்திருந்த மதிப்பா இறந்தது? தோழன் என்று கருதி வந்தோமே, அந்த எண்ணமா இறந்தது? ஒரு வீரனுக்கு நாம் வைத்திருந்த மரியாதை அவன் சாவோடு முடிந்ததா?

" அவனுடைய நல்ல செயல்கள் என் மனதிலிருந்து மடியவில்லை. ஒருவன் இறந்துவிட்டான் என்று அவசரத்தில் கூறுவதே தவறு. அப்படிச் சொல்லுவதால் தான் நாம் வெகு சிக்கிரத்திலேயே ஒருவரை மறந்து விடுகிறோம். அவனது உதடுகள்தான் செத்தன ; அவன் உரைத்த வாசகங்கள், உயிரோடு இருப்பவர்களின் உள்ளங்களில் என்றென்றும் ஒலித்துக் கொண்டுதா னிருக்கும் " என்றாள்.

பேச்சை மாற்றுவதற்காக ஐவானேவிச் "நிக்கோலா யுடன் பேசியதில் சிறையிலிருந்து தப்பும் வழி தெரிய வந்ததா?" என்று கேட்டான்.

ஸாஷா மனதைத் தேற்றிக்கொண்டாள். பூரணமாகத் தேற்றிக்கொள்ள முடியாவிட்டாலும் ஒரளவு முடிந்தது. " அது மிகவும் சாதாரணமானது. எப்பொழுது வேண்டு மானாலும் தப்பி வரலாம் " என்றாள்.

" உண்மையில் சாத்தியமா?" என்று கேட்டாள் ஸோபியா.

"ஆமாம். தப்பிவர விரும்பினால் எல்லா ஏற்பாடுகளும் செய்யலாம்."

" முதலில் சிறையிலிருக்கும் தோழர்களின் விருப் பத்தை நாம் அறிய வேண்டும்." என்றான் ஐவானேவிச்.

ஸாஷா தலை குனிந்து கொண்டாள். ஸோபியா சிகரெட் பற்ற வைத்தாள்.

“தப்பி வர இஷ்டப்படாதவர்கள் கூட இருப்பார்களா?” என்ருள் அன்னே. எவருமே இதற்குப் பதில் சொல்லவில்லே.

“நிக்கோலாயை நான் பார்க்க வேண்டும்” என்ருன் ஐவானேவிச்.

“நாளேக்கே ஏற்பாடு செய்கிறேன்”

“நாளே மறுநாள் நீங்கள் பவலேப் பார்க்கச் செல்வீர்கள் அல்லவா? அப்பொழுது நான் ஒரு குறிப்புத் தருகிறேன். அதை அவனிடம் கொடுங்கள்” என்ருன் ஐவானேவிச்.

அவன் கருத்தை அன்னே புரிந்து கொண்டாள்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஸாஷா சென்று விட்டாள்.

ஸோபியா பியானே வாசிக்க உட்கார்ந்து விட்டாள்.

## 20. மரண ஊர்வலத்தில் கெடுபிடி.

மறு நாள் காலையில், யோகார் மரணமடைந்த ஆஸ்பத்திரி முன், ஆண்களும் பெண்களும் ஆயிரத கணக்கில் கூடியிருந்தனர்; எல்லோருடைய முகத்திலும் கவலைக்குறி தென்பட்டது. பலரும் பலவிதமான பேச்சுக்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். போலீஸ்கரர்கள் கையில் துப்பாக்கியுடன் வரிசையாக நின்று கொண்டிருந்தனர்; ஒற்றர்கள் ஜனங்களின் மத்தியில் புகுந்து அவர்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று அறிய முனைந்தனர். 'வெறும் வார்த்தைக்குப் பயந்து சர்க்கார் துப்பாக்கிகளை எடுத்து வந்திருக்கிறது,' என்று ஜனங்கள் பேசலானார்கள்; அன்னையும் அந்தக் கூட்டத்தில் கலந்திருந்தாள்.

ஆஸ்பத்திரி கதவு திறந்தது; யோகாரின் சவப்பெட்டி வெளியே வந்தது; அதன் மீது சிவப்புநாடாக் கட்டப்பட்டிருந்தது; பூச்செண்டுகள் வைக்கப்பட்டிருந்தன. சவப்பெட்டி்யை நோக்கி ஒரு போலீஸ் அதிகாரி வந்து, 'சிவப்பு நாடாவை எடுத்து விடுங்கள்' என்று உத்திர விட்டான்.

ஜனங்கள் மறுத்தனர் ; 'அடக்கு முறை ஒழிக என்று கோஷமிட்டனர். 'இறந்த பிறகுமா உங்கள் தொந்தரவு ஒழியவில்லை !' என்றனர் பலர்.

கடைசியாக போலீஸ் அதிகாரியின் விருப்பப்படி, பலாத்காரமாக 'சிவப்பு நாடா' அகற்றப்பட்டது. பிறகு சடலம் மௌன ஊர்வலத்துடன் மயானத்தை நோக்கிச் சென்றது.

மௌனமாகச் சடலத்தை எடுத்துச் செல்லப் படுவது கண்டு அன்னை மனம் நொந்தாள். ஆனால் போலீஸின் தர்பாரை, எண்ணி மனதை அடக்கிக் கொண்டாள்.

மயானத்தில் சவம் அடக்கம் செய்ய ஏற்பாடுகள் நடந்தன; அப்போது போலீஸ் அதிகாரி முன் வந்து "யாரும் பேசக்கூடாது என்று மேலதிகாரியின் உத்தரவு ; அதனால் இங்கு யாரும் பேச அனுமதிக்க மாட்டேன்" என்றான்.

"நான் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்" என்று ஒரு வாலிபன் மிகவும் சாவதானமாகத் தொடங்கினான். "தோழர்களே, நமது உபாத்தியாயரின் சமாதி முன் நாம் சபதம் எடுத்துக் கொள்வோம் ; அவருடைய விருப்பத்தை மறக்காமல் நிறைவேற்றுவோம் ; தேசத்தின் அவக்கேடான நிலையைக் குழிதோண்டிப் புதைக்கும் வரை ஓய்ந்திருக்கமாட்டோம். சாவுக்கும் அஞ்சோம்" என்றான்.

"அவனைக் கைது செய்யுங்கள்" என்றான் போலீஸ் அதிகாரி.

போலீஸ்காரர்கள் வாலிபனைக் கைது செய்யப் பாய்ந்தார்கள்.

ஜனங்கள் வாலிபனைச் சூழ்ந்து கொண்டு 'அடக்கு முறை ஒழிக' என்று கோஷித்தனர்.

"தோழர்களே! சும்மாயிருங்கள்; என்னைப் போக விடுங்கள்" என்றான் வாலிபன்.

அதற்குள் போலீஸ்காரர்களுக்கும், ஜனங்களுக்கும் மோதல் ஏற்பட்டது. போலீஸ்காரர்கள், துப்பாக்கி முனையில் உள்ள கத்திகளை வீசினார்கள். ஜனங்கள், கையிலிருந்த தடிகளைச் சுழற்றினார்கள். அன்னை இவை களைப் பார்த்த வண்ணம் இருந்தாள். கூட்டத்தின் நடுவில் ஐவானோவிச் இருப்பதைக் கண்டாள். அவன் தலையி லிருந்த தொப்பி கீழே விழுந்து விட்டது. அவன் முகம் சிவந்து காணப்பட்டது. உரத்த குரலில் அவன், "ஜனங்களே, நீங்கள் உங்கள் பொறுமையை இழந்து விட்டீர்களா? தோழர்களே, பொறுமையாக இருங்கள்" என்றான். அவனுடைய ஒரு கையில் ஏதோ சிவப்பாகக் காணப்பட்டது.

"ஐவானோவிச்" என்று கூப்பிட்டுக் கொண்டே அன்னை, அவனை நோக்கிச் செல்ல யத்தனித்தாள். அப் போது ஸோபியா அவளைப் பிடித்து நிறுத்தினாள்; பிறகு அவள் கையில் ஒரு பையனைப் பிடித்துக் கொடுத்து, "இவன் தலையில் கைக் குட்டையைக் கட்டுங்கள்; இவனை நம் வீட்டிற்கு கூட்டிப் போங்கள்" என்றாள்.

அன்னை பையனைப் பார்த்த சமயம் அவன் தலையிலி ருந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது; தலையில் கைக் குட்டையைக் கட்டினாள்; அவனை கூட்டத்திலிருந்து மெல்ல அப்புறப் படுத்தி மயானத்தை தாண்டியதும், ஒரு வண்டியை அமர்த்திக் கொண்டாள்; வண்டியில் போகும் போது பையன் பேசலானான்: "என்னை அவன் அடித்தான்.

நாளு சும்மா இருப்பவன். கைத் தடியால் நானும் அடித்து விட்டேன்.''

அன்னை அவனைப் பேச விடாமல் தடுக்க முயன்ருள். அந்தச் சமயம் வண்டிக்காரன்: "பையன் குடித்திருக்கிருன் போலிருக்கிறது ?'' என்ருன்.

"ஆமாம்'' என்ருள் அன்னை.

"யோகாரிடம் நாங்கள் பன்னிரண்டு பேர் இருந்தோம். அவரை நாங்கள் தெய்வமாகப் பாவித்தோம்'' என்று கூறி சிறிது நிறுத்தினுன். "எங்களுக்கு அரசியல் பொருளாதாரத்தைப் பற்றி டிட்டோவிச் என்பவர் சொல்லிக் கொடுத்தார். அவரும் யோகாரின் நண்பர் தான். அவர்தான் இன்று கைது செய்யப்பட்டவர்'' என்று மீண்டும் சொன்னுன்.

அன்னை பயந்து போனுள். அவன் இனியாவது பேசாமல் இருக்க வேண்டுமே என்று அவனுடைய வாயை கையால் மூடிக் கொண்டு விட்டாள். ஆனுல் அதே சமயத்தில் பையனும் பேச முடியாத நிலைக்கு வந்து விட்டான். அதிக ரத்தம் வெளிப் பட்டதால், மயக்க முற்று விட்டான்.

வழியில் வண்டிக்காரன், மயானத்தில் நடைபெற்ற போலீஸ் தர்பாரைப் பற்றி அவன் கேட்ட அளவுக்குச் சொல்லிக் கொண்டே வந்தான். வீடு நெருங்கும் சமயத்தில், "வண்டிக்காரன் பிழைப்பு இருக்கிறதே, அது நாயினும் கேடானது'' என்ருன்.

அன்னை வீட்டின் முன் இறங்கினுள். பையனும் மயக்கம் தெளிந்து எழுந்து அன்னையுடன் இறங்கிச் சென்ருன்.

## 21. மகனே என் செல்வம்

ஸோபியா வீட்டில் காணப்பட்டாள்; அன்னையையும் பையனையும் வரவேற்றாள்; அவர்கள் உள்ளே வந்ததும், "டாக்டர், இதோ அவர்கள் வந்திருக்கிறார்கள்!" என்று கூறிவிட்டு, அன்னையிடம் "நீங்கள் களைத்துப் போயிருக்கிறீர்கள்; உள்ளே போங்கள். ஐவானோவிச், அன்னைக்கு தேநீர் கொடு; கொஞ்சம் மதுகூட கொடு" என்று கூறினாள் ஸோபியா.

ஐவானோவிச்சைப் பார்த்ததும், சிறிது கவலை கொண்டாள் அன்னை. "என்னைப் பற்றிக் கவலை வேண்டாம்" என்றான் அவன்.

பக்கத்து அறையிலிருந்து டாக்டர், "ஸோபியா, தண்ணீர், சுத்தமான துணி, பஞ்சு எல்லாம் கொண்டு வா" என்றார்.

அன்னை, அவைகளை எடுத்துவரக் கிளம்பினாள்; ஐவானோவிச் அவள் கையைப் பற்றி "நீங்கள் களைத்துப் போயிருக்கிறீர்கள்; ஸோபியா எல்லாவற்றையும் செய்வாள். நீங்கள் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்" என்றான்.

அன்னை அவன் பேச்சைத் தட்டிச் செல்ல விரும்பவில்லை. அவன் அருகிலேயே உட்கார்ந்தாள். “உங்களைப் போலீஸார் அடித்தார்களா ?” என்று கேட்டாள்.

“இல்லை, நானே அஜாக்கிரதையாக எதிலோ கையை மோதிக்கொண்டேன் என எண்ணுகிறேன்.”

அதற்குள் டாக்டர் வந்தார். “பையன் முகத்தில் கொஞ்சம்தான் அடிபட்டிருக்கிறது. ஆனால் தலையில் பலத்த காயம் ஏற்பட்டிருக்கிறது. மிகவும் பலசாலியானவன். ரத்தம் அதிகமாகப் போய்விட்டது. நாளை மறு நாள் அவனை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லலாம். நீங்கள், மயானத்தில் நடைபெற்ற சம்பவத்தைக் கட்டுரையாக எழுதிப் பிரசுரிப்பீர்கள் அல்லவா ?” என்றார் டாக்டர்.

“ஆகா, நிச்சயமாக !” .

பையனைத் தனியாக விட்டு விட்டு டாக்டர், ஐவானேவிச், ஸோபியா, அன்னை ஆகியோர் வேறு அறைக்கு வந்தார்கள்.

“பிரச்சாரம் மட்டும் போதாது. வேலைத் திட்டத்தை நாம் விஸ்தரிக்க வேண்டும். இளம் தொழிலாளர்கள் சரியாயிருக்கிறார்கள் ; துண்டுப் பிரசுரங்கள் நிறையப் பரவ வேண்டும். லுதிமிலாவால் முடியாது. அவளுக்கு நாம் உதவாவிடில் அவள் நிலைமை மோசமாகி விடும்.” என்றார் டாக்டர்.

“நிக்கோலாய் என்ன ஆனான்?” என்றாள் ஸோபியா.

“அவன் நகரத்தில் இருக்க முடியாது. புதிய இடத்தில் அச்சகம் ஏற்படாதவரை, அவன் வேலை செய்தும் பிரயோசனம் இல்லை. அத்துடன் வேறு ஒரு ஆளும் தேவை ”

“நான் இருக்கிறேனே !” என்றாள் அன்னை.

“அது உங்களால் முடியாது; மேலும் நகரத்திற்கு வெளியே இருக்க வேண்டும்; பவலைப் பார்க்கப் போவதை நிறுத்திக்கொள்ள வேண்டும்” என்றான் ஐவானேவிச்.

“நான் அவனைக் காணுவிடில், அவனை ஒன்றும் பாதிக்காது. மேலும் அவனைக் காணப்போவது எனக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது. அங்கே போய் அவன் எதிரில் சிலைபோல் நிற்கவேண்டும். ஒன்றும் பேசவிடமாட்டார்கள் சிறைக் காவலாளிகள். எதற்காகத்தான் நான் அங்கே போக வேண்டும்?”

ஸோபியா, அன்னையின் கையைப் பற்றிக்கொண்டு, “அச்சகத்தைப் பாதுகாக்க வேண்டியது அன்னையின் வேலை” என்றாள்.

டாக்டர் ஏதோ சிந்தனையில் இருப்பதைக் கண்ட ஐவானேவிச், “என்ன யோசிக்கிறீர்கள் ?” என்று கேட்டான்.

“நாம் எண்ணிக்கையில் குறைவாகத்தான் இருக்கிறோம். இன்னும் அதிகமாக உழைக்க வேண்டும். பவலும் ஆண்டிரியும் சிறந்த தொண்டர்கள். அவர்களைச் சிறையிலிருந்து தப்பி வரச் செய்யவேண்டும்” என்றார்.

ஐவானேவிச் அன்னையைப் பார்த்தான்.

* * *

மறுநாள் சிறைச்சாலையில், பவலை அன்னை சந்தித்தாள். முதலில் தங்கள் சௌக்கியம் பற்றி விசாரித்துக்கொண்டார்கள். பிறகு, “யோகார் இறந்து விட்டான்” என்றாள் அன்னை.

"யோகாரா ?" என்று கேட்டு பவல் தலை குனிந்தான்; துக்கம் அவன் தொண்டையை அடைத்துக்கொண்டது.

" ஆமாம். அவனைப் புதைக்கச் சென்ற சமயம் போலீஸாருடன் மோதல் ஏற்பட்டது " என்றாள் அன்னை.

" இந்தப் பேச்சு கூடாது " என்றான் காவலாளி.

அதற்குமேல் அன்னை பேசாமல் பவலின் கையைப் பற்றினாள். அப்போது தான் கொண்டு வந்திருந்த ஐவானோவிச்சின் குறிப்பை, மெதுவாக அவனிடம் சேர்ப்பித்து விட்டாள். சிறிது நேரம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்து விட்டு அன்னை விடைபெற்றுக் கொண்டாள்.

இரவு ஸாஷா வந்தாள். " பவலிடம் கடிதம் கொடுத்தீர்களா ?" என அன்னையைப் பார்த்துக் கேட்டாள்.

" கொடுத்தேன் "

" என்ன பதில் சொன்னான் ?"

" கடிதத்தை எப்படிப் படிப்பது ? படித்த பிறகு தானே பதில் சொல்லுவான் ?"

" சரி, வருகிற வாரம் பார்ப்போம். ஆனால், எனக்கு என்னவோ பவல் ஒப்புக்கொள்ள மாட்டான் என்று தோன்றுகிறது. நீங்கள்தான் அவனைச் சம்மதிக்கச் செய்ய வேண்டும் " என்றாள் ஸாஷா.

" யார் சொல்லுவதையும் அவன் கேட்கமாட்டான் ; அவன் இஷ்டப்படிதான் அவன் நடப்பான்."

ஐவானோவிச்சும், ஸோபியாவும் வந்தனர். " அம்மா நாளையே நீங்கள் ரிபின் இருக்கும் கிராமத்திற்குப் போக வேண்டும். இப்பொழுது வேறு பாதையில் குதிரை வண்டியில் போங்கள் " என்றான் ஐவானோவிச்.

“அதிகச் செலவாகுமே?” என்று கேட்டாள் அன்னை.

“அதைப்பற்றிப் பரவாயில்லை; கிராமத்தில் போலீஸ் கெடுபிடி அதிகமாக இருக்கிறதாம். ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயர் கைது செய்யப்பட்டிருக்கிருராம். ரிபின் தப்பித்துக்கொண்டிருப்பான்; வெகு ஜாக்கிரதையாகப் போய் வாருங்கள். அதிக நாள் தாமதம் செய்தாகி விட்டது. இனி தாமதம் செய்யக் கூடாது.”

“தாமதமாவதைத் தடுக்க முடியாது” என்ருள் அன்னை.

“இனி துண்டுப் பிரசுரங்களை அதிக அளவில் விநியோகிக்கவேண்டும். மூலை முடுக்குளில் எல்லாம் பரப்ப வேண்டும்.”

“...ஏன் அம்மா போவதற்குப் பயந்து விட்டீர்களா?” என்ருள் ஸோபியா.

“நான் ஏன் பயப்படவேண்டும்? அதிகப் பந்தம் உள்ளவர்கள்தான் பயப்பட வேண்டும்; எனக்கு இருப்பது ஒரே மகன்......” என்ருள்.

ஐவாஞேவிச், ஸோபியாவைப் பார்த்தான். ஸோபியா உடனே அன்னையின் கைகளைப் பற்றிக்கொண்டு, “மன்னிக்கவும்; உங்கள் மனம் நோகும்படி சொல்லி விட்டேன்; இனி ஒரு போதும் அப்படிச் சொல்ல மாட்டேன்” என்ருள்.

அன்னை வாய்விட்டுச் சிரித்தாள்; மறு நிமிஷமே கிராமத்திற்குப் பிரயாணமாவதைப் பற்றி பேசிக் கொண்டிருந்தனர்.

## 22. கிராமத்தில் கொந்தளிப்பு

மறுநாள் காலையில், அன்னை குதிரை வண்டியில் போய்க்கொண்டிருந்தாள்; மழையும் ஊதக் காற்றும் அடித்துக் கொண்டிருந்தது; வண்டிக்காரன் சற்று திரும்பி அன்னையைப் பார்த்த வண்ணம் தன் குறைகளைச் சொல்லிக்கொண்டே போனான்.

வண்டிக்காரன் சொல்லுவதைக் காதில் வாங்கிக் கொண்டு, மனதை எங்கோ செல்ல விட்டுக் கொண்டிருந்தாள் அன்னை. முந்தைய வாழ்க்கை அவள் கண்முன் வந்தது. அப்பொழுதெல்லாம், நான் இருப்பதே பூமிக்குப் பாரம் எனக் கருதி இருந்தாள். ஆனால் இப்பொழுதோ பல வேலைகள் அவளால் நிறைவேற்றப்படுகின்றன.

"பணக்காரர்கள், சுவர்க்கத்தில்கூட கூட்டம் அதிகமாக இருப்பதாக எண்ணுகிறார்கள்; ஒருமுறை அவர்கள், தங்கள் கொடுங்கோன்மையை வெளிக்குக் காட்டினால் போதும். உடனே சர்க்கார் அதிகாரிகள் அவர்களுக்கு உதவி செய்யக் கிளம்பி விடுகிறார்கள்" என்றான் வண்டிக்காரன்.

வண்டி, ரயில்வே நிலையத்தை அடைந்ததும், அன்னை அதிலிருந்து இறங்கினாள்; வண்டிக்காரனிடம் ஒரு நாணயத்தைக் கொடுத்தாள். அவன் அதை சந்தோஷமாகப் பெற்றுக்கொண்டான்.

அன்று பகலே அன்னை, ரிபின் இருக்கும் கிராமத்தை அடைந்தாள். ஆனால் அவன் இருக்குமிடத்திற்கு உடனே செல்ல முடியவில்லை. மெதுவாக ஊரைச் சுற்றிப் பார்ப்பதுபோல, பராக்குப் பார்த்த வண்ணம் நடந்தாள்; நகரசபை மண்டபத்தை அணுகியபோது, அவள் எதிரில் ஒரு விவசாயி தென்பட்டான். அவனைக் கடந்து சென்றதும், ஒரு உணவு விடுதி காணப்பட்டது. அதில் போய் உட்கார்ந்தாள் அன்னை. அங்கே ஒரு பெண் வந்து, " அவர்கள் திருடனைப் பிடித்து விட்டார்கள் " என்றாள்.

" எப்படிப்பட்ட திருடன் அவன்?" என்று அன்னை கேட்டாள்.

" அது தெரியாது."

" எதைத் திருடினான் ?"

" அதுவும் தெரியாது " என்றாள் அப்பெண்.

அந்தச் சமயத்தில் வெளியில் ஒரே கூச்சல் கேட்டது. அன்னை ஜன்னல் வழியாகப் பார்த்தாள்; கிராமத்து ஜனங்களில் பலர் வேகமாகவும், சம்பாஷித்துக்கொண்டும் நகரசபை மண்டபத்தை நோக்கிச் சென்றார்கள்; அன்னையும் அவர்களைப் பின்பற்றிச் சென்றாள். அங்கே ரிபின், பலர் மத்தியில் இருந்தான். அன்னையும் அவனைப் பார்த்தாள்; அவனும் அன்னையைப் பார்த்தான். 'என்ன விஷயம் ?' என்று சைகையால் அன்னை கேட்டாள்.

அதற்குள் ஒரு போலீஸ்காரன் வந்தான். "ஜனங்களே, நான் திருடனல்ல, எதையும் நான் திருடவும் இல்லை. பொய்யை நான் நம்புவது இல்லை. அதனுலேயே என்னைப் பிடித்திருக்கிறுர்கள். விவசாயிகளின் உண்மையான வாழ்க்கை நிலைமையைப்பற்றி எழுதப்பட்ட புத்தகங்களைப் பார்த்திருக்கிறீர்களா? அவற்றை உங்களிடையே நான் விநியோகித்தேன். அதற்காகவே, சர்க்கார் என்னைக் கைது செய்திருக்கின்றனர்" என்றுன் ரிபின்.

பல விவசாயிகள் ரிபினைச் சூழ்ந்து கொண்டனர். அவனுடைய கட்டுகளை அவிழ்க்க முயன்றனர்; போலீஸ்காரன் தடுத்தான். அவன் பேச்சை லட்சியம் செய்யாமல் கட்டுகளை அவிழ்த்தனர். அந்தச் சமயத்தில் போலீஸ் அதிகாரி வந்தான். மற்ருெரு உதவி அதிகாரியும் வந்தான்.

"கூட்டம் உடனே கலைய வேண்டும்' என்று அதிகாரி கத்தினுன்.

கூட்டத்திலிருந்தவர்களில் சிலர் முணு முணுத்தனர்; சிலர் நகர ஆரம்பித்தனர். இதைக் கண்ட அன்னை, அவர்கள் பயப்படுவதை அறிந்தாள்.

'ஜனங்களே! அந்தப் புத்தகங்களை நன்ருகப் படியுங்கள்; புத்தகம் கிடைக்குமிடத்தைக் கண்டு பிடித்து வரவழைத்துக் கொள்ளுங்கள்; அது உங்கள் வாழ்க்கைக்கு மிகவும் உதவியாக இருக்கும். ஆனுல் சர்க்காருக்கோ அது வெறுப்பாக இருக்கும்" என்றுன் ரிபின்.

ரிபின் முகத்தில் ஒரு அறை கொடுத்தான் அதிகாரி. "ஜனங்கள்; யாருடா ஜனங்கள்?" என்றுன் அவன்.

"ஏ மிருகமே, ஜனங்களை இதுவரை சித்திரவதை செய்தது போதும். நிறுத்து!" என்றன பல குரல்கள்.

"அந்த நாள் விரைவில் வரும். நீங்கள் செய்யும் அக்கிரமங்களுக்குத் தண்டனை பெற்றே தீருவீர்கள்", என்றான் ரிபின்.

"அப்படியா! தண்டனையா பெறுவோம்" என்று சொல்லி உதவி அதிகாரி ரிபினை அடித்தான்; பிறகு, நிக்தா என்ற விவசாயியை அழைத்தான். அவன் வந்தான். அவனிடம் ரிபினை அடிக்கும்படி கட்டளையிட்டான். அவனும் கையை வீசிக்கொண்டு ரிபினை அணுகி அவன் முகத்தில் இரண்டு மூன்று குத்துகள் விட்டான். அதிகாரி அறைந்த போதே ரிபின் வாயிலிருந்து ரத்தம் வந்து விட்டது; இப்பொழுது வாய், மூக்கு எல்லாமே ரத்தமய மாகிவிட்டது.

"பார்த்தீர்களா! நம் கையைக் கொண்டே நம் கண்ணைக் குத்துகிறார்கள்" என்றான் ரிபின் தழுதழுத்த குரலில்.

நிக்தா அதற்கு மேல் அடிக்க மறுத்து விட்டான். அதிகாரி, அவனை ஒரு முறை முறைத்து விட்டு "சரி ஒழியுங்கள். யாராவது கலாட்டா செய்தீர்களோ, அவ்வளவுதான், ஒழித்துவிடுவேன்" என்று சொல்லி விட்டு ரிபினை அழைத்துச் சென்றான்.

கூட்டம் கலைந்தது; அன்னை என்ன செய்வது என்றே தெரியாமல் தவித்து நின்றிருந்தாள். அப்போது, அவளுக்கு முதலில் தென்பட்ட விவசாயி மறுபடியும் வந்தான். "எங்கள் கிராமத்திற்கே இது சர்வ சாதாரணம். நீங்கள் இந்த ஊருக்குப் புதிதா?" என்று கேட்டான்.

"ஆமாம். இரவு தங்க இடம் தேவை. கிடைக்குமா?" என்றாள் அன்னை.

"ஓ...ஆனால், என் வீடு சிறியது; வசதி இருக்காது"

" அதனால் என்ன, இருக்குமிடத்தில் ஒண்டிக் கொண்டால் போகிறது "

" சரி வாருங்கள் " என விவசாயி அன்னையை அழைத்துக் கொண்டு சென்றான்.

வீட்டை அடைந்ததும் விவசாயி தன் மனைவியிடம் ஏதோ மெதுவாகச் சொன்னான். பிறகு அன்னையை அழைத்து உட்காரச் சொன்னான். " உங்களுக்கு அந்த மனிதனைத் தெரியுமா ?" என்று கேட்டான்.

" யாரை ?" என்றாள் அன்னை ஆச்சரியத்தோடு.

" அதிகாரி அழைத்துச் சென்றானே, அவனைத்தான் சொல்லுகிறேன். நீங்கள் என்ன வேலை செய்கிறீர்கள் ?"

" அவனைத் தெரியும். நான் ஜரிகை வியாபாரம் செய்கிறேன் "

"இங்கே யார் ஜரிகை வாங்கப் போகிறார்கள்; ஜரிகை தயாரிக்கும் இடம்கூட அடுத்த கிராமத்தில் இருக்கிறது; நான் அந்த மனிதனிடமே கேட்டேன். நீங்களும் அவனும் பார்த்த பார்வையே எனக்குச் சொல்லிவிட்டது. உங்கள் பையில் என்ன இருக்கிறது ? ரொம்பக் கனமாக இருக்கிறதே !"

இனி மறைத்துப் பிரயோஜனம் இல்லை எனக் கருதி, " புத்தகங்கள் " என்றாள் அன்னை.

" அதுதானே கேட்டேன் ; எனக்கு உங்கள் புத்தகங்கள் என்றாலே பிடிக்கும் ; என் பெயர் பியோடிர் யோகார் ; எனக்குப் படிக்கவும், எழுதவும் தெரியும். ரிபின்கூட என்னிடம் உங்களைப்பற்றிச் சொல்லி யிருக்கிறான். புத்தகங்களை என்னிடம் கொடுங்கள். நான் அதை ஜாக்கிரதையாக ஜனங்களிடம் விநியோகிக்கிறேன்."

"சரி. ஆனால் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். சர்க்கார் கண்ணில் பட்டால் போதும்; உடனே உன்னைக் கைது செய்துவிடுவார்கள்."

"என்னைக் கைது செய்தாலும் பரவாயில்லை. ஜனங்களுக்கு அவர்களுடைய துயரங்களையும் உண்மை யான வாழ்க்கையையும் எடுத்துச் சொன்னாலே போதும்."

அன்னைக்குத் தூக்கம் வருவது போல இருந்தது; பியோடிர் மனைவி வந்தாள்; அன்னைக்குச் சாப்பிட, ரொட்டியும் தேநீரும் கொடுத்தாள். சாப்பிட்ட பிறகு அன்னை படுக்கப் போக எண்ணினாள்.

"சர்க்காருக்கு எதிராகச் சதி செய்கிறவர்களைப்பற்றிச் சொன்னால் நிறையப் பணம் தருகிறார்கள். பிடித்துக் கொடுத்தால், வாழ்க்கை பூராவும் சுகமாகச் சாப்பிட வசதி அளிப்பார்கள். ஆனால் நான் அப்படிப்பட்டவன் அல்ல" என்றான்.

அன்னை படுக்கச் சென்றாள். கண்ணை மூடியதும் பல காட்சிகள் அவள் கண்முன் தோன்றின. பழைய சம்பவங்களும் பல வந்தன.

அதிகாலையில், பியோடிர் மனைவி வந்து அன்னையை எழுப்பி, "குளிர் அதிகமாக இருக்கிறது. தேநீர் அருந்தி விட்டுச் செல்லுங்கள்" என்றாள்.

தேநீர் அருந்தியதும் கணவன் மனைவி இருவரிடமும் விடைபெற்றாள் அன்னை. அப்போது பியோடிர், 'அன்னையை நகரத்தில் எங்கே காணலாம்' என்பதை விசாரித்தான். அன்னை, அவனுடைய ஊக்கத்தைக்கண்டு, தயங்காமல் தன் விலாசத்தைச் சொன்னாள்.

வழிநெடுகிலும் அன்னைக்கு, 'ரிபின் முகமே எதிரே வந்தது. அவன் சட்டை கிழிக்கப்பட்டு, கைகள் பின்புற

மாகக் கட்டப்பட்டிருந்தன. முகத்திலிருந்தும் வாயிலிருந்தும் ரத்தம், வெள்ளத்தைப்போல் பெருக்கெடுத்தது. அது உடலெல்லாம் வழிந்தோடியது; அப்பொழுதும் அவன் சிறிதும் மனங்கலங்காமல் அதிகாரிகளுடன் வாதித்துக் கொண்டிருந்தான் '

அன்னைக்கு அதே சமயம், தன் மகனின் நினைவும் தோன்றியது. ஆனால் அதற்குள் அவள் மனதை வேறு வழியில் திருப்பிக்கொண்டாள்.

## 23. சிறையிலிருந்து தப்பினான்

அன்னை திரும்பி வந்ததும், ஐவாநேவிச் மிகவும் ஆச்சரியம் அடைந்து போனான். "இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டீர்களே" என்றான். ரிபின் கைதானது முதல் எல்லாவற்றையும் விவரித்தாள் அன்னை.

ஐவாநேவிச், ஒரு விதத்தில் சமாதானமடைந்தான். அவன் வீட்டையும், பல தோழர்கள் வீட்டையும், முந்தின தினம் சோதனை போட்டனர்; அக்காரணத்தால், அன்னை திரும்பி வந்தபோது புத்தகம் துண்டுப் பிரசுரங்கள் ஆகியவற்றைத் திருப்பிக் கொண்டு வந்து விட்டாளோ என்று அஞ்சினான்.

"ஒற்றர்கள் நம் வீட்டைச் சுற்றிலும் காத்து வருகிறார்கள்; நாம் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ரிபின் கைதான செய்தியைப் பிரசுரித்து விடலாம். ஆனால் அதை அந்தக் கிராமத்துக்குக் கொண்டுபோய் விநியோகிப்பது எப்படி ?" என்றான் ஐவாநேவிச்.

"ஏன் நான் செய்கிறேன்"

"கூடாது. நீங்கள் இவ்வளவு நேரம் கைதாகி யிருக்க வேண்டியது. தப்பியிருக்கிறீர்கள்; நிக்கோலாயைக் கேட்டுப் பார்க்கிறேன்"

ரிபினைப்பற்றிய கட்டுரை எழுதி முடித்த சமயம், டாக்டர் வந்தார். "என்ன தர்பார்; என்ன கண்மூடித் தனம்; எங்கும் போலீஸ் சோதனை; ஒற்றர்களின் கண்ணோட்டம்; சகிக்கவில்லை" என்றார்.

"இதோ அச்சகத்திற்குச் செய்தி; இதைப் பத்திரமாக லுதிமிலா விடம் கொடுத்து விடுங்கள். வரும்போது ஜாக்கிரதையாக வாருங்கள்; ஒற்றர்கள் அதிகமாக நடமாடுகிறார்கள்"

"ஓஹோ, உங்களுக்கும் சிறைச் சாலை காத்திருக்கிறது என்று சொல்லுங்கள். நல்லது உங்களுக்கும் சற்று ஓய்வு கிடைக்க வேண்டியதுதான். நான் போய் வருகிறேன்" என்று சொல்லிக் கட்டுரையை எடுத்துக்கொண்டு புறப் பட்டார் டாக்டர்.

அன்னையுடன் பேசிக் கொண்டிருந்த சமயம், 'பவல் சிறையிலிருந்து தப்பிவர விரும்பவில்லை. விசாரணையையே விரும்புகிறான்' என்றான் ஐவானோவிச்.

"இது எனக்கு முன்பே தெரியும்" என்றாள் அன்னை.

அச்சமயம் ஸாஷா வந்தாள்; அவளைப் பார்த்ததும் ஐவானோவிச், "அம்மா, எனக்கு ஒன்று தோன்றுகிறது. ரிபினைச் சிறையிலிருந்து விடுவிக்கவேண்டும் அவன் வெளியே இருந்தால் பல காரியங்கள் நடைபெறும். நல்ல தொண்டன்."

"ஆமாம்" என்றாள் சுருக்கமாக.

"ஸாஷா, உனக்கு என்ன தோன்றுகிறது? ரிபினை சிறையிலிருந்து தப்புவிக்க முடியுமா? நிக்கோலாய் சொன்ன விதமாகச் செய்தால் வெற்றி கிடைக்குமா?"

"ஓ கட்டாயம் தப்பிவிக்க முடியும். நிக்கோலாய் சொன்ன வழி மிகவும் சுலபமானது; சிறைச் சாலைக்கு வெளியே பெரிய மைதானம் இருக்கிறது; அங்கு மின்சாரக் கம்பங்கள் இருக்கின்றன. நமது ஆள் ஒருவன் மின்சார வேலை செய்வதைப் போல் கையில் பெரிய ஏணியுடன் அங்கே போக வேண்டும். அவன் மத்தியானம், சிறைச் சாலையின் மதில்மீது ஏணியை வைத்து விட்டு நிற்க வேண்டும். பகல் வேளையில் கைதிகளை ஓய்வுக்காக விட்டு வைப்பார்கள். அப்போது காவலாளிகள் இருக்கமாட்டார்கள். சமயம் பார்த்து ரிபின், மதில்மீது ஏறிவந்து ஏணி வழியாக இறங்கி வந்து மைதானத்தில் மறைந்து விடவேண்டும். ஏணியின் கீழேயுள்ள நமது ஆள், அவனை உடன் அழைத்து வந்து விடவேண்டும். இதுதான் நிக்கோலாயின் திட்டம். முதலில் ரிபினுக்கு இவற்றை நன்ருகச் சொல்லி விட்டால் காரியம் முடிந்த மாதிரிதான்" என்ருள் ஸாஷா.

அன்று மாலையே போய், ரிபினுடன் பேசிவர ஆள் அனுப்புவதாக ஐவானேவிச் சொன்ஞன்; ஸாஷா போன பின்பு அன்னையிடம், "ரொம்பத் தைரியமான பெண். கட்சிக்காக உழைப்பதற்கு அவள் ஒருபோதும் தயங்கியதே இல்லை" என்ருன்.

"ஏன் நீங்கள் கூடத்தான் !"

"நான் இருக்கட்டும்; நீங்கள் கிராமத்தில், சமயோசிதமாகச் செய்த காரியத்தை பாராட்டாமல் இருக்கமுடியாது. ரிபின் கைது செய்யப்பட்டதும், நமக்கு கிராமத்தில் வேலை செய்ய ஆளே இல்லாத சமயத்தில், கிடைத்த ஒரு நல்ல மனிதனைப் பயன்படுத்திக் கொண்டு விட்டீர்களே. புதியவர்களைத் திடீரென்று நம்புவதில் சில சமயம் கெடுதலும் ஏற்படும். ஆனல் நீங்கள் எதையும் யோசியாமல் கிடைத்தவனை பூரணமாக நம்பினீர்கள். அவனும்

நல்லவனுக வாய்த்தான். நம் வேலை தங்கு தடையின்றி நடைபெறலாயிற்று ” என்றான் ஐவானேவிச்.

“ மனிதனுக்கு மனிதன் நம்ப வேண்டியதுதானே முறை. நாம் நம்பினுல்தான் அவனும் நம்மை நம்பு வான்......நாளை ரிபினைச் சிறையிலிருந்து தப்பச் செய்யும் போது நானும் அங்கே போய்ப் பார்க்க விரும்புகிறேன் ” என்றாள் அன்னை.

“ அது ஆபத்து. உங்களை ஒற்றர்கள் கண்டு கொண்டால் காரியம் கெட்டு விடும் ”

“ நான் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளுகிறேன் ”

“ சரி. உங்கள் இஷ்டம் போல் செய்யுங்கள் ” என்றான் ஐவானேவிச்.

அன்று மாலை, ரிபினுக்குச் செய்தி சொல்லி அனுப்பப் பட்டது. ரிபினும் தன் சம்மதத்தைத் தெரிவித்ததோடு, தான் தயாராக இருப்பதாகவும் தெரிவித்தான்.

மறுநாள் ரிபினை சிறையிலிருந்து தப்பவைக்க ஏற்பாடுகள் நடைபெற்றன. அன்னையும் சிறைச்சாலைப் பகுதிக்குப் போயிருந்தாள்.

மாலை அன்னை வந்ததும், ஐவானேவிச் மிகுந்த ஆவலோடு ரிபின் விஷயத்தைக் கேட்டான். அன்னை சிரித்துக்கொண்டே, “ அதை ஏன் கேட்கிறீர்கள். ரிபின் சிறையிலிருந்து தப்பிச் சென்றதும், காவலாளிகள் பலர் மைதானத்தில் ஓடி வந்தனர். கைதி போன திக்கைப் பற்றி, என்னைக்கூடக் கேட்டனர். நான் அவர்களுக்கு, வேறு திசையைக் காட்டி ஏமாற்றி விட்டேன். ரிபின் தப்பியது, கண் மூடிக் கண் திறப்பதற்குள் முடிந்து விட்டது ” என்றாள்.

## 24. நீதி மன்றத்தில் விசாரணை

வெகுநாட்களாக எதிர்பார்த்திருந்த விசாரணை, அன்று ஆரம்பமாயிற்று. நீதி மன்றத்திற்கு அன்னையும் வந்திருந்தாள். நீதி மன்றத்தின் வெளியே ஜனங்கள் ஆயிரக் கணக்கில் கூடியிருந்தனர். மன்றத்தினுள் விசாரணைக் கைதிகளாக உள்ளவர்களின் உறவினர்கள் மாத்திரம் அனுமதிக்கப்பட்டனர்; மற்றவர்கள் இதைக் கண்டு ஆத்திரத்தோடு அதிகாரிகளை ஏசினார்கள்.

நீதி மன்றத்தினுள் அன்னை நுழைந்ததும், ஸிஜாவின் தகப்பனைச் சந்தித்தாள். அவர் வந்து அன்னையை அழைத்துச் சென்று தன்னருகிலே உட்காரும்படி கேட்டுக் கொண்டார்.

வக்கீல்கள் பலர் வந்திருந்தனர்; போலீஸ்காரர்கள் உள்ளிலும் வெளியிலும் காவல் புரிந்தனர்.

மன்றத்தினுள் மங்கிய வெளிச்சம் தெரிந்தது. வெளியில் பனி பெய்து கொண்டிருந்தது.

திடீரென்று, ஒருவன் உரத்த குரலில் ஏதோ சொன்னான். எல்லோரும் எழுந்து நின்றனர்; அன்னையும் தன்னையறியாமல் அவர்களுடன் எழுந்து நின்றாள்.

மன்றத்தின் மற்ெறொரு பக்கத்தில் இருந்த சிறிய கதவு திறக்கப்பட்டது; அதிலிருந்து வயதானவர் ஒருவர் கையை ஆட்டிக் கொண்டு வந்தார். அவருடைய சிறுதாடி நரைத்திருந்தது. மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தார். அவரைத் தொடர்ந்து வந்த மூவர் ஜரிகை உடை அணிந்திருந்தனர். எல்லோரும் வந்து ஆசனத்தில் அமர்ந்ததும், வயதானவர் பக்கத்திலிருந்தவரைப் பார்த்து "விசாரணையைத் துவக்கலாம்" என்றார்.

நீதிபதியையும், அவர் பின்புறம் மாட்டப்பட்டிருந்த ஜார் சக்ரவர்த்தியின் பெரிய உருவப் படத்தையும் எல்லோரும் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"அவர்கள் நம்மைக் கண்டு பயப்படுகிறார்கள்" என்று ஸிஜாவ் தன் தோழர்களிடம் சொல்லிக் கொண்டான் நீதிமன்றத்தின் காவலாளி "சப்தம் போடாதீர்கள்" என எச்சரித்தான்.

நிசப்தம் நிலவியது. முதன் முதலில் நீதிபதி, ஆண்டரியை நோக்கி, "நீ குற்றவாளி என ஒப்புக் கொள்ளுகிறாயா?" என்று கேட்டார்.

"எதற்காக நான் குற்றவாளி என்று ஒப்புக்கொள்ள வேண்டும்? நான் யாரையும் கொலை செய்யவில்லை; திருடவும் இல்லை; ஆனால் ஒருவரை யொருவர் திருடவும் கொலை செய்யவும் தூண்டிவிடும் சமூக அமைப்பைத் தான் நான் எதிர்க்கிறேன்" என்றான்.

"சுருக்கமாகப் பதில் சொல். உண்டா? இல்லையா?"

"நான் வாதாட விரும்பவில்லை; எனக்கு வாதிக்க நான் வக்கீல் அமர்த்தவும் இல்லை; இந்த விசாரணையே சட்ட விரோதமானது. இந்த நீதி மன்றத்தையே நான் ஒப்புக்கொள்ளவில்லை; முதலில் நீங்கள் யார்? எங்களுக்கு

நீதி வழங்கும்படி மக்கள் உங்களுக்கு உரிமை தந்திருக்கிறார்களா? ஆகவே உங்கள் அதிகாரத்தை நான் ஏற்க மறுக்கிறேன்''

ஸிஜாவின் தந்தை சந்தோஷமாக அன்னையைப் பார்த்து, "பார்த்தீர்களா அவனை. எவ்வளவு தைரியமாகப் பேசினான்?'' என்றான்.

நீதிபதி தன் சகாக்களிடம் மெதுவாக ஏதோ பேசிவிட்டு, சர்க்கார் வக்கீலைப் பார்த்து,"உங்கள் அபிப்பிராயம் என்ன?'' என்றார்.

சிறிது நேரம் மௌனமாயிருந்தனர். ஒரு போலீஸ் அதிகாரி நீதிபதியின் முன் வந்து, "பவல்தான் இந்தக் கூட்டத்தின் தலைவன் என்று சொல்லப்படுகிறது'' என்றான்.

"ஆண்டரியைப் பற்றி என்ன?'' என்றார் நீதிபதி.

"அவனும் தான்''

அதற்குள் இடைவேளைக்கு நீதிமன்றம் கலையும் நேரம் வந்தது. முதலில் நீதிபதி எழுந்தார்; பிறகு அங்கிருந்த எல்லோரும் எழுந்தனர். மண்டபத்தின் வெளிப்புறத்தை அடைந்ததும், ஸிஜாவின் தகப்பன் அன்னையை தேநீர் அருந்த அழைத்தார். வேண்டாம் என அன்னை கூறியதும் அவரும் போகவில்லை.

இடைவேளைக்குப் பின்னர் மீண்டும் நீதிபதி வந்தார் அவருடைய சகாக்கள் அவரவருடைய ஸ்தானத்தில். அமர்ந்தனர். சர்க்கார் வக்கீல் எழுந்தார்.

அன்னை, நீதிபதியையும் மற்றும் அங்குள்ளவர்களையும் உற்று நோக்கிக்கொண்டிருந்தாள். 'அந்த வழக்கு விசாரணையே வெறும் நாடகம்: கண் துடைப்புக்காக

ஏற்பட்டது' என்பது அன்னைக்குத் தெரியாது. விசாரணைக்கு முன்பே கைதிகளுக்கு என்ன தண்டனை கொடுப்பது என்பது பற்றி சர்க்காரால் முடிவு செய்யப் பட்டு விட்டதும், அவளுக்குத் தெரியாது. அதனால் அவள் நீதிபதியையே பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் அந்த நீதிபதியின் மூலம் தன் மகனுக்கும் மற்றவர்களுக்கும் சரியான நீதி கிடைக்கும் என்று அவள் கருதவில்லை.

சர்க்கார் வக்கீல் வழக்கைப்பற்றி முதலில் சொன்னார். கைதிகள் செய்தவற்றை ஒன்றுக்குப் பத்தாகத் திரித்துக் கூறினார். அதைக் கேட்ட பவல் முதலிய தோழர்கள் சிரித்தனர். வீணாகப் பொய் சொல்லுகிறான் என தங்களுக்குள் சொல்லிக்கொண்டனர். "இருக்கட்டும் நான் அவன் வாதத்தையே தகர்த்தெறிந்து விடுகிறேன்" என்றான் மாஜின்.

கைதிகளின் உறவினர்களிடையே சலசலப்புக் காணப்பட்டது. அவர்களும், சர்க்கார் வக்கீலின் வாதத்தை முணு முணுப்பு மூலம் எதிர்த்தனர்.

முதலில் பவலை அழைத்தார் நீதிபதி.

பவல் அலட்சியமாக எழுந்திருந்தான்; அமைதி எங்கும் நிலவியது; "இங்கே கைதிகளும் இல்லை, நீதிபதிகளும் இல்லை! பிடித்தவர்களும், பிடிக்கப்பட்டவர்களும்தான் இருக்கிறார்கள்"—பவலின் உறுதியான குரல் ஒலித்தது. "நீதிமன்றத்தையும் சர்க்காரையும் எதிர்க்கட்சி என்ற முறையில் வைத்தே பேசுகிறேன். என்னுடைய தோழர்களின் விருப்பப்படி நான் எதிர் வழக்காட விரும்பவில்லை. நீங்கள் எதைப்புரிந்து கொள்ளவில்லையோ அதை மட்டும் கூறப் போகிறேன். ஜார் சக்ரவர்த்திக்கு எதிராக, எங்கள் சமதர்ம ஜனநாயகக் கட்சி புரட்சி செய்வதாக சர்க்கார் வக்கில் கூறினார். எங்களுக்கு எதிரி ஜார் சக்ர

வர்த்தி மாத்திரம் அல்ல; அவரைப் போன்ற பலரும் இருக்கிறார்கள்; ஜனங்களுக்கு மிகவும் நெருக்கத்தி லிருக்கும் விலங்கை முதலில் தகர்த்தெறிய நாங்கள் விரும்புகிறோம். அதுதான் எங்கள் முதல்கடமை'' என்றான்.

பவல் மீண்டும் பேசத்தொடங்கினான்: "நாங்கள் சமதர்ம ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்தவர்கள்; முதலாளித்துவம் எங்களின் பரம வைரி. அவர்களுக்கு உதவியாயிருப்பவர்கள் இரண்டாவது விரோதி; அவர்களை எதிர்த்துப் போரிட்டு ஜனங்களுக்கு நன்மை ஏற்படுத்து வதே எங்கள் நோக்கம். பலாத்காரம், ஊழல், பொய் இவற்றை ஒழிக்க நாங்கள் கங்கணம் கட்டிக்கொண் டிருக்கிறோம். இப்பொழுதுள்ள சட்ட திட்டங்கள், மனிதனை மனிதனாகவே கருதவில்லை. அவர்கள் மிருகங் களிலும் கேடாக நடத்தப்படுகிறார்கள். நாங்கள் தொழிலாளர்கள்; எங்களால்தான், சிறு விளையாட்டுக் கருவிகளிலிருந்து பிரம்மாண்டமான இயந்திரங்கள் வரை செய்யப்படுகின்றன. எங்களை முதலாளிகள் தங்களின் கைக்கருவிகளாகவே உபயோகப் படுத்துகிறார்கள். எங்களை மனிதர்களாக மதிக்கவும், மனிதர்களை நடத்தும் விதத்தில் நடத்தவுமே நாங்கள் விரும்புகிறோம். அதற்கு முதல்படியாக, 'தனிப்பட்ட சொத்துரிமை ஒழிய வேண்டும்', 'உற்பத்தி சாதனங்கள் எல்லாம் ஜனங்கள் வசம் ஆகவேண்டும்', 'உழைப்பது எல்லோருக்கும் கடமை' இவையே எங்கள் தாரக மந்திரம். இவற்றி லிருந்து தெரிந்துகொள்ளலாம் நாங்கள் கலகக்காரர்கள் அல்ல என்பதை.''

நீதிபதி குறுக்கிட்டு; 'வழக்கைப் பற்றி மட்டும்' பேசமாறு கூறினார்.

பவல் லேசாகச் சிரித்தான். "நாங்கள் புரட்சிக் காரர்கள் தனிப்பட்டோர் சொத்து என ஒன்று இருக்கும் வரை, அதைச் சிலர் வைத்துக்கொண்டு, பலரைக் கசக்கிப் பிழிந்து வேலை வாங்கும்வரை, நாங்கள் சும்மா இருக்கமாட்டோம். அவர்களுக்குச் சர்க்கார் உதவி புரிகிறது. ஜனங்களை வாட்டி வதைக்க உதவும் சர்க்காரிடம் எங்களுக்கு மனமாற்றமே ஏற்படாது. இந்த இழிநிலையைப் போக்கும்வரை, நாங்கள் ஓய்ந்திருக்க மாட்டோம். தொழிலாளர்களான நாங்கள் எங்கள் லட்சியத்தை அடைந்தே தீருவோம். முதலாளிகள் தொழிலாளிகளைச் சுரண்டுவதைத் தடுத்து சொத்துக்களை பொதுவுடமை யாக்குவதும், சர்க்காரின் அடக்கு முறையை ஒழிப்பதுமே எங்கள் கட்சியின் வேலை" என்றான்.

நீதிபதி அவனையே முறைத்துப் பார்த்தார்; பேச்சை முடிக்கும்படி கூறினார்.

"இதோ பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்; நேருக்கு நேராக உங்கள்மீது குற்றம் சாட்டுகிறேன். நீங்கள் நடத்தும் இந்த விசாரணையே ஒரு கேலிக் கூத்து; ஜனங்களை ஏமாற்றச் செய்யும் ஒரு வித்தை என்றே தோன்றுகிறது. நீங்களும் மனிதர்கள்தான். எங்கள் எதிரிகளையும் நாங்கள் மனிதர்கள் என்றே கருதுகிறோம்" என்று கூறி பவல் உட்கார்ந்துவிட்டான்.

ஆண்டரி சந்தோஷ மிகுதியால் பவலின் கையைப் பிடித்துக் குலுக்கினான். மற்ற தோழர்களும் அவனைப் பாராட்டினர்.

அன்னை மனம் பூரித்தாள். பவல் சொன்ன ஒவ்வொரு சொல்லும் அவள் மனதில் பதிந்திருந்தது.

இரண்டாவதாக ஆண்டரி அழைக்கப்பட்டான். அவன் எழுந்து, நீதிபதியையும் மற்றவர்களையும் அப்படியும் இப்படியுமாகப் பார்த்துவிட்டு—" எதிர்க் கட்சியினரே—"என்று தொடங்கினான்.

நீதிபதி குறுக்கிட்டு: " இது நீதிமன்றம்; எதிர்க்கட்சி அல்ல !" என்றார்.

" அப்படியா ?" என்று கேள்வி கேட்டுச் சிறிது நிறுத்தினான் ஆண்டரி. பிறகு, " நான் அப்படி நினைக்கவே இல்லை. நீங்கள் நீதிபதியே அல்ல; எதிர்க்கட்சியினர்தான்" என்றான்.

" வழக்கு சம்பந்தமாகப் பேசு; உன் விமர்சனம் தேவை இல்லை " என்றார் நீதிபதி.

" விமர்சனம் தேவை இல்லையா ? சரி. நீங்கள் நடு நிலைமையானவர்கள். உங்களுக்கு வேண்டியவன், வேண்டாதவன் என்பதே இல்லை. இரு கட்சிகள் இருக்கின்றன. ஒரு கட்சி சொல்லுகிறது ' என்னிடம் உள்ளது எல்லாவற்றையும் அபகரித்து விட்டது' என்கிறது. அதற்கு மற்ற கட்சி கூறுகிறது. ' எனக்கு அபகரிக்க உரிமை இருக்கிறது ' என்கிறது......"

" வ்ழக்கைப் பற்றி பேசு ; இம்மாதிரியே பேசுகிறாய் ; பிறகு நான் தடை விதித்து உன்னைப் பேசவிட மாட்டேன் " என்றார் நீதிபதி.

" சர்க்கார் வக்கீல் எங்களைச் ' சமூக விரோதிகள், காட்டு மிராண்டிகள் ' என்று குறிப்பிட்டார். நீங்கள் தான் ஜனங்களை ஒற்றர்களாகப் பழக்கிவிடுகிறீர்கள் ; பெண்களையும் யுவதிகளையும் கெடுக்கிறீர்கள் ; ஜனங்களை திருடர்களாகவும், கொலைகாரர்களாகவும் மாற்றி விடுகிறீர்கள். மதுபானம், சர்வதேச யுத்தங்கள், பொய்

பித்தலாட்டங்கள், விபசாரம், காட்டுமிராண்டித்தனம் முதலியவற்றால் ஜனங்களை விஷமூட்டிக் கொல்லு கிறீர்கள். இதுதான் உங்கள் நாகரீகம். இம்மாதிரியான நாகரீகத்துக்கு நாங்கள் விரோதிகள் " என்று கூறினான்.

நீதிபதி அதற்குமேல் ஆண்டிரியைப் பேசவிடவில்லை.

" மாஜின் " என்றார் நீதிபதி.

மாஜின், நிஜார் பையில் கையைப் போட்டுக் கொண்டு " நான் உறுதியாகச் சொல்லுகிறேன். நீங்கள் என்னை எங்கு அனுப்பினாலும் நான் தப்பி வந்துவிடுவேன்; என் வேலையைத் தொடர்ந்து செய்வேன். இது நிச்சயம் " என்றான்.

போலிஸ் அதிகாரிகளும், நீதிபதியும்—நீதி மன்றத்தில் இருந்த எல்லோருமே 'கசமுச' எனப் பேசலானார்கள். மாஜின் முகத்தையே உற்றுப் பார்த்தனர்.

மற்றும் மூவரை நீதிபதி அழைத்தார்; அவர்கள் மூவரும் பேச விரும்பவில்லை என்று கூறிவிட்டார்கள். நான்காவதாக, புக்கின் அழைக்கப்பட்டான். அவன் எழுந்து நின்றான். " நீங்கள் உங்களைப் பார்த்தே வெட்கப் படவேண்டும். நான் முரட்டு மனிதன்; ஆனால் நீதி என்பது என்னவென்று எனக்குத் தெரியும். ஹூம் பேசிப் பயன் என்ன?" என்று அவன் மேலும் பேசிக்கொண்டே போனான். நீதிபதி அவனைப் பேசக்கூடாது என்று கூறி விட்டார். ஜனங்களிடையே சிறிது சலசலப்பு ஏற்பட்டது. 'சர்க்கார் வக்கில் மாத்திரம் எதையும் பேசலாம். மற்றவர்கள் பேசக்கூடாதா ? இதென்ன நியாயம் ?' என்றனர் பலர். ஆனால் அன்னை எதிலும் கலந்து கொள்ளாமல், வழக்கைக் கவனிப்பதிலேயே கவனத்தைச் செலுத்தினாள்.

நீதிபதி எதையும் கவனிக்காமல் ஏதோ எழுதிக் கொண்டிருந்தார்; வெகு நேரத்திற்குப் பின் அவர் தலை நிமிர்ந்து அனைவரையும் பார்த்தார். நீதிமன்றக் காவலாளி ‘ சப்தம் போடாதீர்கள் ’ என்றான். ஆனால் முணுமுணுப்பு நிற்கவில்லை; சந்தடியினூடே நீதிபதி எழுந்து தீர்ப்பை வாசித்தார். அவர் படித்தது யார் காதிலும் விழுந்ததாகத் தெரியவில்லை. “ நாடு கடத்தப்பட்டிருக்கிறார்கள் ” என்று சொன்னது மாத்திரம் எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்தது.

நீதிபதி எழுந்து உள்ளே சென்றார். அவரைத் தொடர்ந்து அவரது சகாக்கள் சென்றனர். நீதிமன்றத்தில் இருந்தவர்கள் எல்லோரும் வெளியே போகலானார்கள். கைதிகளும் அழைத்துச் செல்லப்பட்டார்கள். போகும் போது பவலும், ஆண்டரியும் புன்சிரிப்புடன் அன்னையைப் பார்த்தனர்; அவளும் மௌனமாகத் தலையை ஆட்டினாள்.

நீதிமன்றத்திலிருந்து அன்னை வீடு திரும்பும்போது அவளையும், பவலையும் பலர் பாராட்டினார்கள். ஸிஜாவின் தந்தை எல்லோரிலும் அதிகமாகப் பாராட்டினார். வழியில் ஸாஷாவை சந்தித்தாள் அன்னை.

“ இப்படி வாருங்கள் ” என்று கூறி ஒதுப்புறமான இடத்தை அடைந்ததும், “ என்ன நாடு கடத்திவிட்டார்களா ? பவல் நன்றாகப் பேசினானா ?......பலரைக் கைது செய்யப் போகிறார்களாம்; எனக்கும் கூடிய சீக்கிரமே தண்டனை கிடைத்துவிடும். பவலை அனுப்பப்படும் ஸைபீரியாவுக்கே என்னையும் அனுப்புவார்கள்; என் வேலைகளைக் கவனிக்க ஒருவர் வேண்டும் ” என்று கூறினாள் ஸாஷா.

வழக்கைப் பற்றிப் பேசிக் கொண்டே அன்னையும் ஸாஷாவும் வீட்டிற்குச் சென்றனர்.

## 25. பயங்கரப் பாதையில் அன்னை

ஸாஷாவோடு, அன்னை வீட்டிற்கு வந்த சமயம், ஐவானேவிச் அங்கு இல்லை. இருவரும் ஒரு சோபாவில் நெருக்கமாக உட்கார்ந்தனர்.

"நான் பவலை மனமாறக் காதலிக்கிறேன்; அவனும் என்னைக் காதலிக்கிறான். நாங்கள் ஸைபீரியாவில் சந்தித்ததும் கல்யாணம் செய்து கொண்டு வாழ்வோம்" என்றாள் ஸாஷா.

"உங்கள் சந்தோஷ வாழ்க்கையைக் காண நானும் வருவேன்" என்றாள் அன்னை.

"ஆனால் ஒன்று, பவல் என்னுடனேயே இருக்க முடியாது; அவனுடைய சேவை மிக முக்கியமானது. அவனால் சும்மா இருக்கவும் முடியாது. அதனால் அவனை விட்டுப் பிரிய நேரிடும். காதலன் தன் கடமையைச் செய்ய எந்தக் காதலியும் குறுக்கே நிற்கமாட்டாள். நானும் அப்படியே அவன் மனதிற்குப் பிடித்தமான காரியத்தைச் செய்ய விட்டுவிடுவேன்" என்றாள் ஸாஷா.

அவர்கள் மேலும் பேசிக் கொண்டிருந்திருக்கலாம். ஆனால் ஐவானேவிச், அந்தச் சமயம் வந்தான். அவன்

முகம் சோர்வு கண்டிருந்தது; ஸாஷாவை அவன் பார்த்ததும், "நீ உடனே இங்கிருந்து போய்விடு. காலையிலிருந்து இரண்டு ஒற்றர்கள் என்னைச் சுற்றி அலைகிறார்கள். இதே தெருவில் உட்கார்ந்திருக்கிறார்கள். எந்த நேரத்திலும் நான் கைது செய்யப்படுவேன்" என்று கூறி மேஜையைத் திறந்தான். அதிலிருந்து ஒரு காகிதக் கத்தையை எடுத்து அன்னையிடம் கொடுத்து "இது நீதி மன்றத்தில் பவல் நிகழ்த்திய பேச்சு. லுதிமிலாவிடம் உடனே கொண்டு போய்ச் சேருங்கள். அச்சடிக்கச் சொல்லுங்கள். பவலின் பேச்சு, ஜனங்களிடையே பரவ வேண்டும். அதனால் எவ்வளவோ நன்மை ஏற்படும். இந்த வேலையை நீங்கள்தான் செய்ய வேண்டும்" என்றான்.

அன்னை பெருமிதத்துடன் அதைப் பெற்றுக் கொண்டாள்.

"இன்று நீங்கள்கூட இங்கு தங்க வேண்டாம். என்னுடன் உங்களையும் கைது செய்துவிடுவார்கள். பவல் பேச்சு அச்சானதும், அதை உடனே உங்கள் கிராமத்திற்கு எடுத்துச் செல்லுங்கள்; தொழிலாளரிடையே அதை விநியோகியுங்கள்" என்று கூறி அன்னையை அங்கிருந்து போகும்படி அவசரப்படுத்தினான்.

அன்னை உள்ளே சென்று வேறு உடை அணிந்து வந்தாள்.

"போவதற்குமுன் என்னுடைய சாமான்களைக் கொடுங்கள்; எது எங்கே இருக்கிறது என்பதே எனக்குத் தெரியாது. நீங்கள் இந்த வீட்டிற்கு வந்தது முதல் என்னை அறியாக் குழந்தையாகவே செய்து விட்டீர்கள்" என்றான்.

அன்னை, அவனுடைய பொருள்கள் யாவற்றையும் கொண்டுவந்து கொடுத்தாள்.

"நாளைக் காலை லுதிமிலாவை ஆள் அனுப்பி இங்கு பார்க்கச் சொல்லுங்கள்; கைது செய்யப்படாவிட்டால் இங்கு இருப்பேன்" என்று கூறி ஐவானோவிச், மிகுந்த மனவேதனையுடன் அன்னையையும் ஸாஷாவையும் விடை கொடுத்து அனுப்பினான்.

தெருவில் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே அன்னையும் ஸாஷாவும் நடந்து சென்றனர். எங்கும் ஒற்றர்கள் இருப்பதைக் கண்டு இருவரும் பிரிந்தனர். பல சந்துகளின் வழியாகச் சுற்றிக் கொண்டுபோய் லுதிமிலா வீட்டை அடைந்தாள் அன்னை.

அன்னையைக் கண்டதும் லுதிமிலா மிகுந்த உற்சாகத்தோடு வரவேற்றாள். பவலைப் போன்ற மகனைப் பெற்றதற்கு அவளைப் புகழ்ந்தாள்.

ஐவானோவிச் சொல்லியனுப்பியபடி, அன்னை எல்லாவற்றையும் அவளிடம் கூறினாள்.

அன்னையிடமிருந்து, பவலின் பேச்சு எழுதப்பட்ட காகிதக் கத்தையை வாங்கிக்கொண்டு, அச்சகத்துக்குப் புறப்பட்டாள் லுதிமிலா. அப்பொழுது, "நானும் வேண்டுமானால் உதவிக்கு வருகிறேன்" என்றாள் அன்னை.

"நீங்கள் இங்கேயே படுத்துக் கொள்ளுங்கள்; உதவி தேவையானால் எழுப்புகிறேன். கதவு தட்டப்படும் சப்தம் கேட்டால் ஜாக்கிரதையாகப் பார்த்துத் திறவுங்கள்" என்று சொல்லிப் போனாள்.

அன்னை அங்கிருந்த சோபா ஒன்றில் படுத்தாள். அன்று காலை முதல் ஓய்வின்றி அலைந்த களைப்பால் கண்களை மூடித் தூங்கினாள்.

மறுநாள் காலை, லுதிமிலா வந்து அன்னையை எழுப்பினுள். தேநீர் அருந்த அழைத்தாள். இருவரும் தேநீர் அருந்திக் கொண்டிருக்கும்போது, "ஐவானேவிச் நினைத்தது சரிதான். நான் ஆள் அனுப்பிப் பார்த்து வரச் சொன்னேன்; அவன் அங்கு இல்லை. போலீஸ்காரர்கள் அங்கு சூழ்ந்திருந்தார்களாம். அவன் கைது செய்யப்பட்டிருக்கலாம்" என்றுள் லுதிமிலா.

அன்னையின் மனம் படபடத்தது. ஐவானேவிச் போன்றவர்கள் எவ்வளவு தீர்க்க தரிசனத்தோடு எதையும் செய்கிறுர்கள் என்று வியந்தாள்.

சிறிது நேரம் கழிந்திருக்கும். டாக்டர் வந்தார். "ஓ பவலின் அன்னையா? ஐவானேவிச் கைதாகும்போது நீங்கள் அங்கு இல்லையா? நல்லதாகப் போச்சு; இரவு மட்டும் ஐநூறு பேருக்குமேல் கைது செய்யப்பட்டார்களாம்" என்றுர். அவர் மிகவும் கவலையுடன் தென்பட்டார். "பவலின் பேச்சை, கையெழுத்துப் பிரதியாக அநேகம் எடுத்து அன்று மாலையிலே விநியோகித்திருக்கிறுர்கள். நகரத்தில் விநியோகிக்க அச்சிட்டதாக இருந்தால் நன்ருக இருந்திருக்கும் என்று நினைத்தேன். போகட்டும், தொழிற்சாலைக்கு 'பவல் பேச்சு' உடனே போயாக வேண்டும். அதற்கு ஏற்பாடு செய் லுதிமிலா" என்றுர் மீண்டும் டாக்டர்.

"அதற்குத் தகுந்த ஆள் யார் இருக்கிறுர்கள்?" என்று கேட்டாள் லுதிமிலா.

"ஏன் நாட்ஷா இல்லையா?"

"அவள் எதற்கு? நானே போகிறேன். நாங்கள் இருந்த இடம். எனக்குப் பழக்கமான வழிகள்" என்றுள் அன்னை.

"நீங்கள் போவது மிகவும் அபாயகரமானது. இத்தனை நேரம் நீங்கள் கைதாகியிருக்க வேண்டும். எப்படியோ—தப்பியிருக்கிறீர்கள்."

"அதெல்லாம் ஒன்றும் ஆகாது. நான் ஜாக்கிரதையாகப் போகிறேன்."

"அப்படியானால் இப்பொழுதே கிளம்பவேண்டும். இரண்டு மணிக்கு ஒரு ரயில் இருக்கிறது. அதில் போனால் மாலை ஐந்து மணிக்கு ஊர் போய்ச் சேரலாம்."

"நீங்கள் ரயில்வே நிலையத்துக்குப் போங்கள். பிரசுரங்களை ஒரு ஆள் மூலம் கொடுத்து அனுப்புகிறேன்" என்றாள் லுதிமிலா.

அன்னை, சிறிதும் தாமதிக்காமல் ரயில்வே நிலையத்தை நோக்கிக் கிளம்பினாள்.

## 26. அந்தோ அன்னை !

பனிப் படலத்தினூடே, அன்னை தெருவில் நடந்து சென்றாள். அவள் கவனமெல்லாம், தான் ஏற்றுக் கொண்ட வேலையின்மீதே இருந்தது. அவளுக்குச் சற்று தூரத்தில் ஒருவன் வந்து கொண்டிருந்தான். அழுக்கான கிழிசல் உடை உடுத்தியிருந்தான். எதிர்ப் புறத்தில் ஒரு சிப்பாய் போய்க்கொண்டிருந்தான்.

ரயில் வர வெகு நேரத்திற்கு முன்பே அன்னை, ரயில்வே நிலையத்திற்கு வந்து சேர்ந்தாள். மூன்றுவது வகுப்புப் பிரயாணிகளின் அறையில் கூட்டம் அதிகமா யிருந்தது; குளிருக்காகச் சிலர் சிகரெட் பிடித்தனர்; சிலர் மது குடித்தனர். அவர்களில் கிராமவாசிகளும் சிலர் இருந்தனர்.

அன்னை, கதவுக்கருகில் ஒரு பெஞ்சியின் மீது உட்கார்ந்தாள். நடந்து வந்த களைப்பு, அவள் கண்களைச் சுழலச் செய்தது. அதைச் சமாளித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

சிறிது நேரத்தில், பலர் கையில் பைகளுடன் வந்தனர். ஒரு வாலிபன் கையில் மஞ்சள் நிறப்

பையுடன் வந்தான். சுறுசுறுப்பாக நான்கு பக்கங்களிலும் பார்வையைச் செலுத்தினான். நேராக அன்னையிடம் வந்து "மாஸ்கோவுக்கா போகிறீர்கள்?" என்று கேட்டான்.

அன்னை அவனைத் தெரிந்து கொண்டாள். லுதிமிலா சொன்ன ஆள் இவன்தான் என்று தெரிந்ததும், "ஆமாம்" என்றாள்.

அவன், தான் கொண்டு வந்திருந்த மஞ்சள் நிறப் பையை அன்னையின் அருகில் வைத்தான். ஒரு சிகரெட் பற்ற வைத்தான். மீண்டும் ஒருமுறை சுற்று முற்றும் பார்த்துவிட்டு, ஒன்றும் பேசாமல் வெளியே சென்று விட்டான்.

அன்னை, கையில் பையை எடுத்துக் கொண்டாள். அது கனமில்லாமல் இருந்தது. அங்கிருந்து டிக்கட் வாங்குமிடத்திற்குச் சென்றாள். அப்போது ஒருவன் எதிரில் மோதிக்கொண்டு அப்பால் போனான். அன்னை அவனை உற்று நோக்கினாள். அவனும் அன்னையை, ஒரு கண்ணால் ஊடுருவிப் பார்த்தான். அவன் பார்வை அன்னைக்குச் சந்தேகத்தைக் கொடுத்தது. அதே சமயம், அவனை எங்கோ பார்த்தது நினைவுக்கு வந்தது. 'எங்கே பார்த்திருக்கிறோம்' என்று யோசித்துக் கொண்டே, டிக்கட் வாங்குமிடத்திற்கு அருகில் உள்ள பெஞ்சியின் மீது உட்கார்ந்தாள். ஒருமுறை ரிபினைக் கைது செய்த போதும், மற்றொரு முறை நீதிமன்றத்திலும் அவனைப் பார்த்தது நினைவுக்கு வந்தது.

அன்னையின் மார்பு படபடத்தது. அவன் ஒரு ஒற்றன் என்பது, அவளுக்குத் தெரியும். 'இனி என்ன செய்வது? இனி என்ன நடக்கும்?' என்று அவள் மனதில் கேள்வி

கள் எழுந்தன. 'போலீஸ் அதிகாரிகள் தன்னை அடித்துத் துன்புறுத்தாமல் இருக்க வேண்டுமே' என எண்ணினாள். ஆனால் மறுகணமே, துணிந்த பின் என்ன செய்ய இருக்கிறது? எதுவந்தாலும் பார்த்துக் கொள்ளலாம் என்று மனதைத் திடப்படுத்திக் கொண்டாள்.

சிறிது நேரம் கழித்து, ஒரு ரயில்வே காவலாளி வந்தான். அப்பொழுது ஒற்றனும் அங்கு வந்து சேர்ந்தான். அன்னையைச் சுட்டிக் காட்டி, 'திருடி' என்றான்.

ஜனங்களும் காவலாளியும் அவளையே பார்த்தனர். "நான் திருடி அல்ல! அவன்தான் ஒற்றன்" என்று அவனைக் காட்டினாள் அன்னை.

ஜனங்கள் கூடிவிட்டனர். "நான் திருடி அல்ல. நேற்று ராஜீயக் கைதிகளின் விசாரணை நடைபெற்றது; கைதிகளில் ஒருவன் என் மகன் பவல். அவன் நீதி மன்றத்திலே நிகழ்த்திய பேச்சு என்னிடம் இருக்கிறது. இதோ பாருங்கள்" என்று உரத்த குரலில் சொல்லி, பையிலிருந்த பிரசுரங்களை எடுத்து ஒருவனிடம் ஒன்றைக் கொடுத்தாள். அதைத் தொடர்ந்து ஜனங்கள் அவளிட மிருந்த பிரசுரங்கள் அனைத்தையும் பெற்றுக் கொண் டார்கள்.

"என் மகன் தண்டிக்கப்பட்டான். அவனது பேச்சு எங்கும் பரவ வேண்டும் என நான் எண்ணி னேன். ஒரு தாயின் உள்ளம் உங்களுக்கு நன்றாகத் தெரியும்."

ஜனங்கள் அவளைச் சூழ்ந்து கொண்டனர்.

"வறுமை, பசி, வியாதி இவைதான் ஏழை ஜனங் களுக்குக் கிடைக்கின்றன; அவைதான் சகல விஷயங்

களும் நமக்கு எதிராக நடைபெறுகின்றன. பணக்காரர்கள், அதிகமாக நம்மைக் கசக்கிப் பிழிந்து உண்டு உறங்குகிருர்கள். ஏழைகளான நாம், எதற்கும் பயந்து சாக வேண்டியதிருக்கிறது. இந்த இழிவான நிலைமைப் போக்கவே நாங்கள் உழைக்கிறோம். பலர் இதைத் தெரிந்து கொண்டு விட்டனர். உண்மை தெரிந்ததும், சர்க்காரும் பணக்காரர்களும் கோபம் அடைகின்றனர். பாமர மக்களை அடக்கி ஒடுக்க முற்படுகின்றனர். காலா காலமாக உறிஞ்சப்பட்டு வந்த ரத்தம், வறண்டு போவதை அவர்கள் விரும்பவில்லை. இந்த உண்மையை நம்மில் தெரிந்து கொண்டவர்கள் சிலர்தான். ஆனாலும் அவர்களுடைய எண்ணிக்கை விரைவில் அதிகரித்துவிடும். ஒருநாள் இந்த உலகமே விழித்தெழும். பாமர மக்களின் துயரங்கள் ஒழியும் நாள் வெகு தூரத்தில் இல்லை" என்ருள்.

இதற்குள் போலீஸ் அதிகாரிகரிகள் பலர் வந்தனர். கூட்டத்தை விலக்கினர். முரட்டுத்தனமாக ஜனங்களை அடித்தார்கள்.

"உண்மையில் இதுதாஞ இருந்தது?" எனக் கூட்டத்திலிருந்து ஒருவன் கேட்டான்.

"ஆமாம் என் மகனின் 'வாசகம்'. ஒரு உண்மை யான தொழிலாளியின் வார்த்தை; ஜனங்களே ஒன்று படுங்கள்; அடக்கு முறையை எதிர்த்துப் போராடுங்கள்" என்ருள் அன்னை.

"சீ வாயை மூடு" என முரட்டுப் போலீஸ்காரன் ஒருவன் அவள் கழுத்தைப் பிடித்து நெட்டினுன்.

"ஜனங்களே, பயப்படாதீர்கள். இன்னும் அதிக மாக அடக்குமுறை தர்பார் நடைபெறும். எவ்வளவோ பேர் இந்த அடக்குமுறைக்குப் பலியாயிருக்கிருர்கள்."

"வாயை மூடுகிருயா இல்லையா ?" என்று போலீஸ்காரன் அவள் வாயில் முஷ்டியால் குத்தினுன். வாயிலிருந்து ரத்தம் பீரிட்டது. அந்தச் சமயம் ஒற்றனும் வந்து, 'கிழமே பேசாமல் நட' என்று அவனும் அடித்தான்.

"ஒருவனைக் கொன்று விடலாம். ஆனுல் உண்மையை மறைத்துவிட முடியாது."

அன்னையின் கழுத்தைப் பிடித்துத் தள்ளிக்கொண்டே வந்தார்கள். அடித்தார்கள். ரத்தம் வாயிலிருந்தும், மூக்கிலிருந்தும் வெள்ளமாகப் பெருகிற்று.

"உங்களால் ஜனங்களின் எழுச்சியை அடக்கவே முடியாது."

போலீஸ்காரன் பலமாக அடித்தான். மயக்கமுற்ற நிலையில் கீழே சாய்ந்தாள் அன்னை.



# புகழ்பெற்ற நாவல் வரிசை



**பெண் வாழ்க்கை :** ஒரு பெண் தன் கணவனிடத்திலும், மகனிடத்திலும் அன்பும் பிரியமும் கொண்டு வாழ்க்கையில் எவ்வளவு தூரம் போராடுகின்றாள் என்பதைச் சித்திரிக்கிறது. மாப்பஸானின் முழு நாவல் தமிழில் முதல் முறையாக வெளிவருகிறது.

**அன்று கிரிவிறை :** நெறி தவறிய ஒருத்தியின் சோகச் சித்திரம். அவள்மீது வெறுப்புக் கொள்வதற்குப் பதிலாக அனுதாபம் கொள்ளும்படி செய்துவிடுகிறார் ஆசிரியர் டால்ஸ்டாய், தம்முடைய திறமையான எழுத்து வன்மையால்.

**மேடம் பவாரி :** மண வாழ்க்கையில் அதிருப்தி கொண்டு கடமைகளை மறந்து காதலுக்காகவும், சரீர இச்சைக்காகவும் ஏங்கித் திரிந்த ஒரு அபலையின் உணர்ச்சி மிகுந்த சோக சித்திரம்.

**குற்றமும் தண்டனையும் :** குற்றம் செய்தவனுக்குத் தண்டனை நிச்சயம் உண்டு என்பதை விளக்கும் மனத்தத்துவ நாவல். ஆசிரியர் : டாஸ்டாவ்ஸ்கி.

**நாநா :** உலகின் உல்லாஸ புரியான பாரீஸ் நகரில் அழகின் மூலம் பலரை அடிமை கொண்ட நடிகையின் சித்திரம்.

தமிழாக்கம் : **முல்லை முத்தையா.**